# கல்கி

KALKI 11.4.93 ரூ. 3.00



தன்னம்பிக்கைச் சிறப்பிதழ்

# இனி இருள் இல்லை

எனக்கொரு வானம்; ஒளிதரும் நிலவு;
மினுக்கிடும் கோடி தாரகைகள்!
கடித்துத் தூக்கம் கலைத்த கொசுவே!
எனக்கொன்றும் கவலை இல்லை போ!

எனக்கொரு கங்கை; அதிலொரு ஓடம்;
பயணம் போகையில் ஒரு பாடல்...
நிற்காமல் பறந்த பல்லவன் பஸ்ஸே!
நிந்திக்க மாட்டேன், நமஸ்காரம்!

எனக்கொரு இதயம் வாசல் திறந்து
மைவிழி பூத்து வரும்வழி பார்க்கும்...
காதல் சிற்பம் உடைத்து எறிந்த
அழகு ராட்சஸியே! அழமாட்டேன் இனி!

எனக்கொரு பதவி உதவிடப் பணியாள்
எட்டாம் மாடி ஏ.ஸி. அறைக்குள்...
வேலைக்கு அலைந்த கால்களின் பலம்
இனி கரங்களும்பெறும், நிமிர்ந்து நில்!

எனக்கொரு மைதானம்... வெற்றிக் கோட்டினைப்
புயலாய்க் கடந்து பதக்கம் ஜெயித்தேன்...
வீழ்ந்த போது பரிகாசம் செய்தவனே!
எங்கே எழுந்து நின்று கைதட்டு!

- வசீகரன்

வாசகர்களுக்குப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

தன்னம்பிக்கைச் சிறப்பிதழ் தயாரிப்பு :
டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



# வெற்றி நூலாசிரியரின் வெற்றிக் கதை!



அறுபது வருடங்களுக்கு முன்பு அலுவலகம் ஒன்றில் எடுபிடிப் பையனாக வேலை பார்த்தவர் காப்மேயர். மாதச் சம்பளம் வெறும் நாற்பத்தைந்து டாலர். ''நாம் எத்தனை நாளுக்கு இப்படியே இருப்பது?'' என்று அடிக்கடி தன்னைத்தானே கேட்டுக் கொள்வார். பெரும்பாலான மக்களைப் போல, கடன் வாங்குவதிலும், அதைத் திருப்பித் தருவதிலோ அல்லது, திருப்பித் தருவதற்காகக் கஷ்டப்படுவதிலோ வாழ்க்கையைக் கழித்து விடாமல், நிச்சயம் வெற்றி பெறுவதற்கான வழிகளைக் கற்றுக் கொள்ள வேண்டும்'' என்பதே அவருடைய லட்சியமாக இருந்தது.



இன்று.....

எம்.ஆர். காப்மேயர் சுய முன்னேற்ற நூல்கள் படைக்கும் உலகப் புகழ் பெற்ற அமெரிக்க எழுத்தாளர். எட்டு வர்த்தகக் கார்ப்பரேஷன்களின் தலைமைப் பதவியில் இருந்தபின் ஓய்வு பெற்றவர். நூற்றுக்கும் அதிகமான நிறுவனங்களுக்கு இவர் நிர்வாக ஆலோசனைகள் வழங்குபவர். சர்வதேச அளவில் புகழ்பெற்ற புத்தக வெளியீட்டாளர். அமெரிக்காவின் உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்துடன் அமெரிக்க ஜனாதிபதி அமைத்த குழுவின் உறுப்பினர்.

இந்த நிலையை அவர் எப்படி அடைந்தார்...?

அந்தக் காலத்தில், வாழ்க்கையில் வெற்றி பெறுவது எப்படி என்று முழுமையாய் ஆராய்ச்சி செய்தவர்கள் யாருமில்லை. அப்படிச் சொல்லித் தரும் புத்தகங்களுமில்லை. காப்மேயர் அறிந்த சாதனையாளர்கள் இருவர். ஒருவர், ஜான் ராக்ஃபெல்லர். வாரத்துக்கு ஆறு டாலர் சம்பளத்தில் வாழ்க்கையைத் துவக்கிய இவர், வருமானத்தில் பாதியை முதலீடு செய்தார். அதிலிருந்து வந்த வருவாயை மீண்டும் முதலீடு செய்தார். அதுதான் ராக்ஃபெல்லரின் ரகசியம். இதைத் தாமும் கடைப்பிடிப்பது என்று தீர்மானித்தார் காப்மேயர்.

இன்னொருவர் தாமஸ் ஆல்வா எடிசன். அவர் வாழ்க்கையைப் படித்ததன் மூலம் காப்மேயர் கற்றுக் கொண்ட பாடம் : தோல்விகள் மூலமாகவே வெற்றிகளைத் தேடிக் கொள்ள முடியும். தொடர்ச்சியான தோல்விகளுக்குப் பிறகு எடிசன் உற்சாகத்தோடு கூறினார், ''சரிப்பட்டு வராத ஆயிரம் விஷயங்களை நான் இப்போது தெரிந்து கொண்டிருக்கிறேன். அதனால் எது சரிப்பட்டு வரும் என்பதை நெருங்கி விட்டேன்.'' எடிசன் மொத்தம் 1093 கண்டுபிடிப்புகளுக்குச் சொந்தக்காரர்!

''உலகத்தின் மதங்கள்; தத்துவங்கள், சான்றோர்களின் உபதேசங்கள் ஆகியவற்றில் வாழ்க்கையில் வெற்றிகளைக் குவிப்பது எப்படி என்ற ரகசியங்கள் பொதிந்துள்ளன. அவற்றையெல்லாம் படித்து, நான் அவற்றுக்குச் செயல் வடிவம் அளித்தேன். வாழ்க்கையில் வெற்றியும் பெற்றேன். அந்த வழிகளைத் தொகுத்துக் கொடுப்பது என்பது மிகவும் கடினமான வேலைதான் என்றாலும், உலகத்துக்கு அவசியமான வேலை. அதைத்தான் நான் செய்தேன்'' என்று தம் எழுத்துப் பணியைப் பற்றிச் சொல்கிறார் காப்மேயர்.

இத்தனைக்கும் காப்மேயர் சிறுவனாக இருந்த போது, திக்கித் திக்கிப் பேசுவார். பதினேழு வயது வரை இது நீடித்தது.

''அந்தக் காலத்தில், திக்குவாய்க்குச் சிகிச்சை முறை ஏதுமில்லை. அதற்கான சிகிச்சை முறைகளை நானே ஆராய்ந்து கண்டுபிடித்தேன். இதனால் என்னால் சரளமாய்ப் பேச முடிந்தது. ரேடியோவில் பேசினேன். நாடு முழுக்கப் பல ஊர்களுக்கும் போய் பிரசங்கங்கள் செய்தேன். 'சிறப்பாகப் பேசுவது எப்படி' என்று மற்றவர்களுக்குப் பயிற்சியளித்தேன்'' என்கிறார் காப்மேயர்.

காப்மேயர் எழுதியவற்றுள், நிரூபிக்கப்பட்ட வெற்றி முறைகள் என அங்கீகாரம் பெற்றவை நான்கு புத்தகங்கள். அவை : 1. செல்வந்தர் ஆவது எப்படி? 2. இதோ உதவி, 3. நீங்கள் விரும்புவது எதுவானாலும் அதை அடைவது எப்படி?, 4. எண்ணங்களை மேம்படுத்துங்கள்.

இந்த ஆங்கிலப் புத்தகங்களின் தமிழ் மொழிபெயர்ப்புகளும் வெளியாகியுள்ளன. காப்மேயரின் அனுமதி பெற்றுத் தமிழில் வெளியிட்டுள்ளவர் காந்தி கண்ணதாசன் (கண்ணதாசன் பதிப்பகம்).

– மௌலஷ்மி

# சிந்தனை+சிக்கனம்+ உழைப்பு=செழிப்பு!



“இரண்டு ஏக்கர் நிலம். அதுவும் மானாவாரி. என் வருட வருமானமே அப்போது சுமார் நாலாயிரம் ரூபாய்தான் இருக்கும். அதாவது மாதத்துக்கு நானூறு ரூபாய்க்கும் குறைவு. ஆனாலும் நான் தன்னம்பிக்கை இழந்து விடவில்லை!'' என்று ஆரம்பிக்கிறார் செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டத்தைச் சேர்ந்த எம். சரவணன்.

''அதிகப்படியாய் நிலம் வாங்கவும் முடியாது; அப்படியே வாங்கினாலும், மறுபடியும் வானம் பார்த்த பூமியில் பெரிசாய் என்ன மகசூல் பார்த்து விட முடியும்?

''தீவிரமாய் யோசித்துப் பார்த்தேன். இந்த விவசாயத்துடன் கூடவே இன்னும் ஏதாவது ஒரு தொழிலைச் செய்தால், வாழ்க்கையில் நிச்சயம் முன்னேற முடியும் என்று நான் உறுதியாய் நம்பினேன். அப்போது எனக்கு ஏற்பட்ட எண்ணம்தான் கோழிப் பண்ணை வைப்பது. உடனே இந்தியன் வங்கியின் பள்ளிப்பட்டு கிளையின் உதவியை நாடினேன். என் கோழிப் பண்ணை ஆரம்பிக்கிற திட்டம் பற்றிக் கூறினேன்.

''முன் அனுபவம் உண்டா?' என்று கேட்டார்கள். வீட்டில் எப்போதும், ஒன்றிரண்டு கோழி வளர்த்து வருவோமே தவிர, பெரிய அளவில் கோழிப் பண்ணை நடத்தியதில்லை. ஆனாலும் 'வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்பது என் லட்சியம். அதற்காகக் கடுமையாய் உழைக்க நான் தயாராக இருக்கிறேன். எனக்குக் கடனுதவி செய்யுங்கள்!' என்று கேட்டேன்.

''கடன் சாங்ஷன் ஆனது. என் வீட்டு மாடியிலேயே ஐந்நூறு பறவைகள் கொண்ட ஒரு கோழிப் பண்ணையைத் துவக்கினேன். விவசாய வேலைகளுடன் கோழிப் பண்ணை பராமரிப்பும் சேர்ந்து கொண்டதால் எனக்கு வேலைப் பளு அதிகரித்தது. ஆனாலும் நான் உழைக்கத் தயங்கவில்லை. ஆரம்பித்த சில மாதங்களிலேயே நான் பலனை உணரத் துவங்கினேன். ஆண்டுக்கு ரூ 3500 வரை கூடுதலாய் வருமானம் கிடைத்தது. வருமானம் பெருகினாலும் நான் சிக்கனத்தைக்

**நான் உழைக்கத் தயங்கவில்லை. ஆரம்பித்த சில மாதங்களிலேயே நான் பலனை உணரத் துவங்கினேன். ஆண்டுக்கு ரூ. 3500 வரை கூடுதலாய் வருமானம் கிடைத்தது.**



# போட்டி முடிவு: 'சுலபமாக்கப்பட்ட சொல் விளையாட்டு'

இதற்கு முந்தைய சொல் விளையாட்டில் ஒருவர் மட்டுமே நூற்றுக்கு நூறு மார்க் பெற்றார் எனில், சுலபமாக்கப்பட்ட இந்தச் சொல் விளையாட்டில் அனைத்து விடைகளையும் சரியாக எழுதி வெற்றி பெற்றவர் இருவர் மட்டுமே. ரூ. 250/- பரிசுத் தொகையைச் சமமாகப் பகிர்ந்து கொள்பவர்கள் :

1. மு. மதிவாணன்,
303, மாரியம்மன் கோயில் தெரு,
அரூர் - 636 903.

2. வி. குமார்,
1/56, தனிப்பாடி சாலை,
தண்டராம்பேட்டை (அஞ்சல்)
செங்கம் வட்டம் - 606 707.

சரியான விடை :

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ■ | 1 வ | டி | 2 வ | மா | 3 தீ | ய | ■ | 4 இ | து | 5 ப | ட | 6 ம |
| ■ | கு | ■ | ர | ■ | ரு | ■ | ■ | து | ■ | ல | ■ | றி |
| 7 ப | ங் | க் | ளா | தே | ஷ் | ■ | 8 வி | வே | க | ம | ன் | ஞ |
| ■ | வ | ■ | ற் | ■ | த | ■ | ■ | தா | ■ | ரி | ■ | ச் |
| 9 உ | ரு | க் | கி | ■ | 10 வ | லை | 11 யா | ளர் | து | ம் | வி | சி |
| ■ | க | ■ | ஜோ | ■ | ப | ■ | வ | ■ | ■ | தா | ■ | னை |
| ■ | 12 வி | 13 ட | மீ | பூ | ண் | டி | ரு | ந் | 14 கு | வி | 15 ஷெ | ■ |
| 16 கு | ■ | மா | ■ | ■ | மு | ■ | கு | ■ | சி | ■ | வ | ■ |
| 17 கு | ம | ரி | ன் | 18 ந | கை | க் | கு | ■ | 19 மூ | ந் | தி | ய |
| தி | ■ | ஜெ | ■ | வீ | ■ | ■ | மா | ■ | ன் | ■ | கை | ■ |
| 20 அ | ளா | வி | ரு | ன் | ஜு | ■ | 21 க | ல் | மு | னை | யி | ல் |
| கை | ■ | ட | ■ | றா | ■ | ■ | ஓ | ■ | ன் | ■ | னா | ■ |
| 22 ய | ம | னி | தா | ன் | ■ | 23 வ | ரு | மீ | பு | ய | ல் | ■ |

கைவிடவில்லை. வங்கியிலேயே என் அதிகப்படியான வருவாயைச் சேமிக்கத் துவங்கினேன். நாணயமானவன் என்கிற நற்பெயரையும் பெற்றேன்.

“சேமிப்பு, நண்பர்களிடம் வாங்கிய கடன், இவற்றைக் கொண்டு, 1974-ல் என் வீட்டுக் கொல்லையில் ஆயிரம் கோழிகள் கொண்ட பண்ணையாக விஸ்தரித்தேன். இந்தச் சமயத்தில் என் மகளுடைய திருமணச் செலவும் சேர்ந்து கொண்டது. என்ன செய்வது? மறுபடியும் இந்தியன் வங்கிக்குச் சென்று, என் நிலைமையைக் கூறினேன். மீண்டும் கடன் கிடைத்தது.

“என்னுடைய உழைப்பையும் வாழ்க்கை முன்னேற்றத்தையும் கண்கூடாய்க் கண்ட வங்கி மீண்டும் தானாகவே கடனுதவி செய்ய முன்வந்தது. எனவே தனியாய்ச் சிறிது நிலம் வாங்கி, 2000 கோழிகள் கொண்ட பண்ணை ஒன்றைத் துவக்கினேன். சலிக்காத உழைப்புதான் என் ஒரே மந்திரம். அதன்பின், என் வருமானம் பெருகிப் பெருகி, ஆண்டுக்கு ஐம்பதாயிரம் என்கிற அளவை எட்டியது. என்னுடைய இரண்டாவது மகளையும் நல்லபடியாய்த் திருமணம் செய்து கொடுத்தேன். புண்ணியம் என்கிற இடத்தில், இரண்டு ஏக்கர் நிலம் வாங்கி, இரண்டு ஷெட்களில் நாலாயிரம் கோழிகள் கொண்ட பண்ணையொன்றை ஆரம்பித்தேன்.

“இப்போது வங்கிக் கடனாகக் கிடைத்தது ஒண்ணே முக்கால் லட்ச ரூபாய் மட்டுமின்றி, கோழிப் பண்ணை பற்றிய விஞ்ஞான ரீதியான புதிய அணுகு முறைகள். என்னுடைய கோழிப் பண்ணை இப்போது பதினாயிரம் கோழிகள் கொண்ட பிரம்மாண்டமான ஒன்று. இதற்காக வழங்கப்பட்டுள்ள வங்கி நிதியுதவி பத்து லட்சம் ரூபாய்.

“மிக அதிக எண்ணிக்கையில் கோழிகள் இருப்பதால், அவற்றின் கழிவுகளைப் பயன்படுத்தி, சாண எரிவாயுக் கலம் அமைக்கும் முயற்சியில் 'நபார்டு' வங்கியின் உதவியுடன் ஈடுபட்டுள்ளேன். இது மிகவும் புதுமையான ஒரு முயற்சி.”

கட்டுரை : எஸ். சந்திரமௌலி

# வானதியின் புதிய வெளியீடுகள்
## இலக்கியம், சமயம், கட்டுரைகள், அறிவியல், வரலாறு

| | ரூ.பை |
|---|---|
| **கல்கி -** மாந்தருக்குள் | |
| ஒரு தெய்வம் பாகம் - 1 | 47.00 |
| **கல்கி -** மாந்தருக்குள் | |
| ஒரு தெய்வம் பாகம் - 2 | 40.00 |
| **மா.சேசையா -** உலக ஒளி விளக்குகள் | 16.00 |
| **சுவாமி சச்சிதானந்தா விளக்கவுரை -** | |
| பதஞ்சலியோகம் | 125.00 |
| **டாக்டர். ராதா தியாகராஜன் -** | |
| சைவமும் தமிழும் | 18.00 |
| **டாக்டர். ராதா தியாகராஜன் -** | |
| அகத்தில் மகளிர் | 22.00 |
| **குமரி அனந்தன் -** இத்தரையில் | |
| முத்திரை பதித்தோர் | 37.00 |
| **திருமுருக கிருபானந்த வாரியார் -** வாரியார் | |
| வழங்கும் கட்டுரைச் செல்வம் | 25.00 |
| **ஏ. சுவாமிநாதன் -** ஸ்ரீ ஜயேந்திரர் | |
| பதிலளிக்கிறார் | 17.00 |
| **எஸ்.எஸ்.எஸ். -** இந்துமதம் | |
| பதிலளிக்கிறது | 40.00 |
| **எஸ்.எஸ்.எஸ். -** இசைவழியே | |
| இறையருள் பெற்றவர்கள் | 40.00 |
| **மணியன், எஸ்.எஸ்.எஸ். -** பொன்னி | |
| நதிக்கரையில் புனித ஆலயங்கள் | 30.00 |
| **மு.மு.இஸ்மாயில் -** வள்ளலின் வள்ளல் | 28.00 |
| **மு.மு.இஸ்மாயில் -** ஒரு மறக்க | |
| முடியாத அனுபவம் | 35.00 |
| **முனைவர் சுந்தரசண்முகனார் -** | |
| பாலகாண்டப் பைம்பொழில் | 25.00 |
| **முனைவர் சுந்தரசண்முகனார் -** | |
| கிஷ்கிந்தா காண்டத் திறனாய்வு | 35.00 |
| **முனைவர் சுந்தரசண்முகனார் -** | |
| சிலம்போ சிலம்பு | 54.00 |
| **த. இராமலிங்கம் -** | |
| வாமதித்த புலவரியே | 20.00 |
| **முரு.பழ. இரத்தினம் செட்டியார் -** | |
| கம்பன் உணர்த்தும் பரம்பொருள் நிலை | 15.00 |
| **சரோஜினி செல்லக் கிருஷ்ணன் -** | |
| கம்பன் கருத்துக் களஞ்சியம் | 25.00 |
| **உரையாசிரியர் டாக்டர்.** | |
| **ரா. இராசகோபாலாச்சாரியார்** | |
| கம்பரின் ஐந்து நூல்கள் - மூலமும் | |
| தெளிவுரையும் | 30.00 |
| **மு. சாயபு மரைக்காயர், சா. நசீமா பானு** | |
| இவர்கள் இன்று சந்தித்தால் | 9.00 |

| | ரூ.பை |
|---|---|
| **எஸ். கே. ராமராஜன் -** ஆழ்வார்களும் | |
| கம்பனும் | 20.00 |
| **கி.சா. ராஜு -** | |
| நிகழ்ச்சிகள் நினைவுகள் | 15.00 |
| **கி.சா. ராஜு -** நாமிருக்கும் நாடு | 22.00 |
| **பொன். பரமகுரு -** | |
| நான் கண்ட சித்தர்கள் | 40.00 |
| **ஜெமினி எழில்மணி -** | |
| அன்னை பாலாவின் அற்புதங்கள் | 10.00 |
| **ஜெமினி எழில்மணி -** | |
| தெய்வப் பாமாலை | 15.00 |
| **டாக்டர். நா. மகாலிங்கம் -** | |
| மனிதன் ஏழை மனிதனா? | 37.00 |
| **டாக்டர். நா. மகாலிங்கம் -** | |
| நிர்வாக விஞ்ஞானம் | 37.00 |
| **சுந்தர ராமசாமி -** ந. பிச்சமூர்த்தியின் | |
| கலை-மரபும் மனித நேயமும் | 20.00 |
| **என். சி. ஸ்ரீதரன் -** | |
| எடுத்த காரியம் யாவிலும் வெற்றி | 20.00 |
| **இளம்குமார் -** | |
| மௌனியுடன் கொஞ்ச தூரம் | 12.00 |
| **தமிழ்ப்பித்தன் -** | |
| கல்வித் தமிழ்ப் பாட்டுக்கு | |
| கண்ணதாசன் | 24.00 |
| **சிவசங்கரி -** | |
| புதிய கோணங்கள் | 20.00 |
| **குரும்பூர் குப்புசாமி -** | |
| கல்கத்தா (பயண நூல்) | 18.00 |
| **குரும்பூர் குப்புசாமி -** | |
| பாரிசில் ஒரு பட்டிக்காட்டான் | |
| (பயண நூல்) | 42.00 |
| **சிவபாத சுந்தரம் -** | |
| கௌதம புத்தர் அடிச்சுவட்டில் | 55.00 |
| **க.ரா. -** | |
| இசை வானில் இளைய தலைமுறை | 22.00 |
| **Dr. திருமதி. சரஸ்வதி இராமநாதன் -** | |
| நாதஜோதி ஸ்ரீமுத்து ஸ்வாமி | |
| தீக்ஷிதர் தரிசனம் | 10.00 |
| **Dr. திருமதி. சரஸ்வதி இராமநாதன் -** | |
| கம்பனும் கண்ணதாசனும் | 15.00 |
| **அறு. அழகப்பன் -** | |
| புதுநானூறு 2-ம் தொகுதி | 40.00 |
| **திரு. சம்பந்தம் -** | |
| வடலூர் ராமலிங்க சுவாமிகள் | 12.00 |

☐ தேவையான பிரதிகளை வி.பி.பியில் பெற கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. தபால் செலவு தனி.

**வானதி பதிப்பகம்,**



தபால் பெட்டி எண் : 6151
13, தீனதயாளு தெரு, தி. நகர்.,
சென்னை - 600 017.

# “ஜெயித்தே தீருவோம்!”



**கேவலம் உடல் ஊனத்திற்காக இத்தனை துக்கப்படுவதா? நாமே சோர்ந்து விட்டால், அந்தக் குழந்தைகளுக்கு யார் ஆறுதல் சொல்வது? யார் உத்வேகம் அளிப்பது? துவண்டு விழுந்து என்ன பிரயோஜனம்? இனி எழுவேன்... என் குழந்தைகளை வீறு கொள்ளச் செய்வேன். ஊனம் ஒரு குறையல்ல என்று உணர வைப்பேன்...**

அவர்கள் சின்ன வயதிலிருந்தே ஒன்றாக வளர்ந்தவர்கள். உறவுக் காரர்கள். குடும்பத்தின் ஏழைமை சொல்லி மாளாது. ஒழுங்காக இரண்டு வேளை உணவு கிடைக்கும் நாள் - திருநாள்! பால்ய உழைப்பு தவிர்க்க முடியாததாகிறது. அதனால் பள்ளிப் படிப்புக்குப் பாதியிலேயே டாட்டா. செல்வ நாயகி உரம் மிக்கவர். எப்படியோ கஷ்டப்பட்டு எஸ்.எஸ்.எல்.சி. முடித்தார். நித்யானந்தத்தால் முடியவில்லை. ஆகினும் என்ன?



● மோகனா



● நித்யானந்தம்



● செல்வநாயகி

அவர் வாழ்க்கையைப் படிக்க ஆரம்பித்தார்.

பிறந்ததுமே நிச்சயித்தபடி ('71 - ல்) இருவருக்கும் திருமணமாகிறது. அடுத்த வருஷம் குழந்தை பிறக்கிறது. முதல் அடி!

பிறந்த குழந்தைக்கு பிரக்ஞை இல்லை; உணர்ச்சி இல்லை; அழத்தெரியவில்லை; அசையத் தெரியவில்லை; அம்மாவை அடையாளம் காணமுடியவில்லை....

டாக்டர்கள் உதடு பிதுக்குகிறார்கள்.

இன்றைக்குத் தன் இருபத்தோறாவது வயதில் பிறந்த குழந்தையின் மனோ நிலையிலேயே ரவி! தன்னுணர்வில்லாமல் இருக்கிறான். அவனுக்குச் சுற்றம் தெரியாது, சூழ்நிலை புரியாது. அவனுண்டு, அவனுண்டு, அவனுண்டு! அவ்வளவுதான்! மேலும்.. அவனுக்குக் கண் தெரியாது... அதுவும், பிறவியிலேயே.

சில வருட இடைவெளி.

அடுத்து ஒரு பெண் குழந்தை. கடவுள் அருளில் இந்தமுறை ஆசுவாசப் பெருமூச்சு.

மேலும் சில வருட இடைவெளி. அடுத்த பெண் குழந்தை... கண் இல்லை.

யார் இட்ட சாபம்? என்ன பாவம் செய்தார்கள்? ஏன் இந்தத் தொடர் அடி?

உறவுக்குள் திருமணம் செய்ததுதான் காரணம் என்று ஊர்க்காரர்கள் சொன்னார்கள். ஒரே ரத்தப் பிரிவுதான் காரணம் என்று டாக்டர்கள் சொன்னார்கள்.

எதுவானாலென்ன? அந்தப் பெற்றோர் தவிப்புக் கடலில் தவிக்க விடப் பட்டனர்!

நித்யானந்தத்திற்கு ஒரு சாதாரண பிரஸ்ஸில் உத்தியோகம். மிக சொற்ப சம்பளம். செல்வ நாயகியின் நெடுநாள் போராட்டத்திற்குப் பின் சென்னை DPI ல் தாற்காலிக (தினக்கூலி) பணி.

அவர் மன ஓரத்தில் சின்னதாய் ஒரு சபலம். தம் மகனின் குறை - மருத்துவத்தால் குணப்படுத்த முடியாதா?

வருகிற கொஞ்ச நஞ்ச வருவாயில் கணிசமாகச் சேகரிக்கிறார். ஆகாரத்தைக் கூடக் குறைத்துக் கொள்கிறார்.

முயற்சி... பல இடங்களில் முயற்சி. பலதரப்பட்ட முயற்சி.

நரம்பியல் மேதை டாக்டர் பி. ராமமூர்த்தி வரை சென்று பார்த்து விடுகிறார்கள். சிவப்பு சிக்னல் மாறுவதாக இல்லை.

சரி... அதுதான் இல்லை... இளையவளின் கண் திறக்கவாவது செய்ய முடியாதா? அகர்வால் என்ன, அரவிந்த் என்ன.. ம்ஹூம்!

மருந்தினால் முடியாதது மந்திரத்தால் முடியுமா? அதையும் முயன்று பார்த்து விட்டார்கள். அரச மரப் பிரதட்சிணம் முதல் அம்பத்தூர் சுவாமிகள் வரை! பலன்? பூஜ்ஜியம்!

செல்வநாயகி யோசிக்க ஆரம்பிக்கிறார். எதற்காக இத்தனை சிரமப்பட வேண்டும்? கேவலம் உடல் ஊனத்திற்காக இத்தனை துக்கப்படுவதா? நாமே சோர்ந்து விட்டால், அந்தக் குழந்தைகளுக்கு யார் ஆறுதல் சொல்வது? யார் உத்வேகம் அளிப்பது? துவண்டு விழுந்து என்ன பிரயோஜனம்? இனி எழுவேன்... என் குழந்தைகளை வீறு கொள்ளச் செய்வேன். ஊனம் ஒரு குறையல்ல என்று உணர வைப்பேன்... அவர்களின் சாதனையில், என் வேதனைகள் மறைந்து போகும்...!

தம் இரண்டு பெண்களையும் படிக்க வைக்கிறார். ஒரு வாசல் மூடினால் பிறிதொன்று திறப்பது தானே இயற்கை? புற விழி ஊனமானால் என்ன? நாகவல்லி அபாரத் திறமையுடன் படிக்க ஆரம்பிக்கிறாள். இன்று அண்ணா சாலையிலுள்ள விழியிழந்தவர் பள்ளியில் எட்டாம் வகுப்பு படிக்கும் நாகவல்லி - முதல் வகுப்பிலிருந்தே முதல் மார்க்! படிப்பு தவிர நாடகங்களில் நடிக்கிறாள். நாட்டியமாடுகிறாள்... பிற்காலத்தில் டீச்சராகியே தீருவேன் என்ற லட்சியத்தில் இருக்கிறாள்.

செல்வநாயகி - நித்யானந்தம் என்ன சொல்கிறார்கள்?

"நாங்களே ஆச்சரியப் படுகிறோம். கண் இல்லாதது அவளுக்கு ஒரு குறையாகவே இல்லை. நம் எல்லாரைப் போலவும் தான் அவளும் உணர்கிறாள். சொல்லப் போனால் அவளது ஞாபக சக்தியும், ரசிக்கும் திறனும் நம்மை விடவும் சமயங்களில் அதிகமாகவே இருக்கிறது. எல்லாவற்றையும் விட அவளுக்குச் சாதிக்க வேண்டும்.... ஏதாவது ஒரு வகையில் தன்னை வெளிப்படுத்த வேண்டும் என்ற தணியாத வெறி, சின்ன வயதிலிருந்தே இருக்கிறது. அதனால் கண் இல்லாதது அவளுக்கு ஒரு பொருட்டாகவே இல்லை. எங்களுக்கும், அது குறித்து வெகு நாள் இருந்து வந்த மனக்கஷ்டம் இப்போது சுத்தமாக இல்லை."

நினைவில்லாத ஓர் அண்ணன், விழியில்லாத ஒரு தங்கை.. இடையில் அந்தப் பெண்... ஆயிரம் குடும்பக்கஷ்டம், வறுமை, வருத்தம்... அத்தனையையும் தாண்டி செல்வநாயகி தன் இரண்டாவது மகள் மோகனாவைப் படிக்க வைக்கிறார்.

## கட்டுரை பற்றி எம்.எஸ்.யு. 'கமெண்ட்':



சோதனைகளும் சங்கடங்களும் விரட்ட, வாழ்விலே நாம் ஓடுகிறோம். ஓரளவு தான் ஓட முடிகிறது. பிறகு, "இப்படி விரட்டப்பட நான் அனுமதிக்கப் போவதில்லை" என்று தீர்மானம் செய்து கொள்கிறோம். வைராக்யம் பிறக்கிறது. "மாற்றுவேன்" என்ற வைராக்யம்.

இந்த மன மாற்றம் எப்படி ஏற்படுகிறது? பார்வையில் ஏற்பட்ட திருப்பம் தான் காரணம். ஒரே ஒரு அணுகுமுறை தான் இருக்கிறது என்று எண்ணி அதற்காகப் போராடியவர்கள் இப்போது வேறு ஒரு கோணத்தில் பார்க்க முயல்கிறார்கள். மாறுபட்ட சி' கை வழி காட்டுகிறது. இது ஒரு விஷயம்.

இரண்டாவது விஷயம், இருக்கின்ற நிலைமையை ஏற்றுக் கொள்கிறார்கள்; ஒப்புக் கொள்கிறார்கள். 'இது தான் உண்மை நிலவரம். இந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்?' என்று சிந்தித்து அதற்கேற்ப எதிர்காலத்தைத் திட்டமிடுகிறார்கள்.

வாழ்விலே பலர் தங்கள் தவறுகளை ஒப்புக் கொள்வதில்லை. இருக்கிற நிலைமையை ஏற்றுக் கொள்வதில்லை. இதன் விளைவாக மன உளைச்சல், சுய பரிதாபம், உலகின் மீதே கோபம் - இவை தாம் மிஞ்சுகின்றன.

அமெரிக்க நாட்டில் அதிகமான வீடுகளில் காணப்படும் வாசகம் இது:

"திருத்தக் கூடியவற்றை திருத்தும் துணிவைக் கொடு. திருத்த முடியாதவற்றை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தைக் கொடு. இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளும் விவேகத்தைக் கொடு."

வாழ்க்கையிலே நமக்கு சில சீட்டுகள் விழுகின்றன. மற்றும் சிலருக்கு வேறு வேறு சீட்டுகள். நமக்கு விழுந்ததை வைத்துக் கொண்டு எப்படி திறம்பட மகிழ்வுடன் வாழ்கிறோம் என்பதுதான் வாழ்க்கை. சோகத்திலிருந்து விடுபட்டு சாதனையை நோக்கிப் பயணப்படும் செல்வநாயகி - நித்யானந்தம் தம்பதிக்கு வாழ்த்துக்கள்!

## அடுத்த இதழில்....



- ஜெ. தொகுதிக்கு ஒரு விசிட்!
- மற்றும் தருமபுரி நகரச் செய்திகள்

முதன்மையான மாணவி என்கிற பாராட்டு கிடைக்கிறது. அரசாங்க ஸ்காலர்ஷிப் வருகிறது. லஞ்சம் இல்லாமல் பொறியியல் கல்லூரியில் ஸீட் கிடைக்கிறது...

இன்று காரைக்குடி அழகப்பா பொறியியல் கல்லூரியில் மோகனா எலக்ட்ரானிக்ஸ் கடைசி வருஷம் படித்துக் கொண்டிருக்கிறாள்!

எப்படி முடிந்தது?

வறுமையில் செழுமை சாத்தியம் தானா?

''மனமிருந்தால் சாத்தியம் தான்!'' என்கிறார் செல்வநாயகி.

''ஆயிரம் கஷ்டம் இருந்தால் என்ன? நமக்கென்று ஒரு வாழ்க்கை இல்லாமலா போய்விடும்? சோர்ந்து போய் உட்காருவதால் யாருக்கு என்ன லாபம்? எங்களை நாங்களே தேற்றிக் கொண்டு விட்டோம். சின்ன வயதில் எனக்கு ஏராளக் கனவுகள். அவை இனிதான் என் இரு பெண் குழந்தைகள் மூலம் நனவாக வேண்டும். அதற்காக நான் எத்தனை கஷ்டங்களையும் ஏற்கத் தயாராகி விட்டேன். கஷ்டம், துக்கம், சோகம் இவற்றின் எல்லைக் கோடு வரை சென்று பார்த்து விட்டு வந்து விட்டோம். சந்தோஷத்தின் எல்லையை மட்டும் பார்க்க முடியாமலா போய் விடும்.'' என்கிறார் செல்வநாயகி. அவர் கண்களில் சாதனையின் ஒளி!

– பா. ராகவன்.

---

என்ன ரகளை! என்ன ரகளை! தண்ணிக்காக இப்படி அடிச்சுக்கறாங்களே!

இந்த லட்சணத்துல தமிழ்நாடு அமைதிப் பூங்காவாக இருக்குன்னு சி.எம். சொல்லியிருக்காங்க!

அதுவா... குழாயடியும் சட்ட சபையும் நீங்கலா சொல்லியிருப்பாங்க!

# தன்னம்பிக்கைத் தலைவர்கள்!

கல்கி, ''தன்னம்பிக்கைச் சிறப்பிதழ்'' வெளியிடப் போகிறது என்பதை அறிந்து கொண்டதாலோ என்னவோ, அரசியல்வாதிகள் பலரும் அளப்பரிய தன்னம்பிக்கையுடன் சமீப காலமாக நடந்து கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்! உதாரணத்துக்கு நமது காங்கிரஸ் எம்.எல்.ஏக்களையே எடுத்துக் கொள்ளுங்கள். நேற்று வரை 'மாதர் குலத் திலக'மென்று முதல்வர் துதி பாடி வந்தவர்கள், இன்று அபார தன்னம்பிக்கையுடன் அவரையே எதிர்த்து திற்கி றார்கள்! இவர்களது தன்னம்பிக்கை பிரதமரிடம் எடுபடவில்லை என்பதும், அவர் இன்னமும் நாடாளுமன்ற மெஜாரிட்டிக்கு 'ஜெ'வை நம்பி இருக்கிறார் என்பதும்தான் சோகம். ஆனால் பிரதமரின் தயக்கம் இவர்களைப் பாதிக்கவில்லை. ''ஜெ' ஆளும் தகுதியை இழந்து விட்டார்'' என்றே பேசத் துணிந்து விட்டார்கள்! 'அடேயப்பா! எவ்வளவு திமிர்த் தன்னம்பிக்கை!'' என்று வியந்து போகிறோம் நாம்.

ஜெயலலிதா மட்டுமென்ன, தன்னம்பிக்கையற்றவரா? ''எனக்கு ஆளும் தகுதியை மக்கள் அளித்தார்கள்; நீ என்ன கேட்பது?'' என்று பதில் தாக்குதல் நடத்தியவர், அதே மக்களை வெகு சுலபமாக ஏமாற்றலாம் என்ற நம்பிக்கையையும் குறைவறப் பெற்றிருக்கிறார். அல்லாது போனால், ''கரசேவை நடத்த அனுமதிக்க வேண்டும்'' என்ற தமது தேசிய ஒருமைப்பாடு குழு பேச்சுக்குப் புதிய விளக்கங்கள் தந்து கொண்டிருப்பாரா? ''மசூதியை இடிக்க வேண்டும் என்று நான் எங்கே சொன்னேன்?'' என்று கேட்கிறார். நியாயம்தான். நீதிமன்றத் தடை உத்தரவை மீறி கரசேவை நடத்த ஆதரவு தந்தார் என்பதும், அதற்கு இன்றளவும் அத்வானி நன்றி தெரிவித்து வருகிறார் என்பதும், அந்தக் கரசேவைதான் மசூதி தகர்ப்பு சேவையாக உருமாறியது என்பதும் யாருக்கும் நினைவு இருக்காது என்று அவர் எண்ணுவது தன்னம்பிக்கையின் ஒரு வடிவம் தானே!

''பிரதமர் ஏன் சும்மா இருந்தார்? மசூதி இடிப்புக்கு அவர்தான் பொறுப்பு!'' என்கிறார் ஜெயலலிதா. 'கல்யாண்சிங் அரசு மசூதி பாதுகாக்கப்படும் என்று தந்த வாக்குறுதியை ஏன் காப்பாற்றவில்லை?' என்று 'ஜெ' கேட்கக்கூடாதோ? கேட்க முடியாமல் தடுப்பது கரசேவைக்கு அவர் ஆதரவு தந்து பேசிய பேச்சுதான் என்பதைத் தன்னம்பிக்கையுடன் மறைத்து விடுவார்!

முதல்வரை விடுங்கள்; கவேச்சை எம்.எல்.ஏ. தாமரைக்கனிக்கு எவ்வளவு தன்னம்பிக்கை பாருங்கள்! பண்ருட்டியை முதுகில் தட்டினாலும், எஸ். ஆர். பாலசுப்பிரமணியனின் காலை





# கல்கி

1993
ஏப்ரல் 11
மலர் : 51
இதழ் : 37
ஆங்கீரச
பங்குனி 29



தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா.
- பாரதியார்.

மிதித்தாலும், சபாநாயகர் இருப்பிடம் வரை துரத்திச் சென்று செல்வ குமாரை அடித்தாலும் நம்மைத் தட்டிக் கேட்பார் கிடையாது என்ற மகத்தான தன்னம்பிக்கை அவருக்கு! ஒருவேளை அது அவர் அணிந்துள்ள 'ஜெ' உருவம் பதித்த மோதிரம் தரும் நம்பிக்கையாகவும் இருக்கலாம். ஆக மொத்தம் எல்லாருமாகச் சேர்ந்து, சட்டசபையில் உருப்படியான விவாதம் எதுவும் நிகழாமலும், நாளொரு சண்டையும் பொழுதொரு வெளிநடப்பு மாகக் காலத்தை விரைடிப்பதிலும் தன்னம்பிக்கையோடு செயல்படத்தான் செய்கிறார்கள்!

அத்வானிக்கு உள்ள தன்னம்பிக்கை யாருக்கு வரும்? "பி.ஜே.பியுடன் உறவு இல்லை" என்று ஜெயலலிதா திட்டவட்டமாகச் சொன்னாலும் "அவர் சுந்தரிக்கோல் போட்ட இடத்தில் எனக்கு ஒட்டுத் தையல் போடத் தெரியும்" என்று நம்பிக்கையோடு கூறிக் கொண்டிருக்கிறார்!

பிரதமருடைய தன்னம்பிக்கை பற்றியோ கேட்கவே வேண்டாம். மகன் மீது குற்றச்சாட்டு, மகள் மீது குற்றச்சாட்டு, மாப்பிள்ளை மீது குற்றச்சாட்டு என்று எத்தனை குற்றச்சாட்டுக்கள் அடுக்கப்பட்டாலும் அவர் அலட்டிக் கொள்வதில்லை. இவ்வளவையும் அலுங்காமல் விழுங்கி விட்டுத் தமது கட்சிக்காரர்களையும் கட்டுக்குள் வைத்திருக்க முடியும் என்ற அவரது தன்னம்பிக்கை ஆச்சர்யமானதுதான்!

"ஜெயலலிதாவுக்கு இதோ கல்தா; நாளைக்கே அவர் அம்பேல்" என்று சொல்லிச் சொல்லியே அவரைக் கிளப்பி விட முடியும் என்று கருதும் சு. சுவாமி; இந்தி எதிர்ப்பு என்ற பழைய அத்தியாயத்தைப் புரட்டிப் படித்தால் மீண்டும் ஆட்சிக்கு வந்து விடலாம் என்று எண்ணும் கருணாநிதி - இப்படியாகத் தன்னம்பிக்கை மிக்க தலைவர்களுக்கு நம் நாட்டில் பஞ்சமே இல்லை.

ஆனால் மக்கள் மட்டும் ஏன் இவர்களிடம் நம்பிக்கை இழந்து, நாட்டின் எதிர்காலத்தை எண்ணித் தவிக்கிறார்கள் என்பதுதான் புரியாத புதிர்! ஒருவேளை டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி, புதிருக்கு விடை கூறலாம்!



# தன்னம்பிக்கை உடையவரா நீங்கள்? ஒரு பரீட்சை!

| | ஆம் | இல்லை | கொஞ்சம் கொஞ்சம் |
|---|---|---|---|
| **உடல் :** | | | |
| 1. உங்கள் தோற்றத்தைப் பற்றி அக்கறை எடுத்துக் கொள்கிறீர்களா?--- | ☐ | ☐ | ☐ |
| 2. சமப்படுத்திய சத்துணவில் கவனமாக இருக்கிறீர்களா?--- | ☐ | ☐ | ☐ |
| 3. தினந்தோறும் உடற்பயிற்சி செய்கிறீர்களா?--- | ☐ | ☐ | ☐ |
| 4. உடலுக்குப் போதுமான ஓய்வு கொடுக்கிறீர்களா?--- | ☐ | ☐ | ☐ |
| **உள்ளம் :** | | | |
| 5. தினந்தோறும் படிப்பதுண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 6. சுயமுன்னேற்ற நூல்களில் அல்லது தொழில்துறை நூல்களில் ஆர்வம் உண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 7. நட்புக்கு நேரம் எடுத்துக் கொள்வதுண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 8. பொது வாழ்விற்கு நேரம் செலவழிப்பதுண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 9. உங்கள் அறிவையும் அனுபவத்தையும் பிறருடன் பகிர்ந்து கொள்வதுண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| **உணர்வுகள் :** | | | |
| 10. எல்லாம் முடியும் என்ற நம்பிக்கை உண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 11. உங்களைப் பிறர் நம்புகிறார்களா?--- | ☐ | ☐ | ☐ |
| 12. பிறரது உணர்வுகளை மதிப்பவரா நீங்கள்?--- | ☐ | ☐ | ☐ |
| 13. காரியத்தை ஒத்திப் போடும் வழக்கம் உண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 14. பேசுகிற அளவுக்குச் செயல்பட முடியாமலிருக்கிறதா?--- | ☐ | ☐ | ☐ |
| 15. தோல்வியுற்றால் பிறர் பரிகசிப்பார்களே என்ற பயம் இருக்கிறதா?--- | ☐ | ☐ | ☐ |
| 16. என்னை விட திறமைசாலிகள் பலர் இருக்கிறார்கள் நான் சாதாரணம் என்ற எண்ணம் உண்டா?--- | ☐ | ☐ | ☐ |
| 17. நாட்டில் நிலவும் லஞ்ச ஊழல்களை யாரும் மாற்ற முடியாது என்று நினைக்கிறீர்களா?--- | ☐ | ☐ | ☐ |
| 18. நிலைமையைப் பார்த்தால் சர்வாதிகாரம்தான் நாட்டுக்கு நல்லது என்று தோன்றுகிறதா?--- | ☐ | ☐ | ☐ |
| **குடும்பம் :** | | | |
| 19. என் மனைவி/கணவன் வளர உதவுகிறேன்--- | ☐ | ☐ | ☐ |
| 20. பிறரிடத்தில் மரியாதை செலுத்துகிறேன்--- | ☐ | ☐ | ☐ |
| 21. குடும்ப விஷயங்கள் என் கைக்குள் இல்லை--- | ☐ | ☐ | ☐ |
| **குழந்தைகள் :** | | | |
| 22. குழந்தைகளை அதிக மரியாதை கொடுத்து அவர்கள் பெருமைப்படும்படி கௌரவமாக நடத்துகிறேன்.--- | ☐ | ☐ | ☐ |
| 23. நான் குழந்தைகளை நேசிப்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்.--- | ☐ | ☐ | ☐ |
| 24. குழந்தைகளுக்கு என் மீது பிரியம். அம்மா, (அப்பா) செல்லம். நான் பக்கத்திலேயே இருக்க வேண்டும்.--- | ☐ | ☐ | ☐ |
| 25. மழை, மலையை, இசையை, கலையை ரசிக்கக் கற்றுக் கொடுக்கிறேன்--- | ☐ | ☐ | ☐ |
| **ஆன்மீகம் :** | | | |
| 26. தினம் தியானம் செய்கிறேன்.--- | ☐ | ☐ | ☐ |
| 27. குடும்பத்துடன் கூட்டுப் பிரார்த்தனை செய்வதுண்டு--- | ☐ | ☐ | ☐ |
| **வாழ்க்கை :** | | | |
| 28. எனக்கு நேரம் போதவில்லை.--- | ☐ | ☐ | ☐ |
| 29. சதா வேலை அல்லது நண்பர்கள் தனிமையாக இருக்க முடிவதில்லை.--- | ☐ | ☐ | ☐ |
| 30. லட்சியம் என்று எதுவும் கிடையாது. வாழ்க்கை ஏதோ ஓடுகிறது.--- | ☐ | ☐ | ☐ |
| 31. சம்பளம் போதவில்லை. வேறு வழியும் தெரியவில்லை.--- | ☐ | ☐ | ☐ |
| 32. உலகில் வல்லான் வகுத்ததே வாய்க்கால். அது இருந்தால்தான் பணம், செல்வாக்கு, பதவி எல்லாம் கிடைக்கும்.--- | ☐ | ☐ | ☐ |
| 33. நன்கு விவாதித்தபின் நானே முடிவெடுப்பேன்--- | ☐ | ☐ | ☐ |

ஆம், இல்லை, கொஞ்சம் கொஞ்சம் என்பதில் பொருத்தமாயிருக்கும் ஒரு கட்டத்தை மட்டும் 'டிக்' செய்யவும்.

1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 19, 20, 22, 23, 25, 26, 27, 33

இந்தக் கேள்விகளுக்கு ஆம் என்று பதிலளித்தால் ஒவ்வொரு பதிலுக்கும் மூன்று மார்க். இல்லை என்றால் சைபர். கொஞ்சம் என்றால் ஒரு மார்க்.

13, 14, 15, 16, 17, 18, 21, 24, 28, 29, 30, 31, 32

இந்தக் கேள்விகளுக்கு ஆம் என்று பதிலளித்தால் சைபர் மார்க். இல்லை என்று பதிலளித்தால் மூன்று மார்க். கொஞ்சம் என்றால் ஒரு மார்க்.

உங்களைச் சரிபார்த்துக் கொள்ள 14 ம் பக்கம் புரட்டுங்கள்.

கீதாவின் உலகம் வீட்டுச் சுவர்களைத் தாண்டி விரிவடைந்தது. டெக்ஸ்டைல் ப்ரின்டிங் டிசைன்கள் வரைந்து பிரத்யேக வடிவங்களில் ஆடைகள் தயாரிக்கச் செய்து நல்ல லாபத்துக்கு விற்றார்.

# நில்- கவனி- வெற்றி கொள்!

**சா**ர்ந்திருத்தல் - கீதா வின் ரத்தத்தில் கலந்து போன விஷயம். பதினாறு வயதில் பள்ளிப் படிப்பு முடிக்காமலேயே கல்யாணம். வக்கீல் கணவர் விஸ்வநாதன். வசதி யான வாழ்க்கை, அன்பைப் பொழியும் புக்ககம்.

No Problems - இதுவே கீதாவின் ப்ராப்ளம் ஆனது! கணவர் அடிக்கடி டூர் போய் விட, தனிமை கீதாவின் சிந்தனைக்கு ஓவர் டைம் வேலை கொடுத்தது.

நான் யார்? எதற்காக இந்தப் பிறப்பு? உண்டு மகிழ்ந்து, உறங்கி எழுந்து... பொழுது விடிந்து, பொழுது போனால் இதே சக்கர வட்டம் எனக்குப் போதுமா...? நான் வாழ்வதால் சமூகத்துக்குப் பயன் வேண்டாமா? எனக்கே தலைநிமிர்வு தேவையில்லையா?

மனத்தில் ஒரு பக்கத்தில் ஓயாமல் கேள்விகளின் குடைசல். மறுபக்கமாக - அமைதியாக ஓடிக் கொண்டிருக்கும் நித்தியப்படி வாழ்க்கைக்குப் புதிய முயற்சிகளால் பாதிப்பு வருமோ? என்ற பயம்.

மிக எளிமையாய் ஆரம்பிக்கலாம் என்று முடிவு செய்தார். தமக்குத் தெரிந்த எம்ப்ராய்டரியை வேறொருவருக்குக் கற்றுத் தந்து முதல் முறையாகப் பத்து ரூபாய் சம்பாதித்தார் கீதா.

பத்து ரூபாய்! கீதாவின் வசதியான புறவாழ்க்கையில், அதனால் பெரிய மாறுதல் வந்து விடவில்லைதான். ஆனால் ''நம்மாலும் சுயமாய்ச் சம்பாதிக்க முடியும்'' என்ற நிரூபணம் கூடை கூடையாய்த் தன்னம்பிக்கை தந்தது!

''என்னைப் பொறுத்தவரை அந்தப் பத்து ரூபாய்தான் இந்த உலகிலேயே விலை மதிப்பற்றது...'' என்கிறார் கீதா விஸ்வநாதன்.

**இ**ன்று கீதா ஒரு தொழிலதிபர். 'மூவ்ஸ்' என்று அழைக்கப்படும் (Marketing Organisation of Women Entreprenurs) என்ற

## தன்னம்பிக்கையுடையவரா நீங்கள்? சரிபார்த்துக் கொள்ளுங்கள்!

எண்பதுக்கு மேல்; படு தன்னம்பிக்கை. சாதனையாளர்.

60க்கு மேல்; தன்னம்பிக்கை உள்ளவர் நீங்கள். மேலே போவீர்கள்.

40க்கு மேல்; தன்னம்பிக்கை இருக்கிறது. வளர்க்க வேண்டும்.

40க்கு கீழ்; மீண்டும் சரிபார்த்து நிறைய மார்க் பெறும் வகையில் டிக் செய்யுங்கள். தன்னம்பிக்கை வளர்ந்து விடும்!

அமைப்பின் ஸ்தாபகராகவும் அறியப்படுகிறார். எம்.பி. ஏக்களைத் தோற்கடிக்கும் வியாபாரப் பேச்சு; கருத்துத் தெளிவு; அரசாங்க நிதி நிறுவனங்களுடன் நல் உறவு; குடும்பத்திலும் மாறாத ஒட்டுறவு...

கீதா விஸ்வநாதன் தமது தனித் தன்மையை எப்படி நிலைநாட்டிக் கொண்டார்?

பத்து ரூபாய் சுயமாய்ச் சம்பாதித்த சந்தோஷம் மாறுமுன் வடநாட்டுக்குக் குடியேறியது கீதா குடும்பம். புதிய சூழலைக் கண்டு கீதா ஒதுங்கி விடவில்லை. அங்கும் எம்ப்ராய்டரி கற்பிக்கும் பணி தொடர்ந்தது. இதற்குப் பணம் பெற்றுக் கொள்வதற்குப் பதில் 'பாதிக்' முறையில் துணிகளுக்கு வர்ணமேற்றும் கலையைக் கற்றார். கேமலின் நிறுவனம் நடத்திய ஓவியப் போட்டியில் பரிசு பெற்று, ஓவிய வகுப்புகள் நடத்த அவர்களாலேயே தேர்வு செய்யப் பட்டார்!

கீதாவின் உலகம் வீட்டுச் சுவர்களைத் தாண்டி விரிவடைந்தது. டெக்ஸ்டைல் ப்ரிண்டிங் டிசைன்கள் வரைந்து பிரத்யேக வடிவங்களில் ஆடைகள் தயாரிக்கச் செய்து நல்ல லாபத்துக்கு விற்றார்.

வர்த்தகத்தின் தெளிவு சுளிவுகள் புரிய ஆரம்பித்தன. பிறருக்கு விற்கும் போது கடனுக்குக் கொடுத்தால் ஏற்படும் வட்டி நஷ்டம் பளிச்சென்று புலனாயிற்று!

'ஒருவரிடம் வாங்கி விற்பதைக் காட்டிலும் நாமே தயாரித்தால்...?' - எண்ணம் செயலாயிற்று. 'ப்ரேஸி' என்ற பெயரில் ஆடைத் தொழிற்சாலை ஆரம்பித்தார்

இதோ. உற்பத்தி பெருகி விட்டது. ஆனால் விற்பனை...?

அதுதான் முக்கால்வாசிப் பெண் முனைவோர்களைத் துவளச் செய்யும் சவால். இதோ துவளவில்லை. வெயில் மழை பாராது கடை கடையாக ஏறி இறங்கினார். திரும்பத் திரும்பக் கை விரிப்பையே கண்டும் துவளவில்லை.

நின்றார்; கவனித்தார் - தம்மைப் போலவே பல பெண் முனைவோர் களுக்கும் விற்பனையே பெரிய பிரச்னை எனத் தெரிந்தது. இவர்களை ஒன்று சேர்த் தால்...?

பெண் முனைவோர்கள் தயாரிக்கும் பொருட்களை விற்பனை செய்யவே பிரத்தி யேக அமைப்பு, இந்தியன் வங்கியின் கட னுதவியுடன் பிறந்தது.

இதோ, நின்று, கவனித்துச் சிந்தித்ததன் மூலம் தமது பிரச்னையை மட்டுமின்றி பிறரது பிரச்னைகளையும் தீர்த்துள்ளார்! மூவ்ஸ் அமைப்பு, அவ்வப்போது கண் காட்சிகள் நடத்தி, தனது அங்கத்தினர்களின் தயாரிப்புகளை விற்கவும் விளம்பரம் செய்யவும் உதவுகிறது.

இதோ விஸ்வநாதன் தமது வீட்டைத் தாமே முன்னின்று கட்டி முடித்த பெரு மிதத்தில் இன்று இருக்கிறார். எதிர் காலத் திட்டம் பற்றிக் கேட்டால் 'ஏற்று மதி' என்று பளிச்சென்று பதில் சொல் கிறார்.

மூத்த மகனின் காதல் திருமணத்தை நடத்தி, தனிக்குடித்தனம் வைக்க உதவி யுள்ளார்.

பரதநாட்டியம் கற்கும் இரண்டாவது மகனின் சினிமாவில் நடிக்கும் ஆசைக்கு ஊக்கம் அளிக்கிறார்.

பத்தாவது படிக்கும் கடைக்குட்டி மக ளுக்குச் சுதந்திரம் வழங்கியதுடன் பொறு மையுடன் செயல்படவும் கற்றுத் தந்திருக் கிறார்.

தன்னையே உணர்ந்த ஒரு பெண் ணால்தானே தன் குழந்தைகளின் தனித் தன்மையை அங்கீகரித்து, சிதைக்காமல் வளர்க்க முடியும்!

- வெ. ஸ்ரீதர்

*(அடுத்த வாரம் : மேலும் ஒரு வித்தி யாசமான வெற்றிக் கதை!)*

# தன்னம்பிக்கையின் மறுபெயர் ஆபீஸ் பையன்!

(டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியின் வீட்டு வாசல் வழியே ஒருநாள் போனதால் ஆபீஸ் பையனுக்கு ஏகப்பட்ட உற்சாகம் ஏற்பட்டு விட்டதாம். சில பல புள்ளிக ளுக்குச் சில பல யோசனைகள் சொல்லக் கிளம்பி விட்டான். நமது நிருபர் அவனிட மிருந்து பெற்ற கருத்துக்களில் சில கீழே:)

●● அர்ஜுன்சிங் : பிரதம மந்திரிக்கு எதிராகச் செய்த முயற்சி கள் தாற்காலிகமாகத் தோல்வி அடைந்துள்ளன. இதனால் மனம் தளரா மல் தன்னம்பிக்கையுடன் திகழ, ஒரு சிறு பயிற்சி செய்வது நலம் : நர சிம்மராவ் மாதிரி ஒரு பொம்மை செய்து, அதை நாற்காலியில் உட்கார்த்தி வைக்கவும். பிறகு கீழே தள்ளவும். பிறகு மறுபடி உட்கார்த்தி வைக்கவும். மறுபடி கீழே தள்ளவும். இதுபோலக் காலையில் 200 தடவையும் மாலையில் 250 தடவையும் செய்தால் மனோபீஷ்டம் நிறைவேறும். (அல்லது புஜங்கள் நல்ல வலுவடையும்.)




●● தமிழகப் போக்குவரத்துக் கழகங் களினால் நாளொன்றுக்கு நாற்பத்தைந்து லட்சம் ரூபாய் நஷ்டம் என்று உள்ளம் உடைந்திருக் கும் அமைச்சர் செங் கோட்டையனுக்கு ஒரு யோசனை : நஷ்டம் என் பதும் லாபம் என்பதும் மனத்தில்தான் இருக் கிறது. கண்ணை மூடிக் கொண்டு ஒரு பஸ்ஸைக் கற்பனை செய்து கொள் ளுங்கள். அது விடும் புகையெல்லாம் ரூபாய் நோட்டுக்களாக மாறுவது போலவும், இருக்கைகளில் தேங்காய் நாருக்குப் பதில் கரென்ஸி நோட்டுகளைப் பரப்பித் தைத்திருப்பது போலவும் மனக் கண்ணால் பாருங்கள். போக்குவரத்துக் கழகங்கள் லாபத்தைக் கொட்ட அதிக நாளாகாது.

●● கலைஞர் கருணாநிதி : உங்க ளுக்கு இதிலெல்லாம் நம்பிக்கை கிடை யாது என்றாலும், கோவை மாநாட்டுப் பந்தல் தீப்பிடித்ததைப் பார்க்கும் போது அக்னி தோஷம் இருக்குமென்று தோன்று கிறது. தினம் வருண ஜபம் செய்யுங்கள். (உங்களால் முடியாவிட்டால் அன்பழக னைச் செய்யச் சொல்லுங்கள். ஆனால் வை. கோபாலசாமியிடம் ஒப்படைக்க வேண் டாம்.) அடுத்த முறை மாநாட்டில் யாராவது பீடி, சிகரெட் பற்ற வைத்தால் கூட வருண பகவான் நீர் பொழிந்து அதை அணைத்து விடுவது நிச்சயம். (வருண ஜபம் செய் முறைக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண சாஸ்திரிகளை அணுகவும்.)

●● சுதாராணி ரகுபதி : டெல்லி - சென்னை விமானம் கடத்தப்பட்ட போது அதில் சிக்கியதால் சிறிது 'ஆடி'ப் போயி ருப்பார். அந்த அதிர்ச்சியிலிருந்து விடு பட்டு, ஆக்கபூர்வமாகத் தம் பணியைத் தொடர வேண்டுமானால், 'ஹைஜாக்ரதா' என்ற நாட்டியப் பள்ளி தொடங்க வேண் டும். அதில் ஏர்ஹோஸ்டஸ் மங்கைகளை மட்டுமே சேர்த்துக் கொண்டு, கவர்ச்சியான நாட்டியத்தின் மூலம் 'எப்படி ஹைஜாக் பேர்வழிகளை வசியப்படுத்தலாம் என்று கற்பிக்க வேண்டும்.

●● பா. ஜ. க. வை ஒருநாள் போற்றியும் மறுநாள் தூற்றியும் அறிக்கை விடும் புரட்சித் தலைவிக்குத் திடமனது தேவை. எனவே அவர், போயஸ் தோட்டத் தில் துளசிச் செடி வைத்து, தினம் ஒரு முறை பிரதட்சிணம் செய்து, மூன்று துளசி இலைகளைத் தண்ணீரில் போட்டு அருந்து வது நலம். கூடவே, இரண்டு தேவதை களையும் பிரீதி செய்யும் வகையில் அத்வானி - நரசிம்மாஷ்டக ஸ்தோத்திரம் சனிக்கிழமை காலைகளில் சொல்லலாம். (அப்படி ஒரு ஸ்தோத்திரம் இல்லை யென்றால் குன்னக்குடியை ஸ்தோத்திர இசை வாசிக்கச் சொல்லிக் கேட்க வும்.)

– அவிட்டம்

# லேக் வியு ரிசார்ட்



## முதன் முறையாக சென்னையிலே
## ஒரு சிட்டி ரிசார்ட்!

அறிமுகம் - மேலை நாட்டு உல்லாச சொத்துரிமை அடிப்படையில் அமைந்த PROPERTY TIME SHARE CONCEPT (PTS) திட்டத்தில் இரண்டு கிரவுண்ட் நிலத்தில் ஐந்து நட்சத்திர வசதியுடைய 800ச.அடி பங்களா சென்னையின் மிக அருகாமையில் உங்கள் விடுமுறைகளை களிக்க ஒரு அரிய ரிசார்ட்.



பிரத்தியேகமாக, அமைக்கப்பட்ட எங்கள் ரிசார்ட்சில் நீச்சல்குளம், உணவகம், பார் வசதி. உள்வெளி விளையாட்டு அரங்கம், ஹெல்த்கிளப், படகுதுறை, மீன்பிடித்தல், குதிரை சவாரி, குழந்தைகள் பூங்கா, நூலகம், ஓடுதளம், வழுக்குதளம், ஸ்டார் TV, STD-ISD, சமூகக்கூடம், டிரைவ்-இன்- தியேட்டர், சிறப்பு அங்காடி, வங்கி வசதி, சுய சமையல் மற்றும் போக்குவரத்து வசதி அனைத்தும் அமையப் பெற்றது. அதுமட்டுமா! இதே போல் பம்பாய், கல்கத்தா, பெங்களூர், ஹைதராபாத் ஆகிய நகரங்களில் விரைவிலேயே துவங்கவிருக்கும் எங்கள் ரிசார்ட்களுக்கும் மாற்றி அமைத்துக் கொள்ளும் வசதி.



ரூபாய் 7,000/- மட்டும் அல்லது அதன் மடங்காக செலுத்தி வருடத்தில் இரண்டு நாட்களுக்கு அல்லது அதன் மடங்காக ஒரு மதிப்பு மிக்க சொத்துக்கு உரிமையாளர் ஆகி இதன் மூலம் கோடீஸ்வரர்களுக்கு இணையாக உங்களுடைய சொத்தில் உல்லாச வாழ்க்கையை பரம்பரை பரம்பரையாக அனுபவிக்கலாம். (தவணை முறையிலும் செலுத்தும் வசதி உண்டு).



சென்னையில் இருந்து 20 நிமிட பயண தூரத்தில் பெங்களூர் நெடுஞ்சாலையில், செம்பரம்பாக்கம் ஏரிக்கரையில் 35 ஏக்கர் நிலப்பரப்பில் அரசாங்க அங்கீகாரத்துடன் (DTP No. 119/93) அமையப் பெற்றது.

**சிட்டி ரிசார்ட், அது லேக் வியு ரிசார்ட்!**

**இலவசம்!**
இரண்டு தேக்கு மரங்கள்
ரூ. 1,50,000 இருபது ஆண்டுகளில்




**நோபிள் ஹெல்த் ரிசார்ட் (பி) லிமிடெட்.**
188E, பூந்தமல்லி நெடுஞ்சாலை, கீழ்பாக்கம்,
சென்னை - 600 010.
(டெய்லர்ஸ்ரோட் பஸ் நிறுத்தம் அருகில்)
தொலைபேசி எண்கள்: 6412210, 6427197.
த.பெ.எண்: 1010, சென்னை-10.

ஏஜெண்டுகள் தேவை

**LAKE VIEW RESORT**

# மாயக்

கிருஷ்ணா டாவின்ஸி

**இதுவரை...**

சூர்யா. முன்னணி ஹீரோக்களில் முதன்மையானவன். திடீரென்று ஜுரத்தில் படுத்து இறந்து விடுகிறான். ரசிகர்கள் அதிர்ச்சியடைகிறார்கள். சூர்யாவின் இறப்புக்குக் காரணம் 'ரேபிஸ்'. அவனுக்கு எப்படி வந்தது அது? டாக்டர்களே குழம்புகிறார்கள். சூர்யாவின் இறப்புக்கு ரேபிஸ்தான் காரணம் என்றால் ரசிகர்கள் நம்புவார்களா? அதனால் திடீரென்று ஏற்பட்ட ஹார்ட் அட்டாக் என்று செய்தி கொடுக்கிறார்கள்.

போலீஸ் கமிஷனர் பத்திரிகையாளர்களிடம் சூர்யாவின் மரணம் பற்றிப் பேசும் போது, ''சூர்யாவின் மூக்கிலிருந்து ஒரு திரவம் வடிகிறதே. அது ஏன்? ஹார்ட் அட்டாக்கில் அது ஏற்படுமா?'' என்று ஓர் இளம் நிருபரின் சந்தேகக் கேள்வி கணீரென்று ஒலிக்கிறது!



அந்தக் கேள்வி கமிஷனரை ஒருகணம் தடுமாற வைத்தது. சமாளிப்பதாக நினைத்து, ''அப்படியா? நான் அதைக் கவனிக்கவில்லை'' என்றார்.

''அதனால்தான் கேட்கிறோம். டாக்டரை எங்களுடன் பேசச் சொல்லுங்கள்.''

''இதோ பாருங்கள். அதெல்லாம் அநாவசியம்.''

''முப்பது வயதில் ஹார்ட்-அட்டாக் எப்படி வரும்?''

''முப்பத்தி ஐந்து வயது.''

''ஓ.கே. அதுவும் எப்படி?''

''அவருக்கு டென்ஷன். கடின உழைப்பு. மதுப் பழக்கம் எல்லாம் உண்டு.''

கமிஷனர் 'ப்ரஸ் மீட்'டை எப்படியோ கஷ்டப்பட்டுச் சமாளித்தார். ஆனால் பத்திரிகைக்காரர்களுக்கு முழுத் திருப்தி வரவில்லை. அவர்களின் பார்வையில் சந்தேகம் இருந்தது.

போலீஸ் கமிஷனர் டெலிஃபோனைச் சுழற்றி, டாக்டர் அமானுல்லாவைத் தொடர்பு கொண்டு, ரகசியமாக, ''டாக்டர்! சூர்யாவின் மூக்கிலிருந்து ஏதோ திரவம் வடிகிறதே? என்ன அது?'' என்றார்.

''ம்யூக்கஸ்! உடனே பஞ்சு வைத்து அடைத்து விடுங்கள்.''

''சரி.''

''ப்ளீஸ், நேரம் அதிகம் கடத்த வேண்டாம்.''

மயக்கம் தெளிந்திருந்த நிலகா கோபத்துடன் நிமிர்ந்தாள். ''என்னது?''

''மேடம். அதிக நேரம் வைத்திருக்க வேண்டாம். கூட்டம் நிறைய சேர்ந்து விட்டது...''

''போங்கள். எல்லாரும் போங்கள்'' என்றாள் வெறியுடன்.

''மேடம், உங்கள் துக்கம் புரிகிறது. தயவு செய்து...''

''முடியாது. என் சூர்யாவை எதுவும் செய்யக் கூடாது. எரிக்கக் கூடாது. புதைக்கக் கூடாது. விட மாட்டேன். சூர்யாவைப் போக விட மாட்டேன்...'' தலையில் அறைந்து கொண்டு அழுதாள்.

கமிஷனர் கைகளைப் பிசைந்தார். நிலகாவின் மனநிலை புரிந்தது. ஒவ்வொரு பெண்ணின் அதிகபட்ச அதிர்ச்சி கணவனின் மறைவுதான்.

அதுவும் சூர்யாவைப் போன்ற கணவன்.

பி.ஏ. சுந்தரம் போலீஸ் கமிஷனரைப் பணிவாக அழைத்து, ''ஸார்! அவங்களை அப்படியே விட்டுடுங்க. அதிர்ச்சியில இருக்காங்க. நாமதான் சில விஷயங்களை முடிவு செய்யணும். இப்ப இருக்கிற நிலைமையில பாடியை உடனே எரிக்க முடியாது. தமிழ்நாடு முழுக்க ரசிகர்கள் வந்துக் கிட்டிருக்காங்க. வாசல்ல பாருங்க. ஒரு கடலே இருக்கு...''

அப்போது நாற்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு சிவப்பான மனிதர் அருகே வந்தார். சுந்தரம் அவரை அடையாளம் கண்டு, மெல்லிய குரலில், ''வாங்க'' என்றான்.

அவர் தாழ்ந்த குரலில், ''ஐ'ஆம் வெரி ஸாரி. வாட் எ ஸடன் டிமைஸ்!'' என்றார்.

சுந்தரம் கமிஷனரிடம், ''இவர் பேர் மனோகர். இன்ஷ்யூரன்ஸ் ஆஃபீஸர்'' என்றான்.

அவர் வணக்கம் சொன்னார். பிறகு,

''ஸார்! நான் சேர்மன் கிளப் மெம்பர். சூர்யா ஒரு லைஃப் பாலிஸி எடுத்திருக்கார். ஒரு கோடி ரூபாய்க்கு...'' என்றார்.

கமிஷனர் கேள்விக் குறியோடு பார்த்தார்.

''ஆயிரக்கணக்கில் பிரீமியம் கட்டியிருக்காரு. அன்ஃபார்சுனேட்லி, இந்த மாதிரி ஆயிடுச்சு. நாச்சுரல் டெத் தானே?''

# குதிரை



''யெஸ். ஹார்ட் ஃபெய்லியர்.''

''எங்களுக்கு ஒரு டெத் சர்டிஃபிகேட் வேணும்.''

''கொடுக்கிறோம்.''

''ஐ மீன், எங்க டாக்டர் பரிசோதிக் கணும்,'' என்றார் அவர்.

கமிஷனர் பதற்றமாக, ''அது சாத்திய மில்லை!'' என்றார்.

''ஏன் ஸார்! நாங்க மெடிக்கல் டீம் வைச்சிருக்கோம். டெஸ்ட் பண்ணாம சாங்ஷன் பண்ண முடியாது.''

''அது உங்க தலைவலி.''

''அப்புறம் அவங்க மனைவி கேஸ் போட்ருவாங்க.''



''எங்க ஊருக்குப் பாதுகாப்பு வேணுமுங்க.''

''ஊர் ஊருக்கா பாதுகாப்புக் கொடுக்க முடியாதுன்னுதானே, ஒட்டு மொத்தமா தொகுதி எம்.எல்.ஏ.க்குப் பாதுகாப்புக் கொடுத்திருக்கோம்.''

- பி.ஜி.பி. இசக்கி

''மிஸ்டர், வாட் டு யு நீட்?''

''ஸிம்பிள் ஸார்! சின்ன டெத் ரிபோர்ட். இது மெடிக்கல் பாலிஸி ஸார்! காம்ஸிகேட்டட். வி ஹாவ் காட் லீகல் ரைட்...''

''செத்துப் போனது சாதாரண ஆள் இல்லை. ஒரு பெரிய ஸ்டார்... புரியுதா?''

''ஸோ வாட்?''

''யு பீப்பிள் டோண்ட் அண்டர் ஸ்டாண்ட் எமோஷன்ஸ்.'' கமிஷனர் வெடித்தார். ''சாவு நேரத்துல என்னய்யா ஒரு கோடி ரூபாய்னுட்டு...''

''புரியுது ஸார்! எங்களுக்குன்னு சில கடமைகள் இருக்கே...''

''சரி. உங்களுக்கு என்ன வேணும்? ஒரு மெடிக்கல் சர்டிஃபிகேட். அவ்வளவு தானே? கவர்மெண்ட் டாக்டர் கொடுத்தாப் போதுமில்லை?''

''செல்லாது. எங்க டாக்டர் கொடுக் கணும்.''

''உங்க டாக்டரையே கொடுக்கச் சொல்லு.''

கமிஷனரின் 'ஒருமை', மனோகரைக் குத்தியது. தன்னுடைய நேர்ந்த கண்களால் அவரை ஊடுருவி, ''ஏன் ஸார்? சூர்யாவின் மரணத்துல ஏதாவது சந்தேகம் இருக்கா?''

''மண்ணாங்கட்டி. என்னய்யா பொல் லாத சர்டிஃபிகேட். போ! போய் கோர்ட்ல பாத்துக்கோ!''

''சரி, ஸார்! அவ்வளவுதானே? வர் றேன்.''

''நில்லுங்க. எங்கே போறீங்க?''

''எங்களுக்கு லாயர்ஸ் இருக்காங்க. சட்டரீதியா சூர்யாவோட உடலை வாங்கிக் கிறோம்.''

''மிஸ்டர் மனோகர். இப்படி வாங்க. சூர்யாவின் உடம்பை இப்ப டிஸ்டர்ப் பண்ண முடியாது. பாத்தீங்க இல்லை? எத் தனை ஜனம்! கொஞ்சம் ஸென்ஸிபிளாப் பேசுங்க..''

''இன்ஷூர்ட் அமவுண்ட் பெருசு ஸார்! அப்புறம் நாளைக்கு எங்களைத் தாளிச்சிருவாங்க.''

''உங்க சேர்மன்கிட்டே நான் பேசிக் கிறேன்.''

''வெல், அது நல்ல யோசனை. ப்ளீஸ், உடனே பேசிடுங்க...''

''கொடுங்க ஃபோன் நம்பரை'' என் றார் கமிஷனர்.

கமிஷனர் நகர்ந்த வேளையில் மனோகர் தனியாக நின்று கொண்டிருக்க, ஒரு நிருபர் அவசரமாக அருகில் வந்து, 'விஷ்' செய்து, ''எம் பேர் மணி. 'விளக்கு' பத்திரிகை நிருபர். நீங்க யாரு ஸார்?'' என் றார்.

மனோகருக்குப் பத்திரிகை சாகஸங் களைப் பற்றி அதிகம் தெரியாது. இன்னஸன்ட்டாக, ''நான் இன்ஷ்யூரன்ஸ் ஆஃபீஸர். பேரு மனோகர்'' என்றார்.

''சூர்யா இன்ஷ்யூர் பண்ணியிருக்காரா ஸார்?''

''ஆமாம். ஒரு கோடி ரூபாய்க்கு.''

''கிடைச்சிருமா?''

''எங்கே? கிட்டே போக விட மாட் டேங்கிறாங்க. நாங்க மெடிக்கலா எக்ஸாமின் பண்ணியாகணும்.''

''ஏன் ஸார் விட மாட்டேங்கறாங்க?'' என்றார் கறுகறுப்பாக.

''தெரியலை.''

''ஹார்ட்-அட்டாக் உண்மையா ஸார்?''

''தெரியலையேப்பா.''

அந்த மணி எனப்பட்ட நிருபர் சுற்று முற்றும் பார்த்துவிட்டு ரகசியமாக, ''ஸார்! இதுல நிறைய மர்மம் இருக்குங்கறாங் களே?'' என்றான்.

மனோகர் திடுக்கிட்டு, ''சே! சே!'' என்றார்.

''அப்படித்தான் பேசிக்கிறாங்க ஸார்!''

''யாரு?''

''ஜனங்க.''

''அவங்களுக்கு என்ன தெரியும்!''

அப்போது கமிஷனர் தூரே வருவது தெரிய, மணி கொஞ்சம் நகர்ந்து நின்று கொண்டார். அவர் செவிகள் தயாராக இருந்தன.

கமிஷனர் மனோகரிடம் வந்து, ''சேர் மன்கிட்டே பேசிட்டேன். உங்களை உடனே வரச் சொன்னாரு. தர் வோண்ட் பி எனி ப்ராப்ளம்'' என்றார்.

''தாங்க் யு! நான் வர்றேன் ஸார்!'' மனோகர் அங்கிருந்து விலகி நடந்தார்.

மணி சற்று நேரம் யோசித்தார். இரண்டும் இரண்டும் நான்கு என்கிற கணக்கு அவருக்கு மிகச் சுலபமாகப் புரிந்தது.

உடனே தம் அலுவலகத்திற்குக் கிளம்பினார்.










கருத்து : ரமேஷ்

அது ஒரு மாலை தினசரி. அதற்கென்று நடுநிலைமைக் கொள்கைகள் எதுவும் கிடையாது. அதன் கொள்கை வெளிச்சமெல்லாம் எத்தனை லட்சம் சர்க்குலேஷன் என்பதே. புகழ் பெற்ற மனிதர்களின் வாழ்க்கைச் சரித்திரங்களை எப்போதும் தயாராக வைத்திருக்கும். அதன் சட்ட சிக்கல்களைப் பார்த்துக் கொள்ள அட்வகேட்களைத் துடிப்பாக வைத்திருக்கிறது. அது தன்னுடைய அனுபவம் வாய்ந்த சில நிருபர்களிடம் சில கட்டளைகளைப் பிறப்பித்தது. அவர்கள் நகரமெங்கும் சில இடங்களை நோக்கிக் கிளம்பினார்கள். இடங்கள் இல்லை; மருத்துவமனைகள், பிரபலமான மருத்துவமனைகள்.

அந்த நிருபர்களுக்குச் சூரிய ஒளி புகாத இடத்திலும் புகத் தெரியும்.

டாக்டர் அமானுல்லாவின் ஸ்புட்னிக் மருத்துவமனையில் இருளப்பன் என்கிற தரை கழுவும் வேலைக்காரன் இருந்தான். அவனுக்கு இரண்டு மனைவிகள். ஐந்து குழந்தைகள். அவனுடைய சம்பளம் ஐந்நூறு ரூபாய். அவனுக்கு அவனுடைய இரண்டு மனைவிகளை மிகவும் பிடிக்கும். அவர்களை விட வாழைத் தோப் பிற்குப் பின்னால் காய்ச்சப்படும் சாராயம் பிடிக்கும். ஆனால், நிறைய செலவாகும்.

பாவம் இருளப்பன்!

காசுக்கு எங்கே போவான்?

''இந்தா இருளப்பா வைச்சுக்க.''

''இன்னாத்துக்கு துட்டு?'' என்றான் ஆசையாக.

''இதப் பாரு. ஒரு விசயம். சூர்யா இல்லை. சூர்யா? செத்துப் போய்ட்டாரே, நடிகரு...''

''ஆமாம், அவருக்கு இன்னா?''

''இங்கேதான் அட்மிட் ஆயிருந்தாராமே?'' நிருபர் திறமையாகக் கேள்வியை வீசினார்.

இருளப்பனுக்கு டாக்டர் சொன்னது ஞாபகம் வந்தது. எச்சரிக்கை! மூச்சு விடக் கூடாது. தயங்கினான். அவன் தயக்கம் நிருபரை மலர வைத்தது.

''இருளப்பா! சொன்னா துட்டு தர்றேன்.''

''தெரியாதுய்யா.''

''சரிதான். இந்தா வைச்சுக்க.''

''வேணாங்க.''

''அடப் பிடிப்பா. சொல்லு. எவ்வளவு நாளு இருந்தாரு இங்கே?''

''ரெண்டு நாளு'' என்று சொல்லி விட்டான்.

நிருபர் துடிப்பை அடக்கியபடி, ''என்ன உடம்புக்கு?'' என்றார்.

''தெரியாதே.''

''நீ பாத்தியா?''

''பாத்தேனே. வளையம் மாட்டியிருந்தாங்க கையில.''

''எந்த வார்டுல?''

''மேலே. எட்டாம் நம்பரு.''

''வேற என்ன தெரியும், சொல்லு...''

(தொடரும்)

# எதையும் தாங்கும் இதயம்

கொள்ளிடத்து வெள்ளத்தில் ஒரு மனிதன் குதிக்கத் தயாராய் இருந்தான். பாலம் மீதாக நடந்து போன பெரியவர் அவன் கையைப் பிடித்துக் கொண்டார். ''தற்கொலை செய்து கொள்வது முட்டாள் தனம்!'' என்று கோபமாகக் கூறினார்.

குதிக்க இருந்த மனிதன், ''என் கஷ்டம் உனக்கென்ன தெரியும்?'' என்று கேட்டு சாங்கோபாங்கமாகச் சொன்னான்.

அதைக் கேட்டார் பெரியவர், ''தம்பி! என் கஷ்டம் உன்னுடையதை விடப் பத்து மடங்கு அதிகம். எனவே, முதலில் நான் தான் ஆற்றில் குதிக்க வேண்டும்'' என்று குதித்தார், ஆற்றில்!

யாருக்குக் கஷ்டங்கள் இல்லை?

நெருக்கடி, பிரச்னை, துயரம், ஏமாற்றம் என்று வரும் போது ஒன்றை மறந்து விடுகிறோம்.

நமக்குள் ஒரு மகத்தான சாதனம் உள்ளே வைக்கப்பட்டு நாம் படைக்கப் பட்டிருக்கிறோம் என்பதை. மனம் என்கிற பெரிய தொழிற்சாலையில் மிக முக்கிய மான சாதனம் ஒன்றிருக்கிறது. அதற்குப் பெயர், ''எதையும் சமாளிக்கும் அமைப்பு''. அது சதா விழித்துக் கொண் டிருக்கிறது; நமக்கு உதவ எப்போதும் காத் துக் கொண்டிருக்கிறது.

அது நம் முன்னே இருக்கிறது என்று புரிந்து கொண்டோமானால் முதலில் நமக்கு தைரியம் வரும்; பிறகு அதை நாம் உபயோகிக்கத் தொடங்கி விடுவோம்.

இந்த எ.ச.இ. (எதையும் சமாளிக்கும் இயல்பு) ஏதோ மனிதர்களிடம் மட்டும் தான் இருக்கிறது என்று எண்ணி விடாதீர்கள்!

ஒரு 'ஜூவி' கொடியுடன் பேசிக் கொண் டிருந்தேன். ''என்னை நீ உன் வீட்டுத் தோட்டத்தில் நட்ட போது படர அருகில் ஒன்றுமேயில்லை. பயந்து போனேன். பிறகு என் நுனியிலும் உடம்பிலும் ஒரு பசையை உண்டுபண்ணிக் கொண்டேன். அதன் மூலம் சுவருடன் ஒட்டிக் கொண் டேன். பிறகு எளிதாக செங்குத்தான சுவரின் மீது படர்வது ஒன்றும் கஷ்டமாயில்லை'' என்று சொல்லியது.

ஒரு சமயம் மீசை வைத்திருக்கும் ஒரு விதையைப் பார்த்து ''இது என்ன வேஷம்?'' என்றேன். ''இதோ பார்! எங்கள் குடும்பம் பெரிது. எல்லா விதைகளுமே இங்கே கீழேயே விழுந்தால் எல்லோரும் வளர சூரிய ஒளி போதிய அளவு கிடைக் காது. மண்ணில் எல்லோரும் வாழ வளம் இருக்காது. தூர தேசம் போய் வாழ்ந்தால் தான் முடியும் என்று பறப்பதற்கு ஏதுவாக விதையில் பஞ்சு போல மீசையை வளர்த் துக் கொண்டோம்'' என்றது.

அமெரிக்காவில் டெலிவிஷனில் ஒரு மரங்கொத்தியைக் காட்டினார்கள். அலகு நீளமாக இருந்தது. தன் நீள அலகினால் மூங் கில் குழாய் போன்ற நீண்ட தண்டுக்குள் பத்திரமாக வளரும் புழுவைக் கொத்தித் தின்றது. பார்த்தது பட்டாம்பூச்சி. 'இந்த இடத்தில் இனி முட்டையிட்டால் நம் இனம் வளராது' என்று இன்னும் ஆழமான பகுதியில் முட்டை இட்டது.

மரங்கொத்திக் குருவியின் அலகுக்குப் புழு இப்போது எட்டவில்லை.

ஏமாந்து போயிற்று. சோர்ந்து போயிற்று.

ஒரு கணம்தான்.

மறுகணம், பறந்து சென்று ஒரு முள்ளை அலகால் ஒடித்து வந்தது. இப் போது அலகின் நுனியில் முள்ளை வைத் துக் குத்தியது. அவ்வளவுதான். குத்தப்பட்ட புழு நெளிந்து மேலே ஏறத் தொடங்கியது. அது ஒரு வசதியான இடத்துக்கு வந்து சேர்ந் ததும் 'லபக்'கென்று கொத்திச் சாப்பிட்டது மரங்கொத்தி!

பயிர்களைப் பூச்சிகள் அழிக்கின்றன. நமக்குத் தெரியும். அமெரிக்காவில் இதை ஆராய்ந்து பார்த்தார்கள் விவசாய நிபுணர் கள். பூச்சி மருந்துகளைத் தெளித்தார்கள். எல்லாம் 'குளோஸ்'! ஒரு பத்தாண்டு கழித்து ஆராய்ந்தால் அதே பழைய பூச்சி புதிய உருவம் எடுத்திருந்தது! இப்போது

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி

அதற்குத் தாடையிலே ஒரு பை. அதில் அந்தப் பூச்சி மருந்தையே சேமித்து வைத்து, தன் எதிரிகளைக் கண்ட போது பீச்சி அடித்து அவற்றை விரட்டியது.

கவனியுங்கள்!

மனிதன் ஒரு பூச்சியைக் கொல்ல ஒரு விஷ மருந்தைக் கண்டுபிடித்துக் கொல்கி றான். அந்தப் பூச்சி என்ன செய்கிறது? முதலில் இந்தப் பூச்சி மருந்து மேலே படாதவாறு தப்புகிறது. பிறகு நாளடைவில் இப் பூச்சி மருந்தைத் தாங்கக்கூடிய சக்தி பெறுகிறது. அப்புறம் ஒரு தோல் பையை உருவாக்கிக் கொள்கிறது. அதில் அதே விஷ மருந்தைச் சேமித்துத் தன் எதிரி மீது பிர யோகிக்கிறது!

அந்தப் பூச்சியுடன் ஒப்பிடும் போது



**மனம் என்கிற பெரிய தொழிற்சாலையில் மிக முக்கியமான சாதனம் ஒன்றிருக்கிறது. அதற்குப் பெயர், ''எதையும் சமாளிக்கும் அமைப்பு''. அது சதா விழித்துக் கொண்டிருக்கிறது; நமக்கு உதவ எப்போதும் காத்துக் கொண்டிருக்கிறது.**

இந்த மனிதன் எத்தனை பெரிய ஜீவன்? இவனிடம் எதையும் சமாளிக்கும் இயல்பு ஜீவத் துடிப்பு இருக்குமா; இருக்காதா?

உள்ளே இருக்கிறது. நாம் உணர்வ தில்லை! முதலில் அதைப் புரிந்து கொள் வோம். வாழ்வில் மாற்றங்கள், புதிய சூழ் நிலைகள் வந்தவண்ணம் இருக்கின்றன. ஈடு கொடுத்தால்தான் வாழலாம். இல்லா விட்டால் உலகம் நம்மை விட்டு விட்டு ஓடிக் கொண்டிருக்கும்.

மாறி வரும் மாற்றங்களுக்கு எப்படி ஈடுகொடுப்பது? சமாளிப்பது? மனவியல் அறிஞர்கள் ஆராய்ந்தார்கள் :

1. உங்கள் திறமைகளை அதிகமாக்கிக் கொள்ளுங்கள். திறமையை அதிகமாக்கும் வழி கல்விதான். கல்வி, விஞ்ஞானம், தொழில்நுட்பம் என்று வளர்ந்து வரும் அறிவுதான் மாறி வரும் சூழ்நிலையைச் சமாளிக்க நம்மைத் தயார் செய்யும்.

அடிக்கடி சுயசோதனை செய்து கொள் ளுங்கள். இருக்கிற நிலைமையைப் புரிந்து

கொள்ளுங்கள். உங்கள் பற்றாக்குறைகளை ஒப்புக் கொள்ளுங்கள். பிறகு ஒரு திட்டம் தீட்டுங்கள்.

எதிர்ப்பு - கெட்ட காலம் - என்றெல்லாம் வருமானால் உங்கள் சமாளிக்கும் திறமையைப் பூரணமாக வெளிக்கொணர கடவுள் ஏற்படுத்தி இருக்கும் சவால்தான் இவை என்பதாக நம்புங்கள்.

சவால்களையும் சோதனைகளையும் கண்டு முதலில் அச்சம் ஏற்படுவது இயற்கை. ஆனால் கொஞ்சங் கொஞ்சமாகப் புகுந்து சமாளித்த பிறகு ஏற்படும் மனவலிமை இருக்கிறதே அதுதான் நீங்கள் புதிதாகச் சேர்த்த சொத்து.

2. பலரால் ''ஏன் சமாளிக்க முடியவில்லை?'' என்று பார்த்த போது ஒன்றைக் கண்டார்கள்.

அவர்கள் பல காரியங்களையும் எடுத்துத் தலை மேல் போட்டுக் கொள்கிறார்கள். ஓரளவுதான் நாம் தூக்கலாம். அதற்கு மேலும் சுமைகளை ஏற்றும் போது மனம் திணறுகிறது. வேலை ஏராளமாக இருக்கும் போது நமக்கு எரிச்சல் ஏற்படுகிறது. முடிவில் எதுவுமே நடப்பதில்லை.

எனவே பல்வேறு காரியங்களில் 'எது முக்கியம்?' 'எது அவசரம்?' என்று திட்டமிட்டு அந்த ஒரிரு காரியங்களில் மட்டுமே கவனம் செலுத்துங்கள்; முடிப்பீர்கள்.

3. தன்னம்பிக்கையின்மை - தன்னைப் பற்றிய தாழ்வு மனப்பான்மை - என்னால் முடியாது என்ற சந்தேகம்; தோற்று விடுவோம் என்ற பயம் - இவை மனிதனை முடக்கி விடுகின்றன.

தன்னம்பிக்கையின்மை மன உறுதியின்மையில் முடிகிறது. எதைச் செய்யலாம் என முடிவெடுக்க முடியாத நிலை. முடிவெடுக்க முடியாதவர்கள் காரியம் எதையும் செய்வதில்லை. இவர்கள் பிறர் அங்கீகாரத்திற்காகப் பிறரை அண்ணாந்து பார்ப்பார்கள்.

4. சமாளிக்க முடியாதவர்களை ஆராய்ந்ததில் பலர் கற்பனை உலகில் வாழ்பவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் கொண்டிருக்கும் லட்சியம் நடைமுறைக்குச் சாத்தியமானதல்ல. இதன் விளைவாக ஏமாற்றம், தன்னைப் பற்றிய தாழ்வு உணர்வு இவை இவர்களை ஆட்கொள்கின்றன.

5. எதையும் சமாளிப்பவர்கள், யாருக்காகவும் காத்திருப்பதில்லை. தாங்களாகவே காரியத்தில் இறங்குகிறார்கள். அவர்களை அவர்களே ஊக்கப்படுத்திக் கொள்கிறார்கள். உற்சாகமாக இருக்கிறார்கள்.

6. வள்ளுவர் சொல்கிறார் : காரியம் நன்கு கூடி வரும் போது கொக்கைப் போல ஒரே குத்தாகக் குத்தி மீனைப் பிடி. சரியான நேரத்தைப் புரிந்து கொள்'' என்று.

7. ஆபத்தான சமயங்களில் வெறும் வீரத்தை மட்டும் நம்பியிராதே. விளைவுகளை எண்ணிப் பார். வாழ்வில் சாகசம் தேவை; வியூகம் தேவை; ராஜதந்திரம் தேவை.

## சிலிர்க்க வைத்த சரவணன்!

●● லால்பகதூர் சாஸ்திரியைப் பற்றி ஒரு சம்பவம். சாஸ்திரியின் மனைவிக்கு ஏவி.எம். அவர்கள் பட்டுப் புடைவை ஒன்றை நினைவுப் பரிசாக அளிக்கிறார். அன்று மாலை அந்தப் புடைவை ஒரு அன்புக் குறிப்போடு ஏவி.எம். வீட்டிற்கு சாஸ்திரியின் மனைவியால் திருப்பி அனுப்பப்படுகிறது!



●● ஏவி.எம். வீட்டில் கல்யாணம். முதல் பந்தி சாப்பிட்டபின் இலை எடுப்பதில் சுணக்கம். சாப்பாட்டு நிர்வாகத்தைக் கவனித்த நாகிரெட்டி. சாப்பிட்ட இலைகளைத் தாமே எடுக்கத் தொடங்குகிறார்!

●● ஏவி.எம். கூறுகிறார் தம் மகனுக்கு : ''பிறருக்கு கொடுக்க நினைத்தால் உடனே கொடுத்துவிடு. தர்ம சிந்தனைகளை ஒத்திப் போட்டால் பின்னால் கொடுக்காமல் போய் விடுவோம்!''

●● இவை எல்லாம் 'முயற்சி திருவினையாக்கும்' என்ற தலைப்பில் ஏவி.எம். சரவணன் எழுதிய புத்தகத்தில் காணப்படும் நிகழ்ச்சிகள். வானதி பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது.

ஒரு அருமையான சுய முன்னேற்ற நூல். ''வாழும் சரியான பாதையை நான் தெரிந்து கொண்டதற்குக் காரணம், என்னை நானே, இரவு நேரங்களில், விமர்சிக்கப் பழகிக் கொண்டதுதான்'' என்று தாம் கண்டு பிடித்த உண்மையை நமக்கும் தருகிறார், சரவணன்.

முன்னுக்கு வரும் குணங்கள்-உழைப்பு, முழு ஈடுபாடு, சிதறாத கவனம் என்று வரிசைப்படுத்துபவர் முடிவில் ''மாசற்ற ஒழுக்கம்'' என்று முத்திரை இடும்போது நான் ஒரு கணம் சிலிர்த்துப் போனேன். ஏனெனில் அமெரிக்க நிர்வாகத்துறையில், கடந்த சில ஆண்டுகளாக அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படும் ஒரு விஷயம் இருக்குமானால் அது ஒழுக்கம்தான்.

– எம். எஸ். யு.



## ஸ்ரீ லக்ஷ்மி வழங்கும்

# முத்தான புத்தாண்டு சேமிப்புத் திட்டம்



உங்கள் ஆதரவில் வளர்ந்து வரும் ஸ்ரீ லக்ஷ்மி பேர்ல்ஸ் & ஜுவல்லர்ஸ் மற்றும் ஸ்ரீ லக்ஷ்மி முத்து மாளிகை அறிமுகம் செய்யும் புதிய சேமிப்புத் திட்டங்களில் சேர்ந்து பயன்பெற வாருங்கள்.

### ஸ்ரீ லக்ஷ்மி ஃபிக்சட் டிபாசிட் திட்டம்

டிபாசிட் காலம்: 25 மாதங்கள்

| டிபாசிட் தொகை | வட்டி விகிதம் | முத்து பரிசு | கிரெடிட் கார்டு | | டிபாசிட் கால முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|---|---|
| | | | மதிப்பு | தவணை முறை | |
| ரூ.1000 | 21% | 5 கிராம் | ரூ.1000 | ரூ.200x 5 மாதம் | ரூ.1000 |
| ரூ.2500 | 21% | 15 கிராம் | ரூ.2500 | ரூ.500x 5 மாதம் | ரூ.2500 |
| ரூ.5000 | 21% | 30 கிராம் | ரூ.5000 | ரூ.500x 10 மாதம் | ரூ.5000 |

- இத்திட்டத்தில் டிபாசிட் செய்யும் வாடிக்கையாளருக்கு, டிபாசிட் தொகைக்கு எதிரில் குறிப்பிட்டுள்ள அளவு முத்துக்கள் உடனடியாக அன்பளிப்பாக வழங்கப்படும்.
- டிபாசிட் தொகைக்கு ஈடான மதிப்பு உள்ள ஸ்ரீ லக்ஷ்மி கிரெடிட் கார்டு இலவசமாக வழங்கப்படும். இந்தக் கிரெடிட் கார்டு மூலம், அதில் குறிப்பிட்டுள்ள மதிப்பு அளவுக்கு எங்கள் ஷோரூமில் பொருட்களை வாங்கிக் கொண்டு, அதற்கு உரிய தவணைகளில் பணம் செலுத்தலாம். இதற்கு நீங்கள் வட்டி கட்டத் தேவையில்லை.
- உங்கள் டிபாசிட்டுக்கு உரிய வட்டி மாதா மாதம் செக் மூலம் உங்களுக்கு வழங்கப்படும்.
- டிபாசிட் கால முடிவில் உங்கள் பணத்தை ரொக்கமாகப் பெறலாம்.

### ஸ்ரீ லக்ஷ்மி மாதாந்திர டிபாசிட் திட்டம்

| மாதத் தவணை | செலுத்தும் மாதங்கள் | மொத்தம் செலுத்தும் தொகை | டெபாசிட் முடிவில் கிடைக்கும் முத்து மதிப்பு |
|---|---|---|---|
| ரூ. 100 | 12 | ரூ. 1,200 | ரூ. 1,680 |
| ரூ. 200 | 12 | ரூ. 2,400 | ரூ. 3,360 |
| ரூ. 250 | 12 | ரூ. 3,000 | ரூ. 4,200 |

★ ஒவ்வொரு குரூப்பிலும், மாதம் 2 பேர் வீதம் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, தலா 10 கிராம் முத்து (ரூ.500 மதிப்பு) அன்பளிப்பாக வழங்கப்படும்.

★ இத்திட்டத்தில் சேரும் அனைவருக்கும், முதல் தவணை செலுத்தியவுடன், வெள்ளியில் செய்து, பிளாஸ்டிக் பேழையில் பதிக்கப்பட்டுள்ள தெய்வத் திருவுரு பரிசாக வழங்கப்படும்.

★ புதிய டிபாசிட்டரை அறிமுகம் செய்யும் டிபாசிட்டருக்கும் கடவுள் திருவுரு பரிசு உண்டு.

★ வெளியூர் வாடிக்கையாளரும் D.D. அல்லது M.O. மூலம் பணம் செலுத்தி இத்திட்டத்தில் சேரலாம். அவர்களும் மாதாந்திரக் குலுக்கலில் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். அவர்களுக்கு உரிய பரிசுகள் தபாலில் அனுப்பி வைக்கப்படும்.

ஸ்ரீ லக்ஷ்மி கடாட்சம் பெற வாழ்த்துக்கள்!



**ஸ்ரீ லக்ஷ்மி பேர்ல்ஸ் & ஜுவல்லர்ஸ்**

11, அபெக்ஸ் காம்ப்ளெக்ஸ்
(நாகேஷ் தியேட்டர் அருகில்)
தியாகராயா ரோடு (பாண்டிபஜார்)
தி.நகர், சென்னை 600 017

**ஸ்ரீ லக்ஷ்மி முத்து மாளிகை**

'காசி ஆர்க்கேட்'
வடக்கு போக் ரோடு முனை
(தேனாம்பேட்டை சிக்னல் அருகில்)
தியாகராயா ரோடு
தி.நகர், சென்னை 600 017

ADCRAFT

2

## சென்ற வாரம்...

போலார் கன்ஸ்ட்ரக்ஷன்ஸ் நிறுவனத்தை வெற்றிகரமாக நடத்துபவள் நித்யா. அப்பாவின் திடீர் மறைவுக்குப் பின் தம்பி, தங்கையைப் படிக்க வைத்து, குடும்பப் பொறுப்பையும் காப்பவள். திடீரென்று சில கட்டட வேலைகளுக்கான ஒப்பந்தங்களை வாடிக்கையாளர்கள் வலுவான காரணமின்றி ரத்து செய்ய, நித்யாவுக்கு அந்த காண்ட்ராக்டுகள் விகவம் இன்டர் நேஷனல் நிறுவனத்துக்கு மாற்றப்பட்டிருப்பதாக ஆர்க்கிடெக்ட் சசித் அறைதொடமிருந்து அறிகிறாள்.

விகவம், நித்யாவுடன் இஞ்சினியரிங் படித்தவன். இருவருக்கும் இடையே காதல் மலர்ந்தது. முறையாகப் பெண் கேட்க வந்த விகவம், அவன் அம்மா ஒரு லட்ச ரூபாய் வரதட்சணை கேட்ட போது மௌனமாயிருந்தான். நித்யா உடன்படவில்லை.

சில வருடங்கள் கழித்து, சமீபத்தில் விகவம் மீண்டும் நித்யாவை நாடியிருந்தான். அவள் மிகக் கோபத்துடன் அவனைத் தன் அலுவலகத்திலிருந்து வெளியேற்றியிருந்தாள். அப்போது அவளைப் பழி தீர்ப்பதாகச் சவால் விட்டுச் சென்ற மாஜி காதலனின் நிறுவனம்தான் விகவம் இன்டர் நேஷனல்.

“என்னடி நித்யா? மணி எட்டாகப் போறது. இப்படிச் சாப்பாடும், தூக்கமும் இல்லாம நீ கம்பெனி நடத்தலைன்னு யார் அழுதா? கை, கால் அலம்பிண்டு சாப்பிட வா'' - பார்வதி ஒரு தாய்க்குரிய கவலையுடன் அலுத்துக் கொண்டாள்.

கிரிஸ்டஃபரின் தொழிற்சாலை வேலையும், டாக்டர் மாத்ருபூதத்தின் நர்ஸிங் ஹோம் வேலையும் கைவிட்டுப் போனது வருத்தமாக இருந்தாலும், அதுவே அவளை முழுமையாக பாதிக்கவில்லை.

''ரைனோ என்டர்பிரைஸஸ்'' பொம்மைத் தொழிற்சாலையின் வேலைகள் முடிந்து விட்டன. இன்றுடன் வண்ணப்பூச்சும் முடிந்து போனது. கட்டடம் பார்ப்பதற்குக் கம்பீரமாக, அழகாயிருந்தது. அதுவே அலாதியான திருப்தியை மனத்துக்கு அளித்தது. ''போலார் கன்ஸ்டிரக்ஷன்ஸைப்'' பொறுத்த வரையில் இது ஒரு மைல் கல்.

உற்சாகத்துடன் குளியலறைக்குள் நுழைந்தாள். வெகு நாட்களுக்குப் பிறகு ருசித்து உணவு உட்கொண்டாள்.

துர்க்காவும் ராமனும் டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்போதைக்கு அடங்க மாட்டார்கள். நித்யா வழக்கம் போல் சோபாவில் வந்து அமர்ந்து கொண்டாள். திடீரென்று உடலில் ஒரு லேசான களைப்பு ஏற்பட்டது. வேலையைத் துப்புரவாக முடித்து விட்டோம் என்ற உணர்வில் பிறந்த சந்தோஷமான களைப்பு. கண்களை மூடிக் கொண்டு அதை அனுபவித்தாள்.

''இந்தா நித்யா.''

பார்வதியின் குரல் அவளை எழுப்பியது.

சின்ன எவர்சில்வர் தட்டில் இரண்டு மைசூர்பாகு வில்லைகள். வாயில் போட்டவுடன் கரைந்தன.

''என்னம்மா விசேஷம்?''

அம்மா காரியமில்லாமல் பட்சணங்கள் செய்ய மாட்டாள் என்று அவளுக்குத் தெரியும்.

''விகவம் வந்திருந்தான்.''

வாயிலிட்ட மைசூர்பாகு அடி நாக்கில் கசந்தது.

அவனின் வருகை அவள் எதிர்பார்த்ததுதான்.

அவள் எந்தவிதமான உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தவில்லை.

''ஓகோ! அதுதான் பிரத்தியேகமா 'ஸ்வீட்' பண்ணினாயாக்கும்!'' அவள் குரலில் தொனித்த நையாண்டித்தனம் பார்வதிக்கு உறைக்கவில்லை.

''இது கிளற எத்தனை நாழி வேணும்? அவா மூணு பேருமாப் பேசிண்டிருக்கற வேளையில கிளறி, இறக்கிக் கொட்டியாச்சு. அவனுக்கு மைசூர்பாகு சூடா இருந்தா ரொம்பவும் பிடிக்குமாம். நாலு கட்டி சாப்பிட்டானாக்கும்.''

நித்யா ஒன்றும் கூறவில்லை.

''பழசையெல்லாம் அவன் இன்னமும் மறக்கலையாக்கும். நல்ல பிள்ளை - பாவம்!''

''நானும் மறக்கவில்லை'' என்றாள் நித்யா. அவள் குரல் இறுகிப் போய்க் கிடந்தது.

''அந்தப் பாவிப் பொம்மனாட்டி செத்துப் போயாச்சாம். உன்னைப் பண்ணிக்க ரொம்ப ஆசைப்படறான். உன்னை அவனால மறக்க முடியலைங்கறான்.''

ஆபஸ்தம்பன்

''அம்மா! இது என்னைக்கோ முடிஞ்சு போன விஷயம். இனிமே இந்த ஜென்மத்துல அவன் முகத்துல முழிக்க மாட்டேன். இனிமேல் என்கிட்ட அந்த 'யூஸ்லெஸ் ஃபெல்லோவை'ப் பற்றிப் பேசாதே அம்மா.''

பார்வதி பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தாள்.

''ஆனாலும் உனக்கு மண்டைக் கனம் ஜாஸ்தி அக்கா.''

பேசிய தூர்க்காவை அதிசயமாகப் பார்த்தாள் நித்யா.

''என்னத்தை நெனச்சிண்டு இப்படிப் பேசறே தூர்க்கா? அவங்கவங்க வாழ்க்கையைத் தீர்மானிக்கக்க அவங்கவங்களுக்கு உரிமை உண்டு தூர்க்கா.''

''ஓ! உரிமையைப் பற்றி யாரக்கா இப்போ பேசினா? விசுவம் ஒரு ஜென்டில் மேன். என்ன கலகலன்னு பேசறார் தெரியுமா? என்கூடயும், ராமன்கிட்டேயும் ரெண்டு மணி நேரம் அரட்டை அடிச்சார். உனக்குத் தெரியுமா அக்கா, அவருக்கும் என்னாட்டமா 'சேஸ்' நாவல்கள்னா உசிராம்! அவருக்கும் 'ஒனி பிலா' பிடிக்குமாம். உஷாஉதுப் பிடிக்குமாம். அவர்கிட்டப் பேசிண்டிருந்தா நேரம் போறதே தெரியலை அக்கா.''

நித்யா ஒன்றும் பேசாமல் தூர்க்காவையே பார்த்தாள். தங்கையின் கண்களில் ஒருவிதமான மயக்கம் தெரிந்தது.

''நுங்கம்பாக்கத்துல சொந்தமா வீடு கட்டிண்டிருக்காராம். பிரமாதமாக் கட்டியிருக்காராம். ஆறு பெட்ரூம், ஸ்விம்மிங் பூல் - எல்லாம் இருக்காம். பெரிய தோட்டமாம். அவரோட கம்பெனிக்கு நல்ல பெயராம். நிறைய வேலைகள் தானாகவே தேடி வர்றதாம்.''

வந்த சிரிப்பைச் சிரமப்பட்டுக் கட்டுப்படுத்திக் கொண்டாள் நித்யா.

''உனக்குத் தெரியுமா அக்கா? நடிகை பூஜ்யாலக்ஷ்மிக்குக் கூட வீடு கட்டிண்டிருக்காராம்!''



# சூப்பர் ஸ்டாருக்கு மெகா விளம்பரம்!




நியூயார்க் நகரின் மன்ஹாட்டன் பகுதியில் நடிகர் அர்னால்டின் 75 அடி கட்-அவுட் நிர்மாணிக்கப்பட்டுள்ளது என்றால் இது ஒன்றும் நமக்குப் பெரிய விஷயமாகத் தோன்றாதுதான். ஆனால் அமெரிக்காவின் நாஸா நிறுவனம் தனது அடுத்த ராக்கெட்டை விண்வெளிக்குச் செலுத்தும் போது ஒரு புதுமை : அந்த ராக்கெட்டின் வெளிப்புறம் அனைவரும் காண, நடிகர் அர்னால்ட் ஸ்க்வேஜநெக்கர் ஓவியம் தீட்டப்பட்டிருக்கும். அவர் நடிக்கும் Last Action என்ற படத்துக்கான விளம்பரம் இது. இதற்காகக் கொலம் பியா பிக்சர்ஸ் நிறுவனம் நாஸாவுக்கு ஐந்து லட்சம் டாலர் கொடுத்திருக்கிறது!

- எஸ். ஆலன்



●● தொலைபேசி மூலமாக ஈ.சி.ஜி. எடுக்கும் வசதி நம் நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. டிரான்ஸ்மிட்டர் தொலைபேசியுடன் இணைக்கப்பட்டு மருத்துவமனையில் உள்ள ஈ.சி.ஜி. கருவியுடன் இணைக்கப்படுகிறது. வீட்டிலிருந்தபடியே நோயாளியின் ஈ.சி.ஜி. மருத்துவமனையில் பதிவாகிறது. உடனடியாக சிகிச்சை தொடங்க முடியும்.

ஆதாரம் : (சண்டே)
தகவல் : கீதா பஞ்சு

நித்யா 'இந்தியா டுடே'யைக் கையிலெடுத்தாள்.

''என்னக்கா இது? பேசறதுக்குன்னு வந்து உட்கார்ந்துண்டா புஸ்தகத்தைக் கையில எடுத்துக்கறே?''

''என்னை என்ன பண்ணச் சொல்றே துர்க்கா? வேற ஏதாவது விஷயம் பேசறதானாச் சொல்லு - புஸ்தகத்தைக் கீழே வைக்கிறேன்!''

''என்னக்கா இது? அவர் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறார். அவருக்கு என்ன குறை அக்கா? அழகு இல்லை? பர்ஸனாலிடி இல்லை? ஒரு கோணத்துல பார்த்தா அமிதாப்பச்சன் போல இல்லை?''

நித்யா வாய் விட்டுச் சிரித்தாள்.

''உனக்கு அப்படித் தோணறதானா நீயே அவனைப் பண்ணிக்கிறதுதானே? யூ லுக் ஆஸ் இஃப் யூ ஆர் கிரேஸி அபௌட் தட் ஃபெல்லோ.''

துர்க்கா கண்கள் விரிய அவளைப் பார்த்தாள்.

''நெஜமாத்தான் சொல்றயா அக்கா?'' அவள் குரலில் ஒரு குழைவுடன் கூடிய மயக்கம் தெரிந்தது. ''யூ ஆர் கிரேட் அக்கா!''

நித்யா அதிர்ச்சியுடன் அவளைப் பார்த்தாள்.

''கடவுளே! முட்டாள்தனமா பேசாதே துர்க்கா. நானா இருந்திருந்தா அவனை இந்த வீட்டுக்குள்ளேயே விட்டிருக்க மாட்டேன். ஸ்கௌண்டிரல்!!!''

துர்க்கா சரேலென்று அங்கிருந்து எழுந்து சென்றாள்.

**ப**ணம், அந்தஸ்து - இந்த இரண்டு விஷயங்களுக்குமே பெண்கள் எளிதாக அடிமையாகி விடும் பலவீனத்தை, சாபக்கேட்டை நினைத்து நித்யா பெருமூச்செறிந்தாள்.

பெண்கள் எத்தனையோ துறைகளில் முன்னேறி விட்டார்கள். இன்று எல்லாத் துறைகளிலும் பெண்களுக்குத் தங்கள் அறிவை முதலீடு செய்யும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. ஆனாலும் பணமும், அந்தஸ்தும், ஆடம்பரமும் பெண்களை இன்னமும் மயக்கத்தான் செய்கின்றன. அதிலும் துர்க்காவைப் போன்ற எம்.எஸ்ஸி. பட்டதாரிப் பெண் இந்த சாபக்கேட்டுக்குப் பலியாக வேண்டுமானால் அது எப்படிப்பட்ட துர்ப்பாக்கியம் என்று எண்ணிப் பெருமூச்சு விடாமலிருக்க முடியவில்லை.

அன்றிரவு வெகு நேரம் வரையில் அவள் உறங்கவில்லை. மனம் துர்க்காவை நினைத்துப் பரிதாபப்பட்டது. விகவத்தைப் பற்றிப் பேசுகையில் துர்க்காவின் கண்களில் ஒளிவிட்ட கனவு மயக்கம், வார்த்தைகளில் குழைவு - எல்லாமே அடி

வயிற்றில் கலக்கத்தை ஏற்படுத்தின. அவனுடன் கூடவே பிறந்து விட்ட முன்கோபமும், பிடிவாதமும், நினைத்ததை அடைந்தே தீர வேண்டும் என்ற தீவிரமும், அவள் விகலத்தை எப்படியும் மணந்து கொள்ள முயலுவான் என்ற எண்ணம் ஏற்பட்டதும் கவலைப்படாமலிருக்க முடியவில்லை. பட்டதாரியானாலும், வயது இருபத்தி இரண்டு ஆனாலும் மனத்தில் பக்குவமோ, சிந்திக்கும் தன்மையோ இல்லாமலிருப்பதும் பரிதாபத்துக்குரிய நிலை என்று நினைக்கத் தோன்றியது. இந்த விகலம் இனிமேல் தனது வாழ்க்கையில் அனேகப் பிரச்னைகளை ஏற்படுத்தியே தீருவான் என்று தோன்றியது.

திடீரென்று துர்க்கா, ராமன், பார்வதி - மூன்று பேருமே தன்னிடமிருந்து வெகு தூரம் விலகிப் போய் விட்டது போன்ற பிரமை ஏற்பட்டது. இது வெறும் பிரமையாக நிற்காமல் நிஜமாக உருவாகும் நாள் வெகு தூரத்தில் இல்லை என்றும் தோன்றியது.

துர்க்காவின் பிடிவாதம் அவளை விகலத்தின் மனைவியாக்கி விடும். பார்வதிக்கு என்றுமே துர்க்கா மீது பிரியம் சற்று கூடுதல்தான்.

ராமன்? அவனுக்கு என்று ஒரு கொள்கை, ஒரு சிந்தனை, ஒரு அபிப்பிராயம் - ஒன்றும் இல்லை. எந்தச் சந்தர்ப்பத்திலும், எவராலும் - அவன் மாற்றப்பட்டு விடுவான். இவனுக்குச் சொகுசான வாழ்க்கை, வெளிநாட்டுப் பொருள்களின் மீது மோகம் - இவை இரண்டும் பலவீனங்கள். ''போலார் கன்ஸ்டிரக்ஷன்ஸின்'' அக்கவுண்ட் செக்ஷனில் வேலை செய்து கொண்டிருப்பது தனக்கு கௌரவக் குறைச்சலான விஷயம் என்று அவளிடமே அவன் தயங்காமல் கூறியதுண்டு. இவனுக்கு ஒரு விலை பேச விகலம் தயங்கமாட்டான் என்ற எண்ணம் மனத்தில் ஜனித்தது. இந்த சிந்தனைப் பின்னல்களிலிருந்து அவள் தன்னை விடுவித்துக் கொண்ட போது, தான் மட்டும் தனியாக நிற்பது போலவும், பார்வதி, துர்க்கா, விகலம், ராமன் - எல்லோரும் தனக்கு எதிராக அணி வகுத்துக் கொண்டு நிற்பது போலவும் கற்பனையில் நிழல் படர்ந்தது.

இந்த நிழல் மனத்தின் விளிம்பில் தோன்றிய அதே வேளையில் முகத்தில் லேசான புன்னகையும் மலர்ந்தது. நிகழவிருக்கும் இந்த குருக்ஷேத்திரப் போரில் தான் தனியாக நிற்கவில்லை; தனக்குப் பக்கபலமாகப் பிரசன்னாவின் நட்பும், சிநேகமும் துணையாகவிருக்கும் என்று நினைக்கையில் மனசு லேசாகிப் போனது.

(தொடரும்)

# முயற்சி இருந்தால் விதியையும் வெல்லலாம்

சுட்டெரிக்கும் ஒரு மதியம். அடையாறு ஆவின் பாலகத்தில் வழக்கமான வாடிக்கையாளர் வரிசை. அருகில் கற்பகம் கார்டனில் வசிக்கும் ஜீஜோவுக்கு வெண்ணெய்; வெயிலை மறக்க உள்ளே புகுந்திருக்கும் இல்லத் தலைவி பத்மாவுக்குப் பதப்படுத்தப்பட்ட பால்; எதிரிலிருக்கும் அவ்வை ஹோம் பள்ளியிலிருந்து இடைவேளையைக் கொண்டாட வந்திருக்கும் ஏழாம் வகுப்பு ஹேமமாலினி; கல்யாணிக்கு அரட்டைக் கலகலப்புக்குச் சுவை சேர்க்க ஐஸ்கிரீம் - இப்படிப் பலருக்குப் பல தேவைகள். ரிஜிஸ்தரில் ஆர்டர் பதியப் படுகிறது. பணமும், பில் லும் கைமாறுகின்றன. கவுண்டரில் போய்ச் சேர்ந்த பில் சரிபார்க்கப்பட்டுத் தேவையான பொருட்கள் அவரவருக்குப் போய்ச் சேரு கின்றன.



**பொதுவாக வியாபாரக் கோட்பாடு களின் அடிப் படை - கவர்ச்சி யான விற்பனை யாளர்கள். இந்த விதி மீறலை வாடிக்கை யாளர்கள் எப்படி ஏற்றுக் கொள் கிறார்கள்?**

இதென்ன பெரிய அதிச யம்! எல்லாக் கடைகளிலும் நடப்பதுதானே என்கிறீர் களா? செயல் ஒன்றுதான். விற்பனையாளர்க ளாகச் செயல்படுபவர்கள் தான் வித்தியாசமானவர்கள். 'ஸ்பாஸ்டிக்ஸ்' என்றழைக் கப்படும் உடல், மன இயக் கங்கள் பாதிக்கப்பட்டவர் கள்.

''வித்தியாசமான வர்கள், அசாதாரணமான வர்கள் என்ற அடைமொழிகள் தேவையே இல்லை. இவர்கள் குறைபாடுகள் கொண்டவர்கள் அல்ல. இயக்கங்களில் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டவர்கள்; அவ்வளவுதான்!'' என்கிறார் ஸ்பாஸ்டிக் சொசைட்டியைச் சேர்ந்த உஷா. ''இவர்களுக்கும் வேலை வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுத்துச் சராசரி வாழ்க்கைக்குத் தயார்படுத்த வேண்டும் என்ற எங்கள் முயற்சியின் வெளிப் பாடுகளில் ஒன்றுதான் இந்த அடையாறு ஆவின் பாலக நிர்வாகத்தை நாங்கள் எடுத்துக் கொண் டது'' என்கிறார் லதா.

சென்னையில் இயங் கும் ஆவின் பாலகங்களி லேயே வியாபார ரீதியில் பெரியவை அண்ணா நகர், அண்ணாசாலை, அடையாறு ஆகிய இடங் களிலிருப்பவைதான். அப் படிப்பட்ட ஒன்றை ஸ்பாஸ்டிக் சொசைட்டி யினர் எப்படி நிர்வகிக் கிறார்கள் என்பதை அறிய அங்கே ஒரு 'விசிட்' அடித்தோம்.

சுவாமிநாதன் அடிக்கடி வலிப்புகளுக் குள்ளாவார். வேகமாக இயங்கும் பொருட்களை - உதாரணமாக ஓடும் பேருந்துகளின் எண்கள் மற்றும் வழித்தடங்களைப் பார்த்ததும் அது மூளையில் பதியாத பார்வைக் கோளா றும் உண்டு. ஆனால் கவுண் டரின் பின்னால் நின்று 'பில்'களைச் 'செக்' பண் ணிப் பொருட்களை வழங் கும் இந்தப் பணியை ஏற்றுக் கொண்டதிலிருந்து சுவாமிநாதனின் உலகம் விரிவடைந்திருக்கிறது. தினமும் பேருந்தில் தந்தை காலையில் கொண்டு வந்து விட்டு விட்டு ஷிஃப்ட் முடிந்ததும் திரும்ப வந்து அழைத்துப் போகிறார். ''அவன் தன்னம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து வருகிறது. தானே ஓர் ஆவின் பாலகத்தை நிர்வகிக்க வேண்டுமென்ற ஆசையும் முளை விட்டுக் கொண்டிருக்கிறது'' என்கி றார் தந்தை.




* அடையாறு ஆவின் பாலகம் : ''இங்கே வெட்டிப் பேச்சு இல்லை!''

**கவு**ண்டரின் பின்னால் சுவாமிநாத னுடனிருக்கும் ஜெயராமனுக்கு மூளை வளர்ச்சி சற்று குறைவு. இருந்தாலும் 'பில்'லில் இருக்கும் பொருளைப் பார்த்து எடுத்துக் கொடுப்பது; தவறேதும் வந்து விட்டால் உணர்ந்து திருத்திக் கொள்வது போன்ற பணிகளில் தம்மை முழுதும் ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார்.

பதிவேட்டில் வாடிக்கையாளர் தேவை யைப் பதியும் பிரபாகரன், கை, கால்களின் இயக்கம் பாதிக்கப்பட்டவர். இருந்தும் வேலைக்கு வரப் போக யாருடைய உதவி யையும் நாடுவதில்லை. சக்கர நாற்காலி யையும், தம்மையும் ஓர் ஆட்டோவில் தூக்கி வைக்கச் சொல்லி விட்டு, தம் பயணச் சுதந்திரத்தை நிலைநாட்டிக் கொள்கிறார், சினிமாக்களுக்குச் செல்வது உட்பட. கை விரல்களால் நம்மைப் போல் சாதாரண மாகப் பேனா பிடிக்க முடியாவிட்டாலும் தமக்கு வசதியான முறையில் பிடித்து நன்றாக எழுதுகிறார்.

**பொ**துவாக வியாபாரக் கோட் பாடுகளின் அடிப்படை - கவர்ச்சியான விற்பனையாளர்கள். இந்த விதி மீறலை வாடிக்கையாளர்கள் எப்படி ஏற்றுக் கொள்கிறார்கள்? ''வித்தியாசம் ஒன்றும் தெரியலையே. நல்லாத்தானே கொடுக்க றாங்க. தப்பொண்ணும் செய்யலை - நாங்கதான் அடிக்கடி இங்கே வர்றோமே!'' என்ற தீர்ப்பு ஹேமமாலினி, கல்யாணி விடமிருந்து.

''நீங்களே பாருங்களேன். நான்கு பாக்கெட் வெண்ணெய் வாங்கினேன். பை கொண்டு வரவில்லையா என்று விசாரித்து அவராகவே பையை எடுத்துக் கொடுக் கிறாரே ஜெயராமன்!'' என்கிறார் ஜீஜோ. முத்தாய்ப்பான கமெண்ட் பத்மாவிட மிருந்து : ''இந்தப் பார்லர் எவ்வளவோ தேவலைங்க. சில இடங்களில் அரட்டை. சிரிப்பு. கஸ்டமர்களைக் கவனிக்கவே மாட்டாங்க. இங்கே வெட்டிப் பேச்சு இல்லை. அவரவர் வேலையை இரட் டிப்புக் கருத்துடன் செய்கிறார்கள்.''

– நிர்மலா சக்ரவர்த்தி

# தலைவன்

அந்த பட்டாணிக் கடை இருக்க வேண்டுமென்று ரமேஷ் விரும்பினான். பஸ்ஸில் அவனது ஒரே யோசனை அது தான்.

சுதாவிடம் சொல்ல வில்லை.

எங்கே போகிறோம் என்று கூடச் சொல்லவில்லை. ஏன் காரை விட்டு விட்டு, ஆட்டோ வேண்டாமென்று நெருக்கியடித்துக் கொண்டு பஸ்ஸில் போக வேண்டும்? அப்படி என்ன அற்புதம்? எங்கே போகிறோம்?

தொண்ணூற்றி ஒன்பது சதவீதம் சுதா கேட்க மாட்டாள் என்று தெரியும். எனினும் மீதி ஒரு சதவீதத்தில் ஒரு லேசான குறுகுறுப்பு. கேட்டு விடுவாளோ... கிளற முயல்வாளோ?

இல்லை. சுதா கேட்க வில்லை. அதிருஷ்டசாலி. அவன். சுதா மாதிரி ஒருத்தி எல்லாருக்கும் வாய்ப்பதில்லை.

கேள்வி கேட்காத ஒருத்தி. பக்கத்தில் சுதாவின் இதமான உடல் வெப்பம். அவள் வாசனை.

இருபத்தாறிலிருந்து இருபத்தேழுக்குள் நுழைகிற வயசில் இருபத்திரண்டிலிருந்து இருபத்து மூன்றில் நுழைகிற ஒருத்தியோடு குளிர்காற்று வீசும் மாலை நேரத்தில் பிரச்னைகள் எதுவுமில்லாமல் செய்கிற பயணத்தின் ஒரு குதூகலம் அவனுள் குமிழியிட்டது.

பஸ் ஸ்டாப் வந்தது.

இப்போது பெரிய நிழற்குடை போட்டு நாலு சிமெண்ட் பெஞ்ச். புதியவை. பஸ்வி ரெண்டு வருடத்திற்கு முன் இல்லாதவை.

இறங்கினான். பின்னால் சுதா. பஸ் ஸ்டாப்பில் பல முகங்கள் அவர்களைப் பார்த்தன. முதலில் சுதாவை பின்பு அவனை.

அவனுக்குப் பழகி விட்டது. இந்த ஜோடிப் பொருத்தத்தை லேசான பொறாமையோடு பார்க்கிற பார்வைகள் அவனுக்கு மறைமுகமான பாராட்டு.

சாலை கடக்க வேண்டும்.

கடந்தான்.

அவள் தொடர்ந்தாள்.

ஜிவ்வென்று அடுக்கடுக்கான மாடிகள். பரபரப்பான கடைகள். நெருக்கியடிக்கும் கூட்டம். குறுக்கும் நெடுக்கும் வாகனங்கள்.

அந்த பட்டாணிக் கடை இருப்பது அசாத்திம் என்று அவனுக்கே தோன்றியது. வேகமும், போட்டியும் வளர்ச்சியும் எல்லாவற்றையும் விழுங்கி விட்டிருந்தன.

அவன் பத்து வயதிலிருந்து பதினைந்து வரை நடந்து பழகிய அந்த வீதி சாலையாகி இருந்தது.

இன்னும் சற்று நடந்து இடப்பக்கம் திரும்ப வேண்டும். எனினும் முதல் அதிர்ச்சியில் அவன் கால்கள் நின்று விட்டன.

''எப்படிப் போகணும்?'' என்று சுதா கேட்டாள்.

தன் நினைவு வந்தது.

''நேரா... லெஃப்டிலே...''

அவன் சற்றும் அடையாளமின்றி சுத்தமாகத் துடைக்கப்பட்டு விட்ட பால்யத்தின் அபூர்வமான சோகத்தோடு சாலை திரும்பினான்.

ஜிவ்வென்று ஒரு லிஃப்ட் ஏறுவது போல் ஒரு மகிழ்ச்சி.

இன்னும் அந்தப் பட்டாணிக் கடை இருந்தது. கூடைகளுக்குப் பதில் பிளாஸ்டிக் உறைகள். கப்பையாவிற்குப் பதில் யாரோ இளைஞன்.

சில நுட்பமான விநாடிகளில் வாழ்க்கைதான் என்னமாக



**உதவி செய் பெண்ணே. அவன் மனசிற்குள் சொல்லிக் கொண்டான். அது கேட்டுப் பெறும் உதவியல்ல. பிம்பம் காட்டும் உதவி. நீ ஆண். நீ மனிதன். நீ நிற்க முடியும். நீ நிலைக்க முடியும். நீ ஊழியன் அல்ல. நீ தலைவன்.**

**இதுதான் அவன் எதிர்பார்த்த பிம்ப உதவி.**



ஜொலித்து விடுகிறது. அவன் முகம் திடீரென்று பரவசமுற்றது. கண்ணிலும் உதட்டிலும் சிரிப்பு.

கன்று தாய்ப் பசுவை நோக்கிப் போவது போல அவன் கிட்டத்தட்ட ஓடினான்.

''ஏய்.. ஒங்களுக்கு என்ன ஆச்சு?'' என்று அவள் கேட்டு விட்டாள்.

அவன் நிதானித்தான். கொஞ்சம் வெட்கம். சிறிது அசட்டுத்தனம்.

''யூ லுக் வெரி காமிகல் யார்!'' என்றாள் சுதா.

இங்கிருந்து தான் நான் டிராஜிகலாத் தொடங்கினேன் என்று சொல்ல நினைத்தான். அது வசனம் ஆய்விடும்.

வசனங்கள் வெறும் செலாவணி நாணயங்கள். சொல்லி முடித்ததும் மதிப்பில்லை.

ஹாஸ்டலில் ஒன்பதரைக்கு ஒரு சாப்பாடு. அடுத்த சாப்பாடு இரவு ஏழரைக்கு. சமையல் லேட்டானால் எட்டு மணி கூட ஆகி விடும்.



பலகாரங்கள் நிறைந்த ஓர் உலகில் பத்து வயசுப் பையனுக்கு எத்தனை பசி!

பசி?

விஷயம் அது மட்டுமில்லை.

பல நூறு மைல்களுக்கு அப்பால் பையன் படித்து முடித்து வருவான் என்ற நம்பிக்கையோடு அம்மா, கையில் காசில்லை.

நோ. அதற்கும் மேலே.

நீ யார்... நீ யார் என்று உலைக் களத்துச் சம்மட்டி போல் எதுவோ கனல் வீச உள்ளேயிருந்த எதன் மீதோ எதுவோ மாற்றி மாற்றி அடி மேல் அடியாகத் தாக்கிக் கொண்டிருந்ததே அது!

சாலை என்று பொருட்படுத்தாமல் அவசியமின்றிச் சுதாவின் கையை இறுகப் பற்றிப் பின்னால் வா என்று இழுத்தான்.

அவள் இந்த திடீர்க் கிளர்ச்சிக்கு அர்த்தம் தேடுவது போல் அவனைப் பார்த்தாள்.

ரமேஷின் கண்கள் கலங்கியிருந்தன.

'இன்று என்ன ஆயிற்று இவருக்கு?'

''அப்பா இல்லியா?'' என்று பட்டாணிக் கடை இளைஞனிடம் கேட்டான்.

அவன் ரமேஷை ஏற இறங்கப் பார்த்தான்.

''நீங்க யாரு?''

ரமேஷ் அதே கேள்வியைத் தானே கேட்டுக் கொண்டான்.

தான் அவருக்கு யார்?

அந்த உறவுக்குப் பெயரில்லை.

வாடிக்கையாளர்?

அத்தோடு அது நிற்கவில்லை.

அவரால் கவரப்பட்டு அவரிடம் ஈடுபாடு கொண்ட சீடன்?

# கிளைநதி

அது கூட முழுக்கச் சரியில்லை.

''தெரிந்தவன்'' என்றான் சுருக்கமாக. அது மிகவும் குறைவு. வேறு வார்த்தையில்லை.

''அவரு போயி மூணு வருசம் ஆச்சுங்களே.''

இருபத்தாறு வயசிற்குள் இப்படி 'போய் விட்டவர்கள்' பற்றிக் கேட்டுக் கேட்டு மனசு மரத்திருந்தது. எனினும் இது வேறு. கோடரி வெட்டு. ஒரு முக்கிய உறவின் மரம் விழுந்த சூன்யத்தை உறுதியாக்கும் வெட்டு.

''அப்படியா?''

கடை இளைஞன் அவனையும் கதாவையும் மாறி மாறிப் பார்த்தான்.

சட்டென்று அந்தக் கடையோடு ஒரு பந்தம் அறுந்து அங்கும் தான் அந்நியன் ஆன வெறுமை.

'டேக் இட் ஈஸி.'

தனக்குள் சொல்லிக் கொண்டான்.

இப்படிச் சொல்லிச் சொல்லி தேற்றித் தேற்றித்தான் ரமேஷ் தன்னந்தனியாகத் திருவொற்றியூரில் 'லேத்' வைத்தான். எல்லாக் கம்பெனிகளும் மத்திய மாநில அரசாங்கங்களும் அவன் சர்ட்டிபிகேட்டைப் பார்த்து விட்டு அதைத் திருப்பி அவனிடமே நகர்த்திய போதும் அதையேதான் சொல்லிக் கொண்டான்.

அப்படி சொல்லிக் கொள்ள சொல்லிக் கொடுத்தவர் கப்பையா.

உடம்பில் சாதாரண சட்டை. எப்போதாவது ஒரு சிவப்பு தோவர்த்துத் துண்டு.

''என்னா மானீட்டரு. சோத்து மணி அடிக்கலியா?'' என்று கலகலவென்று சிரித்தவாறே கேட்பார்.

எட்டு மணிக்கெல்லாம் ஒரு எமகாத கப்பசி அந்த வயசில். கால் ரூபாய்க்குப் பட்டாணி அல்லது வேர்க்கடலை.

கப்பையா காசை வாங்கிக் கொண்டு இரண்டையும் கொஞ்சம் அள்ளி ஒரு காகிதத்தைச் சுருட்டி கொழுக்கட்டை பின்னுவது போல் ஒரு மடிமடித்து நீட்டுவார்.

மதிய உணவும் சத்துணவும் உதயமாகாத காலம்.

ரமேஷ் அதைச் சாப்பிட்டு விட மாட்டான். வாங்கி நிஜார்ப் பையில் வைத்துக் கொள்வான்.

அது மத்தியானம் ஒரு மணிக்கு.

அவனவன் சாப்பாட்டுக் கேரியரும் டிபன் பொட்டலமுமாகப் பிரிக்கும் போது பள்ளி வாட்டர் டேங்க் எதிரே ஒரு தனி மூலையில் அதைப் பிரிப்பான்.

''என்ன மானீட்டரே, மோகத்தைத் தொங்கப் போட்டுக்கிட்டா பொளுது நடந்துடுமோ... சமாளிக்கணும் கண்ணு சமாளிக்கணும். ஆம்பிளைப் பிள்ளையில்லே...?''

சொல்லி விட்டு கப்பையா ஒரு சிரிப்பு சிரிப்பார்.

அந்த சிரிப்பு ஒரு தனி சாதி.

கிண்டலோ உபதேசமோ உற்சாகமோ ஊட்டாத தனி ரகம்.

இத பாரு... இதான் இப்படித்தான் என்று நிஜமாகத் தான் இருக்கிற இருப்பை அப்படியே பகிர்ந்தளிக்கிற சிரிப்பு.

ஹாஸ்டல் தினங்களின் இருளில், அங்கு வாங்கித் தின்ற அநாதைச் சோற்றின் இழிவில், அந்தத் தாழ்வு பொறுக்க மாட்டாமல் வெளி ஹாலில் நூற்றுக் கணக்கான பிச்சைக்காரர்களுக்குப் போடப்படும் உணவைப் பார்த்தவாறே தனக்கும் இதுதான் என்று உணர்ந்த உணர்வின் தாழ்விலிருந்து கப்பையாவின் சிரிப்பு ஒரு லைட் அவுஸ் வெளிச்சம் போல் திசை காட்டியிருக்கிறது.

கப்பையா மாஜி பாக்ஸர்.

சார்பட்டா பரம்பரை. இடியப்ப நாய்க்கர் பரம்பரையைச் சேர்ந்த கிங் நாட்டேரி சார்பட்டா அருணாசலத்தை எஸ்.ஐ.ஐ.ஏ. கிரவுண்டில் ஆறாவது ரவுண்டில் வயிற்றில் குத்திச் சாகடித்ததைக் கதை கதையாகச் சொன்னவர்.

''எனக்கும் பாக்ஸிங் கத்துக்கணுமே நாய்க்கரே''

''அதுக்கு இன்னா. கத்துகிட்டா போச்சு.''

அவன் கேட்பதையும் விடவில்லை. அவர் கற்றும் தரவில்லை. பாக்ஸிங் இலக்கு மாறி விட்டது.

அவரது பெரிய பையன் மிலிட்டரிக்கு ஓடிப் போனவன் பாகிஸ் தான் போரில் வடக்கே மாண்டான். மனைவி ஏரிக்குப் போனவள் ஆற்றிலே போய் விட்டாள். கப்பையா நாய்க்கர் தம்பியைக் கத்தியால் குத்தி விட்டார்கள். குடும்பச்



(பெண் பார்க்கும் போது)

''பெண் எதுவரை படிச்சிருக்கு?''

''இந்த வாரம் குமுதம், கல்கண்டு, கல்கி, ஆனந்தவிகடன் வரை!

- நல்லாலம் காசிதாசன்

சொத்து ஏலத்தில் போயிற்று. இரண்டாவது பெண்ணைப் பாம்பு கடித்தது.

புயல்கள் ஒன்றிரண்டில்லை.

கப்பையா நாய்க்கர் வேர் ஊன்றிய ஆல மரம் போல் நைனியப்ப நாய்க்கன் தெரு மூலையில் குலுங்கிக் குலுங்கிச் சிரித்த வாறே பட்டாணி விற்றார்.

அவன் கேட்பான்.

''எப்படி தாங்கறீங்க நாய்க்கரே?''

''சமாளி கண்ணு சமாளி.''

''என்னால முடியலியே... வீட்ல அம்மா கஷ்டப்படறாங்க... அப்பாவுக்கு டி.பி.''

''அட போடா பிஸ்கோத்து! எல்லா லொட்டு லொஸ்க்கையும் உள்ளங்கை யிலே வச்சு ஒரு அரை அரச்சு நீர்த்தம் விட்டு முழுங்கிடு.. யாரு பெரியவன்... அதுவா நாம்பளா?''

நச்சென்று மண்டையில் அடிக்கும் வாக்கு. ''உங்களுக்கு என்ன வீடு வாசல் கொழந்தை குட்டி தொழில் எல்லாம் இருக்கு.''

''ஆஃகாம்... பெரிய பூசணிக்கா. பெரிய கோடீஸ்வரன் ஒருத்தன் எல்லாத்தையும் தூக்கிப் போட்டுட்டு திருவொத்தூருக்கு ஓடி வந்திருக்கான், பரதேசியா வந்திருக்கான். அவனக் காட்றேன் வர்றியா?''

ரமேஷுக்கு அவர்தான் திருவொற்றி யூரைக் காட்டியது.

பட்டினத்தார் சமாதிக்கு அழைத்துச் சென்று ''வடகோடு உயர்ந்தென்ன தென் கோடு தாழ்ந்தென்ன வான்பிறைக்கே'' என்று பாடினார். கொஞ்சம் மதராஸ் சாயலில்.

''இவர் சாமியாரு'' என்று பட்டினத் தாரின் பக்குவத்திற்கு அர்த்தம் கற்பிக்கிற மாதிரி கப்பையா நாய்க்கருக்குப் பதிலடி கொடுத்தான்.

''அப்போ நீங்க யாரு?''

சட்டைக் காலர் பற்றி, தலை அதிர உலுக்கி உலுக்கிக் கேட்டது போலிருந்தது.

கப்பையா நாய்க்கர் ஒரு லேத் கடைக் குப் பக்கத்தில் அவனை உட்கார வைத்து அந்த முதல் பிரயாணத்தில் டீ வாங்கிக் கொடுத்தார்.

''மானீட்டரே புழு மாதிரி நெளிஞ்சா ஒரு புண்ணாக்குக்கும் உதவ மாட்டே! ஒதைச்சு எழு. இல்லே ஒதறிட்டு பட்டினத் தாரு மாதிரி கௌம்பு.''

ரமேஷ் முதலில் சொன்னதைச் செய் தான். கப்பையா நாய்க்கர் டீ வாங்கிக் கொடுத்த லேத்துக்கு அப்பிரெண்டிஸ்ஸாக வந்து சேர்ந்தான்.

''தம்பி படிச்ச புள்ளை போலிருக்கு. நாகக்கு எல்லாம் பார்த்தா நடக்காது. இது தொயிலு.'' லேத் முதலாளி.

## அருள்வாக்கு



புகையிலையைப் பச்சையாய் உப யோகிப்பது, ''புகை''யிலை என்றே அதற்குப் பெயர் இருப்பதற்கேற்ப அதை நெருப்பில் புகைத்து இழுப்பது ஆகி யவையும் அநாசாரம் என்று சாஸ்திரம் தள்ளியிருக்கிறது. உடம்புக்குக் கெடு தல், அதாவது அநாரோக்யம் என்று வைத்ய சாஸ்திரப்படி தள்ளியதையே சித்தத்துக்கு கெடுதலைச் செய்யும் அநா சாரம் என்று தர்ம சாஸ்திரம் ஒதுக்கி வைக்கிறது. மாம்ஸத்தில் ஒருவிதமான கெடுதல், மதுவில் இன்னொரு விதமான கெடுதல் என்றால் புகைபிடிக்கிறதிலும் தனியாக ஒரு பெரிய கெடுதல் இருக் கிறது. அதாவது ஒருத்தன் இந்த கெட்ட காற்றை விடுகிற போது பக்கத்திலிருப் பவனுக்கு உள்ளேயும் போய் அது கெடு தல் பண்ணுகிறது. ''நான் எப்படி வேண்டுமானாலும் கெட்டுப் போவேன்; என்னை யார் தடுக்கிறது?'' என்று ஒருத் தன் சொன்னாலும் சொல்லலாம். ஆனால் ''பிறத்தியானைக் கெடுப்பேன்; அவன் இழுக்கிற காற்றை விஷமாக்கு வேன்; என்னை யாரும் கேட்கப்படாது'' என்று எவனும் சொல்ல முடியாது. அத னால் சமூஹ நன்மை உத்தேசித்து, பீடி ஸிகரெட்தான் பெரிய விரோதி என்று அதைத் தடை செய்ய வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.

திருவொற்றியூரில் எத்தனையோ திருப்பங்கள். கிரீஸ் கறை. க்ரூட் ஆயில் காக்கிக் கால் சட்டை. ஒற்றை அறையில் ஐந்து பேருடன் கூட்டு வாடகைக் குடியிருப்பு. கொசு... மூட்டைக் கடி.

சுதா.

இரண்டாவது சந்திப்பில் அம்பு பட்டு விழுந்த பறவை மாதிரி அவள் பார்வையில் அடைக்கலமானான்.

''நான் லேத்ல அப்ரண்டிஸ்.''

''நான் கஸ்டம்ஸ்ல ஸ்டெனோ.''

இருவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

''இந்த அழுகுணி அறிமுகம்லாம் எதுக்கு ரமேஷ்?''

''ஒனக்கு ஸ்நோ பவுடர் வாங்கித் தரக் கூட எனக்கு வசதியில்லே.''

''என்ன பண்ணலாங்றே?''

''.........''

''பேசாம நீ எனக்கு வாங்கிக் கொடுத் துடுங்கிறியா... ஒக்கே! இல்லே வெய்ட் பண்ணலாங்கிறியா ஒக்கே...''

''ஸாரி.. ஸீ யூ... குட் பை.'' அவன் சீரியஸாக நடிக்க முயன்றான்.

''அதுக்கும் ஒகே. சொல்வேன்னு பார்க்கறியா? ஒதைப்பேன்.''

''நீயா?''

''இல்லே. ஆளை வச்சு!''

சுதா முக்கியத் திருப்பம்.

''காதலாவது கத்திரிக்காயாவது. கம் அவுட் மேன்!''

உதவி செய் பெண்ணே. அவன் மனசிற்குள் சொல்லிக் கொண்டான். அது கேட்டுப் பெறும் உதவியல்ல. பிம்பம் காட்டும் உதவி. நீ ஆண். நீ மனிதன். நீ நிற்க முடியும். நீ நிலைக்க முடியும். நீ ஊழியன் அல்ல. நீ தலைவன்.

இதுதான் அவன் எதிர்பார்த்த பிம்ப உதவி.

அவள் வழங்கினாள்.

ஸ்நோவும் பௌடரும் என்ன வி.சி. ஆரும், ஃபிரிட்ஜும் கை சொடுக்கினால் வீட்டிற்கு வரும் வரை காத்திருந்த உதவி.

சித்திரையின் கடைசி முகூர்த்தத்தில் அவர்கள் கல்யாணம்.

எல்லாம் தொடங்கியது ஒரு பட்டாணிக் கடையில். கிளை பிரிந்தது அங்கேதான்.

ஸ்தல யாத்திரைக்கு போய் வருவது போல் அங்கே போய் வரத் தோன்றியது. சுதாவுடன். அவன் மீது நூறு சதவீத நம்பிக்கையை வைத்திருந்த இரண்டாவது நபர் அவள்.

கூப்பிட்டவுடனே கிளம்பி விட்டாள்.

**''என்ன நின்னுகிட்டே இருக்கீங்க?''**



அவன் மனசு ஒரு சுற்று வட்டம் பூர்த்தி செய்து விழிப்பு நிலை கண்டது.

''ஒன்னுமில்லே. ஒரு நூறு பட்டாணி. நூறு வேர்க்கடலை'' என்று ஆர்டர் சொன்னான் கடை இளைஞனிடம்.

அவன் எடுக்கக் கல்லாவிலிருந்து இறங்கிய போது பையன் ஒருவன் வந்தான்.

''வணக்கம் தலைவரே.''

''என்ன பையா சோத்து மணி அடிக்கலியா?''

''அதை அடிச்சிருந்தானுங்கன்னா நான் ஏன் உன்னைத் தேடி வரப் போறேன்?''

ரமேஷ் பையனைப் பார்த்தான். முகத்தில் சோற்றுக் கவலை. அவன் சாதி... அவன் ஹாஸ்டலில் இப்போது மத்தியானம் சத்துணவு உண்டு. எனினும் ஏழு மணி நேரம் காத்திருக்க வேண்டுமே.

''என்ன பட்டாணியா வேர்க்கடலையா?'' என்று பையனைக் கேட்டான் கடை இளைஞன்.

''எங்கிட்டே இருக்கறது ஒரு ரூபா.''

கடை இளைஞன் கொடுத்த பட்டாணி வேர்க்கடலை பாக்கெட்டுகளை வாங்கும் போது ஹாஸ்டல் பையன் மீது அபரிமிதமான ஒரு பாசம் சுரந்தது.

''இந்த இரண்டையும் அவனிடமே கொடுத்து விடலாமா?''

சில உணர்வுகள் கருத்தளவில் அழகானவை. அற்புதமானவை.

செயல் வடிவிற்குப் போகும் போது அவை அபத்தமாகி விடலாம்.

பணம் கொடுத்து விட்டு நடப்பதின் மிச்ச சொச்சத்தைப் பார்க்க ரமேஷ் நின்றான்.

உள்ளே கடையிலிருந்து பட்டாணி அள்ளி வந்து காகிதத்தைச் சுருட்டி அதில் போட்டு மடித்துக் கொழுக்கட்டை பின்னுவது போல் மூடி அவனிடம் நீட்டினான் இளைஞன்.

''சமாளி கண்ணு சமாளி'' என்று பையனைப் பார்த்துச் சொல்ல வேண்டும் போல் ரமேஷுக்குத் தோன்றிற்று.

ரூபாய் கைமாறியது.

பொட்டலத்தோடு பையன் பார்வையிலிருந்து மறைந்தான்.

''நீங்க யாருன்னு தெரியலியே...''

''ஒங்களுக்குத் தெரியாது. அப்பாவுக்குப் பழக்கம்.''

பொட்டலங்களோடு திரும்பிய ரமேஷைப் பார்த்து, ''பொறப்படுவமா?'' என்றாள் சுதா.

அவன் ஹாஸ்டலைக் காட்டி விட்டு கந்தசாமி கோயிலுக்கு அழைத்துச் சென்றான். ஒரு பயணத்துக்கு பௌதீகமாக அர்த்தம் வேண்டுமே!

## மனநல மருத்துவர் எல். எம். சக்திவேல் சொன்ன உண்மை நிகழ்ச்சி :

**சு**குமாரை (பெயர் மாற்றப்பட்டுள்ளது) என்னிடம் அழைத்து வந்தார்கள்.

''வி. ஏ. ஃபைனல் எழுத வேண்டும். பயப்படுகிறான். தன்னால் பாஸ் பண்ண முடியாது என்று ஏனோ ஒரே பயம். பரீட்சை என்று சொன்னவுடனே ஒரே படபடப்பு.'' என்றனர் பெற்றோர்.

இத்தனைக்கும் சுகுமார் பி. காம் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி விட்டு, வி. ஏ. தேர்விலும் இன்டரில் பாஸ் செய்தவன்.

''சுகுமார், ஏன் உன்னால் ஃபைனல் பரீட்சை எழுத முடியாது?'' என்று கேட்டேன்.

''நான் ஒரு மக்கு. வி.ஏ. பாஸ் பண்ணக் கூடிய அளவுக்கு இன்டலிஜென்ட் இல்லை. மடமடவென்று 'திங்க்' பண்ண முடியாது என்னால். எதற்குப் பரீட்சை எழுதி அவமானப் படணும்? போகாமல் இருப்பதே நல்லது. பி. காம்., வி. ஏ. இன்டர் இரண்டிலும் முதல் வகுப்பில் தேறிவிட்டு, இப்போது இறுதியில் தோல்வி அடைந்தால் எல்லாரும் துளைத்துத் துளைத்துக் கேட்பார்கள்...''

''இப்போது நீ நிம்மதியாக இருக்கிறாயா? இல்லையே? ராத்திரி சரியாகத் தூங்க மாட்டேன் என்கிறாய். வீட்டில் சரியாகப் பேசுவதில்லை. எதையோ பறிகொடுத்தவன் மாதிரி பரிதாபமாக இருக்கிறாய். இது நன்றாகவா இருக்கிறது? மனது வைத்து நன்றாகப் படித்துப் பரீட்சை எழுதி, நிம்மதியாக இருக்கலாமே?'' என்றேன்.

சுகுமாரிடம் இதற்குப் பதில் இல்லை.

**வ**சதியான குடும்பம். ஒரே பிள்ளை. அதனால் கொஞ்சம் செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்டவன் சுகுமார். சின்னதாக ஏதாவது சொல்லி விட்டாலே மனம் ஒடிந்து போய்விடுகிற அளவுக்கு சென்ஸிடிவ். ''எங்கள் மகன் ரொம்ப அமைதியானவன். ஒரு வம்பு தும்பு கிடையாது!'' என்று பெற்றோர் பெருமையாகச் சொல்லிக் கொள்ளுவார்கள். பொத்திப் பொத்தி வளர்த்த அருமைப் பிள்ளை. நண்பர்கள் அதிகம் கிடையாது. உடற் பயிற்சி, ஓட்டம், விளையாட்டு, ஹாபிஸ் - எதுவும் கிடையாது.

'ரொம்ப சாதுப் பையன். ரொம்ப அடக்கமான பையன்' என்று குடும்பத்தில் சொல்லிச் சொல்லி, அவனுடைய உண்மை



* நடிப்பு : பூர்ணராஜு

யான பர்சனாலிடியை ஒரு முகமூடி கொண்டு மறைத்தே வந்திருக்கிறார்கள் என்பது புரிந்தது.

'நம்மை நல்ல பையன் என்று நினைத்திருக்கிறார்கள். அதனால் அதிர்ந்து

பேசக் கூடாது. சத்தம் போடக் கூடாது. போட்டால் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள்?' என்ற பயம் - எந்தக் காரணத்தைக் கொண்டும் அந்த இமேஜ் மாறிவிடக் கூடாதே என்ற கவலை - குமாருக்கு எப்போதும் மனத்தில் இருந்தது. அவனது தன்னம்பிக்கை தளர்ந்து போய்க் கிடந்ததற்கு இதுவே காரணம் என்று தெரிந்தது.

குமாரை முதலில் அமைதிப்படுத்த பிராக்ரஸிவ் ரிலாக்சேஷன் தெரபி தொடங்கி னேன். கூடவே மருந்தும் கொடுத்தேன். சைக்கோ-தெரபி மட்டுமே கொடுத்து வந்தால் 'விரைவில் குணமாகாது என்ப தாலேயே மருந்து. அதிலும் மருந்து - மாத்திரை எல்லாம் பய உணர்ச்சியைக் குறைக்கவே. செயற்கையாகவேனும் தைரி யம் மனத்துக்குள் தோன்றும். தைரியம் கொஞ்சம் உண்டான உடனே, ஒரு நம் பிக்கை முளைக்கத் தொடங்கும். மனோ தத்துவரீதியாகப் பிரச்னையை அணுக இது

## பயத்தை உதறுங்கள்; பழயேறிச் செல்லுங்கள்!

ஓர் உத்தி.

''நீ என்ன பண்ணணும், எப்படிப் பண்ணணும்'' என்று போதனை தொடர்ந் தது. ''பயம், நிழல் மாதிரி கூடவே தொடர்ந்து வருவது போல் தோன்றும். அதைத் துணிச்சலோடு எதிர்த்து நிற்க வேண்டும்!'' என்று குமாருக்குச் சொன் னேன்.

பயத்துக்குக் காரணம் என்ன என்று விளக்கினேன். பயம் என்பது துணிச்சலும், தன்னம்பிக்கையும் இணைந்து எதிர்த்து நிற்கும் போது மனத்திலிருந்து இடத்தைக் காலி பண்ணிக் கொண்டு போய்விடும். பயத்தைத் துடைத்தெறிந்து விட்டால் வாழ்க்கையே எப்படி மாறிவிடும் என்று எடுத்துச் சொன்னேன்.

குமார் மாற ஆரம்பித்தான்.

அடுத்ததாக 'ஆட்டோ சஜஷன்' முறை யைச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கி னேன்.

'நான் திறமையானவன்; நான் தைரிய மாக இருக்கிறேன்; நான் தன்னம்பிக்கை யோடு இருக்கிறேன்' என்று தினசரி திரும்பத் திரும்பத் தனக்குத் தானே சொல்லிச் சொல்லி, தைரியம் அடைவது.

தைரியம் பிறந்தது.

மாத்திரைகளைக் குறைத்தேன்.

பயம் அறவே போய், தன்னம்பிக்கை உருவாக குமாருக்கு மூன்று மாத 'கௌன் ஸலிங்' தொடர்ந்தேன்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு பரீட்சை எழுதினான் குமார்.

பி. ஏ. ஃபைனலில் தேறினான்.

நல்ல வேலையில் அமர்ந்தான்.

அவ்வப்போது பயிற்சிகள் செய்து வந்த தோடு, எனக்கு போனும் செய்து வந்



பயம் என்பது, துணிச்சலும் தன்னம்பிக்கையும் இணைந்து எதிர்த்து நிற்கும் போது மனத்திலிருந்து இடத்தைக் காலி பண்ணிக் கொண்டு போய்விடும்.

தான்.

அடுத்த பரீட்சை வந்தது. எம். பி. ஏ. தேர்வு. குமாருக்குப் பழைய பயம் மீண்டும் தோன்றியது. தோற்றுப் போய் விடுவோம் என்ற அதைரியம். அவமான மாகிவிடுமே என்ற அச்சம்.

பழைய பயிற்சிகளைத் தொடர்ந்தேன். தன்னம்பிக்கை எப்போதும் இருக்க வேண் டும் என்று வலியுறுத்தி வந்தேன்.

தன்னம்பிக்கை என்பது தாமாக மனத் தில் தோற்றுவித்து வளர்க்கும் ஒன்று. மகாத்மா காந்தி சொல்லுவார் : 'தன்னை ஆளத் தெரியாதவன், பிறரை ஆள முடியாது' என்று!

இருங்கள் :

குமார் இப்போது எம். பி. ஏ. வும் பாஸ் செய்து விட்டான்! உள்ளுக்குள் சின்ன தாக முளைவிட்ட தன்னம்பிக்கை இப் போது அவனுக்குள் வளர்ந்து வேர் விட்டி ருக்கிறது.

– சாருகேசி



# “தன்னம்பி பாத்திரங் படைக்கி



* மனதில் உறுதி வேண்டும்

**நீங்கள் கவனித்துப் பார்த்தால் என் கேரக்டர்களைப் பெரும்பாலும் தன்னம்பிக்கை உடையனவாகவும், புத்திசாலித்தனம் சற்று அதிகம் உள்ளனவாகவும்தான் சிருஷ்டிக்கிறேன்.**

● *சமூக மாற்றம் அல்லது வளர்ச்சியில் ஒரு கலைஞனின் பங்கு என்னவாக இருக்கிறது?*

●● சினிமா என்றல்ல; எந்த ஒரு கலைஞனுமே ஜனங்களுக்குப் பதில் சொல்ல எப்போதும் கடமைப்பட்டிருக்கிறான். சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் தன்னுடைய ஒவ்வொரு படைப்புக்கும் அவன் சரியான காரணம் வைத்திருக்க வேண்டும். சமூக வளர்ச்சி என்று பார்க்கப் போனால் - நடைமுறை வாழ்க்கையை ஒரு கலைப் படைப்பு பிரதிபலிக்கலாம். அல்லது விமர்சிக்கலாம். ஆனால் தவறான கண்ணோட்டத்தை ஏற்படுத்தி விடக் கூடாத பொறுப்பு ஒவ்வொரு கலைஞனுக்கும் இருக்கிறது.

● *இன்றைய இளைஞர்களை மிக அ*
*சினிமா. இந்த மீடியா சரியான முறை*
*கிறதா?*

●● என் அளவில் நான் மிக
கிறேன். என்னுடைய முதல் படத்திலி
வது ஒரு விஷயமாவது அவசியமா
ஏற்படுத்தக் கூடியதாகத்தான் சொல்லி வ
பார்த்தால் என் கேரக்டர்களைப் பெ
உடையனவாகவும், புத்திசாலித்தனம் ச
தான் சிருஷ்டிக்கிறேன். நான் ஒரு ப
கொடுத்து விட்டேன் என்றால் அது மக்க
டும். வெறும் கிளர்ச்சியூட்டுவது மட்டு
யான மாற்றங்களை நான் எதிர்பார்க்
பொறுப்பு இருப்பதாகவே கருதுகிறேன்
'வானமே எல்லை' படத்தை எடுத்துக்
வருஷ சர்வீஸில் இந்தப் படத்தை ஓ

# ்கை மிகுந்த
# களையே
# ன்!"





● வானமே எல்லை

றேன். கிட்டத்தட்ட இருநூறு, முந்நூறு பேர் - அத்தனை பேரும் பதினெட்டிலிருந்து இருபத்தைந்து வயதிற்குட்பட்டவர்கள் - இந்தப் படத்தைப் பார்த்து விட்டுத் தங்கள் மனதில் இத்தனை நாள் இருந்து வந்த தற்கொலை எண்ணம் போய் விட்டதாகவும், தன்னம்பிக்கை வளர்ந்திருப்பதாகவும், சாதிக்கும் உத்வேகம் பெருகியிருப்பதாகவும் லெட்டர் போட்டிருக்கிறார்கள். எத்தனை சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா! ஏதோ ஒரு வகையில் சமூக எழுச்சிக்கு, மாற்றத்துக்கு நானும் ஒரு காரணமாக இருந்திருக்கிறேன் என்பது எத்தனை புத்துணர்வு தருகிறது தெரியுமா!

● ***தன்னம்பிக்கை தரும் படங்களாக - உங்களது முந்தைய படங்களான, 'மனதில் உறுதி வேண்டும்', 'உன்னால் முடியும் தம்பி', 'புன்னகை' இன்னும் பலவற்றைச் சொல்லலாம். ஆனால் அவையெல்லாம் ஏற்படுத்தாத ஒரு பாதிப்பை இந்த வானமே எல்லை ஏற்படுத்தியிருப்பதன் காரணம் என்ன? இத்தனைக்கும் இதில் கொஞ்சம் பிரசார தொனி அதிகம்.***

●● இந்தப் படத்திற்கு அமோக ஆதரவு இருந்தது வாஸ்தவம்தான். ஆனால், வர்த்தக ரீதியாகத் தோல்வியடைந்த 'உன்னால் முடியும் தம்பி' கூட இளைஞர்களிடையே இதைவிட அதிகமான வரவேற்பைப் பெற்றிருக்கிறது. இந்தப் படம் எடுக்கிற நாளில் 'இதென்ன கே.பி. வயதும் வாழ்வும் மாதிரி

● உன்னால் முடியும் தம்பி



**...கம் பாதிக்கும் ஒரு சாதனம் ...யில்தான் உபயோகிக்கப்படு**

...ர்மையாகத்தான் செயல்படு ...ந்தே எல்லாவற்றிலும் ஏதா ...ன, ஒரு நல்ல பாதிப்பை ...றுகிறேன். நீங்கள் கவனித்துப் ...ரும்பாலும் தன்னம்பிக்கை ...றது அதிகம் உள்ளனவாகவும் ...டத்தை முழுசாக முடித்துக் ...ள் மத்தியில் பேசப்பட வேண் ... என் நோக்கமல்ல. உருப்படி ...றேன். எனக்கு ஒரு சமூகப் ...ர். உதாரணத்திற்குச் சமீபத்திய ...கொள்ளுங்கள். என் இத்தனை ...ரு சாதனையாகவே கருதுகி

படம் எடுக்கிறார்' என்று கூடப் பேசியிருக்கிறார்கள். ஆனால் நான் சந்தித்த பல கல்லூரி மாணவர்கள் (குறிப்பாக மாணவிகள்) இந்தப் படத்தை நானே எதிர்பார்க்காத அளவுக்கு விரும்பியிருக்கிறார்கள். தங்கள் சிந்தனைப் போக்கில் பெரும் மாறுதல்களை இப் படம் ஏற்படுத்தியிருப்பதாகச் சொல்லுகிறார்கள். இன்னும் கூட 'மனதில் உறுதி'யைப் புகழ்பவர்கள் உண்டு. படம் பார்த்தபின் அந்த கேரக்டர் 'நந்தினி' போல தன்னம்பிக்கையுடன் செயல்பட முடிவதாகப் பலர் சொல்கிறார்கள். இதையெல்லாம் பார்க்கும் போது, படம் ஓடாவிட்டால் என்ன என்று கூட எண்ணத் தோன்றுகிறது. என் நோக்கம் வெற்றி பெற்று விடுகிறது. அது போதும் எனக்கு.

● ***நல்லது. உங்களின் நல்ல படங்களில் கூட கமர்ஷியல் ஆக்ரமிப்பு அதிகம் தெரிவது ஏன்? உதாரணமாக புன்னகை மன்னன். காதலில் தோல்வி ஏற்பட்டால் தற்கொலை செய்து கொள் என்று சொல்வது போல் ஏன் எடுத்தீர்கள்? இது தன்னம்பிக்கைக் குலைப்பு இல்லையா? அப்புறம் வறுமையின் நிறம் சிவப்பு. பிரச்னையை எடுத்துக் கொள்ளும் நீங்கள் ஏன் தீர்வுகளைச் சரியாகத் தருவதில்லை?***

●● நீதி போதனையோ, சமூகச் சீர்திருத்தமோ மட்டும் ஒரு படத்தை முழுக்க முழுக்க ஆக்ரமிக்க முடியாது. நீங்கள் கேட்பது போல புன்னகை மன்னனில் இரண்டு பேரையும் தற்கொலை இல்லாமல் சேர்த்து வைத்திருக்கலாம்தான். அப்போதும் படம் ஓடியிருக்கும்தான். அப்புறம் ஏன் தற்கொலை சீன் வைத்தீர்கள் என்று கேட்கா தீர்கள். அப்படி ஒரு படம் கொடுத்து விட்டோமே என்ற அரிப்பில்தான் அதற்குப் பதில் சொல்லும் முகமாக வானமே எல்லை எடுத்தேன். தற்கொலை கூடாது என்று அழுத்தம் திருத்தமாக அதில் சொல்லியிருக்கிறேன். அடுத்தது வறுமையின் நிறம் சிவப்பு. அதற்கென்ன? ஒரு நல்ல குடியில் பிறந்த பையன், தந்தையுடன் ஏற்பட்ட கொள்கை முரண்பாட்டால் வீட்டை விட்டு வெளியேறித் தனியாக வாழ முயல்கிறான். கஷ்டப்படுகிறான். தன்னம்பிக்கையுடன் சலூன் கடையில் வேலை பார்க்கிறான். சொந்தக்காலில் நிற்கிறான். இதற்கு மேல் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?

● ***சரி. உங்கள் பார்வையில் இன்றைய இளைஞர்கள் எப்படி இருக்கிறார்கள்? அவர்களின் சிந்தனைப் போக்கு எப்படி இருக்கிறது?***

●● எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. மாணவர்கள் தீவிரமாகச் சிந்திக்கிறார்கள். எதையும் அலசும் மனோபாவம் தெரிகிறது. கோயமுத்தூர் பி.எஸ்.ஜி. கல்லூரிக்கு சமீபத்தில் சென்றிருந்தேன். அவர்கள் 'சிந்தனை மன்றம்' என்ற அமைப்பை நடத்தி வருகிறார்கள். கிட்டத்தட்ட இருநூறு ஆண்களும் நூற்றி எழுபத்தைந்து பெண்களும் உறுப்பினராக இருக்கிறார்கள். புதுசு புதுசாகச் சிந்திக்கிறார்கள். விதவிதமாகப் படிக்கிறார்கள். நிறைய சினிமா பார்த்தாலும் அவர்கள் சிந்தனையில் தெளிவு இருக்கிறது. எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நாளைய பாரதம் பிரகாசமாக இருக்கப் போகிறது.

சந்திப்பு : **பா. ராகவன்**

*பாலசந்தர் வண்ணப்படமும் அட்டை (நடிப்பு : சிவகுமார்) வண்ணப்படமும் தன்னம்பிக்கைக் கட்டுரைகள் தொடர்பான மற்ற படங்களும் :* **கோபிநாத்**



## வருமானம் எப்படி இருக்க வேண்டும்?

நமது வருமானங்கள் நமது காலணிகளைப் போன்றதே. சிறியதாக இருக்குமானால் நம்மைக் கடிக்கின்றது. மிகப் பெரியதாக இருக்குமானால் தடுக்கி விழச் செய்கிறது.

சொன்னவர் : கால்டன்

தகவல் : சக்தி கமலேஸ்வரன்

கோரக்பூர் ஐ. ஐ. டி. யைச் சேர்ந்த வல்லுநர்கள், விபத்துக்களில் கை இழந்தவர்களுக்கான செயற்கைக் கை உருவாக்கியுள்ளனர். மூளை தரும் கட்டளைகளைக் கொண்டே இந்தச் செயற்கைக் கையை இயக்க முடியும் என்பதுதான் தனிச் சிறப்பு. "பயோனிக் ப்ராஸ்தீசஸ்" என்று பெயர் கொண்ட இத்தகைய செயற்கைக் கை உருவாக்கப்படுவது இந்தியாவிலேயே இது முதல் முறை! மூளையின் கட்டளையை ஏற்கும் எலெக்ட்ரானிக் கருவி அதை எலெக்ட்ரிக் மோட்டாருக்குச் செலுத்தி, கையையும் விரல்களையும் இயக்க வைக்கிறது!

ஆதாரம் : சண்டே

தகவல் : சோ பங்க

# பாண்டியன் மகள்

## இதுவரை படிக்காதவர்களுக்கு...

கங்கை கொண்ட ராஜேந்திரனின் மகள் வயிற்றுப் பேரன் முதற் குலோத்துங்கன் சோழ அரியணையேறிய காலம். நாட்டில் தாற்காலிகமாக அமைதியேற்படுத்திவிட்டு, அமைச்சர் பல்லவராயனிடமும் இளவல் விக்கிரம சோழனிடமும் நிர்வாகத்தை ஒப்படைத்து விட்டு, தான் பட்டமேற்கு முன்னரே தொடங்கிவிட்ட சளுக்கியப் போரைத் தொடரச் சென்று விடுகிறான் குலோத்துங்கன். அடங்கியிருந்த பாண்டியர், நாட்டின் சிக்கலான சூழ்நிலையையும் சோழர் படையின் பெரும் பகுதி வடக்கே சென்று விட்ட அந்தத் தருணத்தையும் சாதகமான சூழ்நிலையாகக் கருதி, இழந்த பாண்டிய நாட்டை முழுதுமாக மீட்க முயல்கின்றனர். பாண்டிய மார்த்தாண்டன் தன் மருமகன் மாறவர்மனை மதுரை அரியணையில் அமர்த்தும் முயற்சியில் முதலில் மேலைமங்கலத்தை எதிர்பாராது தாக்கிக் கைப்பற்றுகிறான்.

திருவீந்திரபுரத்திற்கு வந்த சோழ இளவரசி அம்மங்கை தேவியைக் கடத்திச் சென்றுவிடுகிறான் மாறவர்மன். கவி திருநாரணபட்டரின் சீடன் அரையன் மதுராந்தகன் மேலைமங்கலத்திலிருந்து இளவரசியை மீட்டு, மேலைமங்கலத்தையும் பாண்டியனிடமிருந்து கைப்பற்றி, அமைச்சரின் பாராட்டையும் சோழ இளவலின் நட்பையும் அம்மங்கையின் காதலையும் பெறுகிறான். கவி இட்ட பணியை நிறைவேற்றப் பொதிகைக்கு வரும் அரையன் மதுராந்தகன், ஜடாவர்ம பாண்டியனின் மகள் கார்குழலியை மீட்டு, அங்கிருந்து சோழ நாட்டுக்கு அனுப்பிவிட்டு, சேரனின் கடற்படைத் தளத்தைத் தேடிச் செல்கிறான்.

சேரலாதரால் காஞ்சியில் பணியமர்த்தப்பட்டதாகக் கூறும் சேர ஒற்றன் சமுத்திரபந்தன் விழிஞத்தில் சேரர் மாறவர்மனுக்கு உதவும் நோக்கம் நிறைவேறாது எனவும் தெரிவிக்கிறான். பின் சேரனின் தலைநகருக்கு வரும் சமுத்திரபந்தன், பாண்டியருக்கு உதவ வந்திருக்கும் ஈழத்துத் தண்டநாயகனையும் இளவரசி அஞ்சனாதேவியையும் சந்தித்து, அவர்களிடமும் பாண்டியன் மகளைப் பற்றித் தெரிவிக்கிறான்.

### *13. நெருப்பில் விளைந்த பயிர்*

படைத்தலைவன் கங்காதரனது யோசனையின் பேரில் தலைநகர் வந்து, அவன் மாளிகையில் தங்கியிருந்த மாறவர்மனும் மார்த்தாண்டவர்மனும் சேர மன்னனையும் ஈழத்துத் தண்டநாயகனையும் சந்திக்க முயன்று கொண்டிருந்தனர்.

ஈழத்துத் தண்டநாயகன் சமுத்திரபந்தனுடன் பேசிக் கொண்டிருந்த அதே நேரத்தில், மார்த்தாண்டவர்மன் வீரபாகுவைச் சந்திக்க, அவனது அறையில் காத்துக் கிடந்தான். ஆனால் மாறவர்மனோ முன்னதாகச் சென்ற ஈழத்து இளவரசியைக் கண்டுவிட்டதால் அவளைப் பின்பற்றிப் போய், அவள் சமுத்திரபந்தனது அறைக்குச் சென்றதையும் விரைவில் ஈழத்துத் தண்டநாயகனும் அதே அறைக்குள் நுழைந்ததையும் கவனித்தவன், சமுத்திரபந்தனைத் தனியே மடக்கி விசாரிப்பது என்ற முடிவுடன் இருப்பிடத்திற்குத் திரும்பினான். அதற்கான குயுக்தியான திட்டமொன்றை வகுத்து, உரிய ஏற்பாடுகளையும் செய்தவன், தனது அறையில் மார்த்தாண்டவர்மன் திரும்பிவரக் காத்திருந்தான்.

சமுத்திரபந்தனிடம் உரையாடித் திரும்பிய ஈழத்துத் தண்டநாயகனுக்கு அறையில் மார்த்தாண்டவர்மன் காத்திருக்கும் செய்தியை அறிவித்தான் ஒரு வீரன். சமுத்திரபந்தன் கூறிய விவரங்களினால் கவலை அடைந்திருந்த வீரபாகு, இது குறித்து மேலும் சிந்தித்து முடிவு எடுத்த பின்பே பாண்டியத் தளபதியிடம் பேசுவது உசிதம் என்று தீர்மானித்ததால் அவ்வீரனை நோக்கி, "நான் மன்னரைக் காணச் சென்றிருக்கிறேன் என்று என்னைத் தேடி வருபவரிடம் கூறிவிடு" என்று சொல்லி விட்டு உள்ளே அமர்ந்திருந்த மார்த்தாண்டனைக் கவனிக்காதது போல் அஞ்சனாதேவியுடன் நடக்க ஆரம்பித்தான்.

மார்த்தாண்டவர்மனுக்கு வீரபாகுவின் நடவடிக்கைகள் பெரும் ஏமாற்றத்தையே விளைவித்தன. நொந்து போன மனத்துடன் தனது அறைக்கு வந்தான்.

மார்த்தாண்டவர்மனின் முகத்தில் தோன்றிய கவலையும் சோர்வும் மாறவர்மனைச் சற்று நிதானம் இழக்க வைத்தன.

"சென்ற காரியம் என்னவாயிற்று மார்த்தாண்டரே?"

"தண்டநாயகர் என்னைச் சந்திப்பதைத் தவிர்க்க முயல்வதாகத் தெரிகிறது," என்றான் மார்த்தாண்டன்.

விஷ்வக்சேனன்

''ஏன்?'' மாறவர்மன் கோபத்தில் இரைந்தான்.

''இரைந்து பேசாதே'' என்று எச்சரித்த மார்த்தாண்டன், ''அந்தக் காஞ்சி ஒற்றனை அவர்கள் சந்தித்திருக்கிறது. நாம் முதலில் சமுத்திரபந்தனைச் சந்திப்பது நலமென்று நினைக்கிறேன்,'' என்றான்.

மாறவர்மன் முகத்தில் விஷமப் புன்னகை ஒன்று நெளிந்தது. ''அதற்கு நான் ஏற்பாடு செய்து விட்டேன்'' என்றான்.

''என்ன ஏற்பாடு? எப்போது செய்தாய் மாறவர்மா?'' - புருவங்கள் முடிச்சிட்டுக் கொள்ளக் கேட்டான் மார்த்தாண்டன்.

''இளவரசியின் பெயரால் அவனை அஷ்டமுடி ஏரிக்கு வரும்படி ஓலையொன்றை அனுப்பி வைத்தேன்.''



மார்த்தாண்டன் திகைத்தான். "வரச் செய்து...?"

"நம் வீரர்கள் நால்வரை அனுப்பி, அவனை இங்கு அழைத்துவரச் சொல்லியிருக்கிறேன். வரமறுத்தால் வலுக்கட்டாயமாகக் கட்டி இழுத்து வரும்படியும் சொல்லியனுப்பி இருக்கிறேன்."

"அட முட்டாளே! காரியத்தைக் கெடுத்தாயே!" என்று கூவிய மார்த்தாண்டன், "அவன் படைத்தலைவருக்கு நெருங்கிய தூதன். மன்னருக்கு முக்கிய ஓலையொன்றுடன் வந்திருப்பவன். அவனை இப்படி நாம் முரட்டுத்தனமாக நடத்தியது படைத்தலைவருக்கோ, மன்னருக்கோ நாளை தெரிந்தால் நம் நிலைமை என்னவாகும்?" என்று இரைந்து விட்டு அவசர அவசரமாக அஷ்டமுடி ஏரியை நோக்கி விரைந்தான்.

அங்கு நிலைமை மார்த்தாண்டவர்மன் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக இருந்தது. சமுத்திரபந்தனது வாள் வீச்சில் கீழே விழுந்தவனைத் தவிர மற்ற மூவரும் கூடச் சமாளிக்க இயலாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். அதைக் கண்டு பிரமித்துப் போன மார்த்தாண்டவர்மன், உடனே தடுக்காவிடில் அந்த மூவரின் நிலையும் விரும்பத்தக்கதாக இருக்காது என்பதையும் புரிந்து கொண்டு, "நிறுத்துங்கள், நிறுத்துங்கள்!" என்று கூவியபடியே அவர்களை நெருங்கினான்.



அதற்குள் இன்னும் ஒருவனும் கையில் விழுந்த வாள்வெட்டுடன் சரிந்து விட்டிருந்தான். மற்றொருவன் கரத்திலிருந்த வாள், சமுத்திரபந்தனின் கடைசி வீச்சில் அவன் கரத்தை விட்டுப் பறந்து, ஏரியில் சென்று 'களக்' என்ற ஒலியுடன் விழுந்தது.

அலட்சியமாகத் திரும்பிய சமுத்திரபந்தன், "மார்த்தாண்டவர்மரா? வர வேண்டும், வரவேண்டும்! உமது வீரர்கள் தாமா இவர்கள்?" என்று வினவினான்.

அவன் குரலில் தொனித்தது வியப்பா, இல்லை ஏளனமா என்பது மார்த்தாண்டவர்மனுக்குப் புரியவில்லை.

"சமுத்திரபந்தரே, மன்னிக்க வேண்டும், சிறு தவறு நேர்ந்து விட்டது" என்று கூறியபடியே அவன் கைகளைப் பற்றிக் கொண்டான். "உங்களைச் சந்தித்து அழைத்துவர மாறவர்மன் அனுப்பியவர்கள் இவர்கள். முட்டாள்தனமாக நடந்து கொண்டு விட்டனர்" என்றவன் வீரர்களை நோக்கி, "ஏன் இன்னும் விழித்துக் கொண்டு நிற்கிறீர்கள்? ஓடுங்கள். நான் இவரை அழைத்து வருகிறேன்" என்று இரைந்தான்.

இரு வீரர்கள் கீழே விழுந்து கிடந்தவனைத் தூக்கிக் கொள்ள, கை வெட்டுப் பட்டவன் தடுமாறியபடியே அவர்களைத் தொடர்ந்தான்.

மீண்டும் திரும்பி சமுத்திரபந்தனை நோக்கிய மார்த்தாண்டவர்மன், "சமுத்திரபந்தரே, வாருங்கள் போகலாம்" என்று அழைத்தான்.

சமுத்திரபந்தன் முகத்தில் முறுவலொன்று தோன்றியது. "நான் இங்கு வந்தது வேறொருவரைச் சந்திக்க" என்றான்.

சங்கடத்துடன் நெளிந்தான் மார்த்தாண்டன். "தங்களை இங்கு சந்திக்கும்படி ஓலையனுப்பியது சமுத்து இளவரசியல்ல" என்றவன், மீண்டும் மன்னிப்புக் கேட்டான்.

"பின் யார் அனுப்பியது?" சமுத்திரபந்தனின் குரலில் போலியான வியப்பு இருந்தது.

"மாறவர்மன் அனுப்பிய ஓலை அது."

கருங்கல்லில் உளியால் தட்டுவது போல் நகைத்தான் சமுத்திரபந்தன். "தேவையானால் என்னை விருந்தினர் மாளிகையிலேயே சந்தித்திருக்கலாமே, அல்லது அழைத்திருந்தால் நானே வந்திருப்பேனே. பாண்டியத் தளபதி இப்படி அனாவசியமாகச் சங்கடப்பட நேர்ந்திருக்காதே" என்றான்.

அவன் சொற்கள் மார்த்தாண்டவர்மனின் நெஞ்சை அறுப்பது போலிருந்தது. மாறவர்மனை நினைத்துப் பற்களை நறநற வென்று கடித்தான்.

''சரி, வாருங்கள் போகலாம்'' என்ற சமுத்திரபந்தன் முன்னே நடந்தான்.

இருவரும் பேசியபடியே கொல்லத்தின் எல்லைப்புறத்தில் வரிசையாக நடப்பட்டு வளர்க்கப்பட்டிருந்த தென்னைகளின் நடுவே உட்புறமாகத் தெரிந்த கங்காதரனது மாளிகையை நெருங்கினர்.

''படைத்தலைவர் எப்போதும் நகரை விட்டுத் தள்ளி இருக்கும் தோப்புக்களையே தமது மாளிகைகளை அமைக்கத் தேர்ந்தெடுக்கிறார்'' என்ற சமுத்திரபந்தனது குரலில் விபரீதத் தொனி ஒன்று ஒலித்தது.

மார்த்தாண்டவர்மனுக்குத் தான் மலையோரத்துச் சரிவில் அமைந்திருந்த கங்காதரனின் மாளிகையில் தங்கியிருந்தது நினைவில் நிழலாடியது.

தோப்புக்குள்ளிருந்த அந்த மாளிகை பார்வைக்கு மிக நேர்த்தியாக இருந்தது. சுற்றிலுமிருந்த கனிதரும் மரங்களும் சீராக அணிவகுத்த தென்னை மரங்களும், நன்றாகப் பராமரிக்கப்பட்டதாலும் பல வண்ணங்களில் மலர்கள் பூத்துக் கிடந்ததாலும் மாளிகை பார்வைக்குத் தனி அழகுடன் தெரிந்தது.

அங்கு உலவிய திடமான காவலர்களைக் கவனித்த சமுத்திரபந்தன், அந்தத் தோப்பில் சிறு படை ஒன்று மறைந்துறையலாமென்பதையும், அவசியமானால் அந்த மாளிகை சிறு கோட்டையாக மாற வல்லது என்பதையும் அதன் அமைப்பிலிருந்து புரிந்து கொண்டான்.

கூடத்தில் அமைதியின்றி உலவிக் கொண்டிருந்த மாறவர்மன் உள்ளே நுழைந்த இருவரையும் வரவேற்றான்.

சமுத்திரபந்தன் கேட்ட கேள்வி அவனைத் தூக்கிவாரிப் போட்டது.

''உங்கள் தோள் காயம் ஆறிவிட்டதா?''

இருவருமே அவனை வியப்புடன் நோக்கினர். ''மேலைமங்கலப் போரில் நடந்தவைகளை நீங்கள் அறிவீர்களா?'' மார்த்தாண்டன் வினவினான்.

''அறிவேன்.''

மேலைமங்கலத்துப் போரைப் பற்றிப் பேச விரும்பாத மாறவர்மன், ''உங்களைத் தண்டநாயகரும் இளவரசியும் சந்தித்ததாக அறிந்தோம்'' என்றான்.

''ஆம். என் அறைக்கு இருவரும் வந்தனர். தண்டநாயகருக்கு ஓர் ஓலையுமிருந்தது என்னிடம்.''

''ஆனால் அதன் பிறகு எங்களைச் சந்திப்பதை அவர்கள் தவிர்ப்பதாகத் தோன்றியது.''

''எனவே என்னைப் பிடித்துவர வீரர்களை அனுப்பினீர்கள்,'' என்று முடித்த சமுத்திரபந்தன் பலமாக நகைத்தான். நடந்ததைச் சுருக்கமாக மார்த்தாண்டன் கூற, அதே நேரத்தில் சமுத்திரபந்தனின் முதிர்ந்த தோற்றத்தைக் கவனித்த மாறவர்மன், 'இந்த நடுத்தர வயதுடைய மனிதனா நான்கு வீரர்களைத் திணறடித்தான்!' என்ற சந்தேகம் எழுந்தாலும் அதை வெளியிடத் தயங்கி மென்று விழுங்கிக் கொண்டான்.

இருவரும் சற்று மௌனமாக இருந்தனர். பிறகு மார்த்தாண்டன் வினவினான் : ''தண்டநாயகர் என்ன தீர்மானித்திருக்கிறார்?''

''மாறவர்மருக்கு இளவரசியை மண முடிக்கவும் படை உதவி செய்யவும் அவர் வந்திருப்பதாகத் தெரிகிறது!'' சமுத்திரபந்தன் பதிலளித்தான்.

''ஆம். முதலில் அதைப் பற்றி என்னிடம் பேசினார். ஆனால் தற்போது எங்களைத் தவிர்க்கும் காரணம்தான் தெரியவில்லை.'' - மார்த்தாண்டனது குரலில் குழப்பம் ஒலித்தது.

பலமாகத் தலையசைத்து மறுத்த சமுத்திரபந்தன், ''மார்த்தாண்டரே, நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள்!'' என்றான்.

''என்ன தவறாகப் புரிந்து கொண்டேன்?''

''அவர் உங்களைத் தவிர்க்கவில்லை. உங்களுக்கு ஒரு விதத்தில் பேருதவி செய்யவே சென்றிருக்கிறார்.''

''என்ன உதவி? படை உதவியா?''

''இல்லை. அதைவிடப் பெரிய உதவி. நீங்கள் போரில் வென்றாலும் அடைய முடியாத மதுரை அரியணையை மாறவர்மருக்கு உறுதி செய்யும் உதவி!''

பேச்சை சற்று நிறுத்திய சமுத்திரபந்தன், இருவர் முகத்தையும் கவனித்தான். பிறகு மெல்லக் கேட்டான் : ''விளங்கவில்லையா?''

''இல்லை'' என்பதாக இருவரும் தலையசைத்தனர்.

''விளக்கமாகவே சொல்கிறேன். சேரலாதர் உதவியுடன் நீங்கள் கோட்டாற்றில் போர் துவக்கப் போகிறீர்கள் அல்லவா? அதில் வெற்றி பெற முடியும் என்பதில் உறுதியாக இருக்கிறீர்களா?''

''சமுத்திரபந்தரே, கோட்டாற்றைச் சுற்றியுள்ள காடுகளில் எங்களது படைகள் இருக்கின்றன. பொன்னமராவதியிலும் அதன் உபதலைவர்களின் ஆதரவு இன்னும் இருக்கிறது. வடக்கிலிருந்து உத்தமபாளையத்து மன்னரும் மாறவர்மனின் தாய் மாமனுமான ருத்திர பாண்டியரது படையையும் இணைத்தால் படைபலம் கணிசமாக உயர்ந்துவிடும். சேரலாதர் உதவியும் சேரும்போது வெற்றி பெறுவதில் என்ன சந்தேகம்?''

''பின் ஏன் தாமதப்படுத்துகிறீர்கள்? படையெடுப்பைத் தொடங்க வேண்டியது

தானே?'' என்று வினவினான் சமுத்திர பந்தன்.

''நீங்கள் அறியாததல்ல. ஜடாவர்ம பாண்டியருக்குப் பின் பாண்டிய நாடு ஐந்து சிற்றரசுகளாகப் பிரிந்தது. அதில் மிகப் பழமையான வம்சத்தையுடைய கொங்குப் பாண்டியர், முன்னர் சோழருடன் இருந்த உறவின் காரணமாக எங்களுடன் இணைந்து போராடத் தயங்குகிறார். அவரை இணங்க வைக்க சோமசுந்தரனை அனுப்பியிருக்கிறேன். அவரும் இணைந்த பின், போராட்டத்தைத் துவக்கலாம் என்று எண்ணியிருக்கிறேன்.''

மார்த்தாண்டன் நிலையைத் தெளிவாக விளக்கினான்.

சமுத்திரபந்தன் மேலும் ஒரு சந்தேகத்தைக் கேட்டான் : ''மதுரை அரியணையில் யாரை அமர்த்துவீர்கள்? கொங்கு மன்னருக்கும் ஒரு மகன் இருப்பதாகக் கேள்வி?''

''அவர் மாறவர்மனை அரியணையில் அமர்த்த ஒப்புக் கொண்டு விட்டார். ஆனால் போரில் நேரிடையாக இறங்குவதற்குத்தான் தயங்குகிறார்.''

''அப்படியானால் உங்களுக்குள் அரியணைப் போட்டி என்ற பேச்சுக்கே இடமில்லை என்கிறீர்கள்!''

''நிச்சயம் கிடையாது!''

''போட்டி வேறு ஓர் இடத்திலிருந்து கிளம்பியிருக்கிறது, மார்த்தாண்டரே!''

**மா**ர்த்தாண்டவர்மனது நெற்றி சுருங்கியது. மாறவர்மன் முகத்திலும் உஷ்ணம் ஏறியது.

''எங்கிருந்து வருகிறது போட்டி? யார் போட்டியிட முன்வருவது?'' - மாறவர்மன் இருக்கையை விட்டு வேகமாக எழுந்து வந்தான்.

சமுத்திரபந்தன் முகத்தில் போலியான அச்சம் படர்ந்தது. ''அமருங்கள், அமருங்கள், நிச்சயமாகப் போட்டியிட வருவது நானல்ல!'' இரு கரங்களையும் நீட்டி நடித்தான் சமுத்திரபந்தன்.

மார்த்தாண்டனது முகம் இறுகியிருந்தது. ''யார் போட்டியிட முன்வருவது?'' கரகரத்த குரலில் கேட்டான் அவன்.

சமுத்திரபந்தனது குரல் தெளிவாக ஒலித்தது. ''அதற்கு உரிமையுடையவர் தான்!''

''சற்று புரியும்படி கூறுங்கள் சமுத்திர பந்தரே!''

அடுத்து சமுத்திரபந்தனது குரல் ஏதோ பிசாசின் குரலாக ஒலித்தது மார்த்தாண்டவர்மனுக்கு.

''மார்த்தாண்டரே, மதுரையில் நடந்த கலகம் நினைவிருக்கிறதா, உமக்கு?''

அந்தக் கேள்வி மார்த்தாண்டனது சிந்தனையைப் பல ஆண்டுகள் பின்னோக்கி ஓடிச் செல்ல வைத்தது.



''தலைவர் ஏன் தண்ணி போட்டுட்டுப் பொதுக் கூட்டத்துக்குப் போறார்?''
''கூட்டத்துக்கு வந்தவங்க, இரண்டு மடங்கா தெரியுமேன்னுதான்!''
- சீர்காழி வி. ரேவதி

அரண்மனை எரிந்து கொண்டிருந்தது. நெருப்பின் ஜ்வாலைகள் வானை நோக்கி உயர்ந்து கொண்டிருந்தன. பணியாளர்களும், பெண்களும் கூக்குரலிட்டபடி அங்கு மிங்குமாக ஓடிக் கொண்டிருந்தனர். மார்த்தாண்டனது வீரர்கள் அரண்மனையின் உள்ளே நுழைந்து எதிர்ப்பட்டவரையெல்லாம் கொன்று குவித்துக் கொண்டிருந்தனர். எங்கும் ஒரே கூச்சல், குழப்பம். எரிந்த அரண்மனையிலிருந்து கிளம்பிய புகை கருமேகமாக மதுரையைச் சூழ்ந்தது.

யார் பகைவர், யார் பணியாளர், யார் வீரர் ஒன்றும் புரியவில்லை. ரத்தம் சொட்டச் சொட்ட வாளொன்றைக் கையில் பிடித்தபடி கொலு மண்டபத்தில் நின்றிருந்தான் மார்த்தாண்டன். அரியணையிலும் மார்பிலும் வழிந்த குருதியுடன் சரிந்து கிடந்தார் மன்னர் ஜடாவர்ம பாண்டியர். அரசி மங்கையர்க்கரசியைத் தேடி அலைந்தான் மார்த்தாண்டன். அவன் வீரர்களும் தேடினர்.

கள்ளழகரைச் சேவித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த கவிநாராயண பட்டரால் அரசி தற்செயலாகக் காப்பாற்றப் பட்டதையோ, நந்தவனத்தில் அழுதபடி பயத்துடன் நின்றிருந்த சிறுமி கார்குழலியைச் சேரலாதனின் தூதுவனொருவன் எடுத்துச் சென்று விட்டதையோ அறியாத மார்த்தாண்டவர்மனுக்குப் பல ஆண்டுகள் கழித்தும் அவர்களைப் பற்றிய தகவல் ஏதும் கிட்டவில்லை. ஏறக்குறைய அவர்களை மறந்தே போயிருந்தான் மார்த்தாண்டவர்மன்.

அவன் மனத்தில் கண்டுகொண்டிருந்த காட்சிகளினூடே ஒலித்தது சமுத்திரபந்தனது குரல். ''மார்த்தாண்டவர்மரே, நீர் அரண்மனையில் எரிந்த நெருப்பைத்தான் கண்டீர். ஆனால் அந்த நெருப்பில் விளைந்த பயிரைப் பார்க்கவில்லை!''

கனவில் பேசுவது போல் மார்த்தாண்டன் வினவினான் : ''நெருப்பில் விளைந்த பயிரா?''

''ஆம். ஜடாவர்மப் பாண்டியனது மகள். அவள் இன்னும் உயிருடன் இருக்கிறாள்!'' என்றான் சமுத்திரபந்தன்.

மார்த்தாண்டன் தலைமீதாக ஆயிரம் இடியோசைகள் ஒருசேர ஒலித்தன.

(தொடரும்)

# காலம் கனிந்திருக்கிறது. இதுவே சரியான தருணம். உங்கள் வருங்காலத்தை வளமாக்கிக் கொள்ளுங்கள்.



மகிழ்வூட்டும் வகையில் அமைந்துள்ள பட்ஜெட் நம் அனைவருக்குமே புத்துணர்வையும் புதுத் தெம்பையும் ஊட்டு வதாக உள்ளது.

விலைவாசிகள் இறங்கப் போகின்றன. சேமிப்பதற்கு வசதியாகக் கைவசம் உபரியாகத் தொகைகள் மிஞ்சப் போகின்றன. நிறைவேறாமல் போன வாக்குறுதிகளை நிறைவேற்ற இது சரியான தருணம். தேவைகள் எதையுமே உங்களால் இப்போது பூர்த்தி செய்ய முடியும். அத்தனையும் உங்கள் சொந்த முயற்சியால். ஸ்ரீராம் சிட்ஸில் சேமியுங்கள். நிதி திரட்டும் உங்கள் திறனைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இன்றைய தேவை. நாளைய சேமிப்பு, இரண்டுக்கும்.

5,70,000 பேர் தங்கள் பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டு ஸ்ரீராம் சிட்ஸின் மூலம் பலனடைந்து வருகிறார்கள். நீங்களும் அவ்வாறே பலன் அடையலாமே!

## சந்தாதாரர் பரிசுகள்

| சீட்டின் மதிப்பு | ரூ. | சந்தாதாரருக்குக் கிடைக்கும் பரிசு |
|---|---|---|
| 250 x 40 = | 10,000 | 4 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 500 x 30 = | 15,000 | மூடியுடன் கூடிய எஸ்.எஸ். பேஸின் |
| 625 x 40 = | 25,000 | காளி மினி லஞ்ச் செட் (8 பொருள்கள்) |
| 500 x 60 = | 30,000 | ஹால் மார்க் மல்டி பாட் |
| 1,000 x 50 = | 50,000 | 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 1,250 x 60 = | 75,000 | காளி லாட் ஸ்கில்லெட், மூடி இல்லாமல் |
| 1,000 x 100 =<br>2,500 x 40 = | 1,00,000<br>1,00,000 | லிட்வேர் டவா |
| 4,000 x 50 = | 2,00,000 | 2 x 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 5,000 x 60 = | 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 10,000 x 50 = | 5,00,000 | 4 கிராம் தங்கக் காசு |
| 20,000 x 50 = | 10,00,000 | 8 கிராம் தங்கக் காசு |

* [illegible]




8

10

11

ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 30.4.1993.

# வென்றிடுங்கள்!
# ரூ.100 லட்சம் வரையிலான பரிசுகள்.

பரிசுகள் வென்றிடும் நாட்கள் மீண்டும் இதோ! ரூ. 100 லட்சம் வரையிலான பரிசுகள் சந்தாதாரருக்கும் அறிமுகப்படுத்துவோருக்கும் காத்திருக்கின்றன. உடனே செயல்படுங்கள்.

அறிமுகப்படுத்துவோர் கூப்பன் ஒவ்வொன்றிலுமே கண்ணுக்குத் தெரியாமல் காத்திருக்கும் பரிசின் பெயர் வெளித் தெரியாமல் மறைக்கப்பட்டிருக்கும். அந்தப் பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் இதுதான். ஒரு புதிய சந்தாதாரரை அறிமுகப்படுத்தி, பரிசுக் கூப்பனில் உள்ள வெள்ளிப்பூச்சைத் தேய்த்து அழிக்க வேண்டியதுதான். இதோ! உங்கள் பரிசின் பெயர் தெரிந்துவிட்டது!

ரூ.75,000/- வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை அல்லது தனியார் துறை அல்லது அரசுப் பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் 3 பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது.

வேலையிலிருக்கும் பெண்மணி ரூ.15,000/- வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும்போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதும்.






அறிமுகப்படுத்துவோர்
பரிசு சந்தாதாரர்களுக்கு
மட்டுமே.

மறந்து விடாதீர்கள். ஸ்ரீராம் கிளை மேலாளர் முன்னிலையில் மட்டுமே அந்த வெள்ளிப்பூச்சை அழிக்க வேண்டும்.




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்",
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002.
போன்: 474451/475536/470400/473932.

ஸ்ரீராம் சிட்ஸ்—

ADWAVE/SCI/4554 TAM A

# தன்னம்பிக்கை இருந்தால் எந்தத் தொழிலிலும் பிரகாசிக்கலாம்!

கிருஷ்ணகிரி தொழிற்பேட்டையில் இளைஞர் விவேகானந்தனைச் சந்தித்த போது, ஒரு விஷயம் தெளிவாகப் புரிந்தது. தன்னம்பிக்கையோடு புத்திசாலித்தனத்தையும் சேர்த்துக் கொண்டால் எந்தத் தொழிலிலும் பிரகாசிக்கலாம் என்பதுதான் அது.

''சொந்தத் தொழில் துவங்கத் தீர்மானித்து, உதகமண்டலத்தில் இருக்கும் நீடில் இண்டஸ்ட்ரீஸ் வேலையை விட்டு விடத் தீர்மானித்த பிறகு, பல நண்பர்கள் நிறைய யோசனைகள் சொன்னார்கள். பிளாஸ்டிக் இண்டஸ்ட்ரி எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். தொழிற்கூடங்கள் இயங்க வசதியான ஃபேப்ரிகேஷன் பணியைத் தொடங்கலாமா என்று யோசித்தேன். அன்றாட வாழ்க்கைக்குத் தேவைப்படும் நுகர் பொருள் ஏதாவது தயாரிக்கலாம் என்று சிலர் சொன்னார்கள். அப்போதுதான் மெக்கானிகல் என்ஜினியரிங்கில் டிப்ளமோ பெற்ற நண்பர் ராமசாமி தேசாய் ஓர் அருமையான யோசனை சொன்னார். அவர் திருச்சிக்காரர். புதுக்கோட்டையில் ஜிப் இண்டஸ்ட்ரி வைத்திருக்கிறார்.



''ராமசாமி தேசாய் சொன்ன யோசனை, டிரங்கு பெட்டிகளுக்கான கைப்பிடி, மேல் பகுதியையும் கீழ்ப் பகுதியையும் இணைக்கும் க்ளிப், பூட்டுப் போட வசதியான 'பேட்லாக்' இவற்றைத் தயாரிப்பதுதான்!''



**டிரங்கு பெட்டிக்கு இன்னமும் மவுசு இருக்கிறதா என்ன என்ற ஆச்சரியம் நமக்குத் தோன்றியது!**

நாகரிகம், எடுத்துச் செல்லும் வசதி இவை கருதி விற்பனை செய்யப்படும் நவீன சூட்கேசுகள் போடும் போட்டா போட்டி விற்பனையில், டிரங்கு பெட்டிக்கு மவுசு இருக்கிறதா என்ன என்ற ஆச்சரியம் நமக்குத் தோன்றியது.

''தாராளமாக இருக்கிறது!'' என்றார் விவேகானந்தன்.

''நானும் என் நண்பரும் சேர்ந்து, ஒரு மார்க்கெட் சர்வே நடத்தினோம். நிறையவே டிமாண்ட் இருப்பது தெரிய வந்தது. சேலம், திருவண்ணாமலை, திருப்பத்தூர், வேலூர், சென்னை என்று பல இடங்களில் டிரங்கு பெட்டிகள் தயாரித்து வருகிறார்கள். இவர்களுக்குத் தேவைப்படும் கைப்பிடிகள், பேட்லாக்குகள், க்ளிப்புகள் எல்லாமே - சொன்னால் நம்ப மாட்டீர்கள் - கான்பூரிலிருந்துதான் வந்து கொண்டிருந்தன!''

இன்னமும் கல்யாணங்களின் போது இரும்புப் பெட்டிகள் கொடுப்பது கிராமப் புறங்களில் வழக்கமாகத்தான் இருக்கிறது. ஹாஸ்டலில் தங்கும் மாணவ - மாணவிகளுக்கு இப்பெட்டிகள் அவசியம் தேவைப்படுகிறது. நகரங்களை விட்டுக் கிராமங்களுக்கு வந்தால், இந்தப் பெட்டிகள் அவர்கள் வாழ்க்கையோடு இணைந்து விட்ட ஓர் அம்சமாகவே தெரிகிறது.

பெரிய தொழில்களுக்குப் பயன்பட்டது போக மீதியாகத் துண்டுவிழும் இரும்புத் தகடுகள்தாம் இத்தொழிலுக்கு மூலப் பொருள்.

''எனக்குத் தரம் மிக முக்கியம். அதைத் தொடர்ந்து காப்பதில்தான் என் வியாபாரமே இருக்கிறது!'' என்று சொல்லும் விவேகானந்தனின் தொழிற்பட்டறையில் தற்போது ஐந்து இளைஞர்கள் பயிற்சி பெற்று வருகிறார்கள். அவர்களின் பயிற்சிக் காலப் பணி திருப்தியாய் இருந்து விட்டால், அவர்களுக்கும் அங்கேயே வேலை!

- எஸ். வி. என்

# தமிழ்ப் புத்தாண்டையொட்டி இம்மாத பிற்பகுதியில் ஆரம்பிக்கப்படும் கடலங்குடி வகுப்புக்கு

(தமிழ்/English)

## தபால் வழியில் ஜோதிடம் கற்க ஓர் அரிய சந்தர்ப்பம்

'கடலங்குடி' என்றால் ''ஜோதிடம்'' 'ஜோதிடம்' என்றால் 'கடலங்குடி' என யாவரும் அறிந்ததே. தமிழுலகில் 1920 ஆம் வருடம் முதல் இன்று வரை தளராது உழைத்து வரும் நம்பிக்கையும், புகழும் வாய்ந்த ஜோதிட ஸ்தாபனம் 'கடலங்குடி'. ஜோதிட சக்ரவர்த்தியும் அபிநவ வராஹமிஹிரரும், ஜோதிடத் தாத்தா என்று பலராலும் போற்றப்பட்ட பண்டித கடலங்குடி சாஸ்திரியாரையும் அவரது ஜோதிட நற்பணியையும் அறியாதோர் யார்?

அன்னாரின் சிஷ்யையும், புதல்வியுமான ஜோதிட கலாநிதி டாக்டர் கே. என். சரஸ்வதி அவர்கள் தம்முடைய நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலான ஜோதிட அனுபவமும் பரம்பரைக் கலைஞானமும் பலருக்கும் பயன்படும் முறையில் தபால் மூலம் எளிய ஜோதிடப் பாடத் திட்டத்தை உருவாக்கி உள்ளார்.

கடலங்குடி ஜோதிட ஆய்வு மையத்தின் மூலம் நடத்தி வரும் ஜோதிடத் தபால் வழிப் பாடத் திட்டத்தின் மூலம் ஆறு மாதங்களில் ஜோதிடம் கற்பித்து இறுதியில் மையத்தின் சார்பில் சான்றிதழ் வழங்கப்படும். புத்தகங்கள் தள்ளுபடி விலையில் கொடுக்கப்படும்.

ஆயிரக்கணக்கான உள்நாட்டு, வெளிநாட்டு மாணவர்கள் பயனடையும்படி உதவிய ''கடலங்குடி ஜோதிட ஆய்வு மையத்தி''ற்கு உடனே அட்மிஷன் பாரங்களுக்கும் Prospectus க்கும் தமிழ் ரூ. 12/- ஆங்கிலம் ரூ. 15/- M. O. செய்து தொடர்பு கொள்ளலாம். வெளிநாட்டோர் 10 அமெரிக்க டாலர் அனுப்பி Prospectus ஐப் பெறலாம். தமிழ்ப் புத்தாண்டை முன்னிட்டு (26.4.93) ஆரம்பிக்கும் புது வகுப்பில் சேர்ந்து பயனடையவும்.

**Kadalangudi Astrological Research Centre (Regd.)**

38, Natesa Iyer Street, (Near T. Nagar Bus Terminus), Madras - 600 017.

# அகஸ்திய மகரிஷியும் வெள்ளெருக்கு வேர் விநாயகரும்

1. இறைவனைப் பூஜிக்க சிறந்த மூலிகைகள் பற்றி நம் நாட்டின் பண்டைக் கால மகரிஷிகள் நூல்கள் பலவற்றில் தெரிவித்துள்ளார்கள். இவற்றுள் அகஸ்திய மகரிஷி அவர்கள் தம்முடைய 'மூலிகை ஜால ரத்தினம்' என்னும் நூலில் வாழ்க்கையில் தடைகளை நீக்கி நல்வழி காட்டும் விநாயகர் பெருமானை பூஜித்து நற்பலன்கள் பெற்று வாழ அருகுவன்னி, வெள்ளெருக்கு முதலிய மூலிகைகள் மிகச் சிறந்தது எனக் கூறியுள்ளார்கள்.

2. இவற்றுள் வெள்ளெருக்கு வேரின் குணம் மிக உயர்ந்தது எனவும் இதனைச் சாதாரணமாக வீடுகளில் வைத்திருந்தாலே தோஷங்கள் நீங்கி சுபிட்சம் பெருகும் என்றும் மேலும் வெள்ளெருக்கு வேரில் விநாயகர் சிற்பம் செய்து வீட்டில் வைத்து பூஜித்து வந்தால் நல்ல முயற்சிகள் அனைத்திற்கும் தடைகள் நீங்கி காரியசித்தி ஆவதுடன் சகல நலன்களும் பெற்று மனநிறைவு பெறுவர் என்றும் அகஸ்திய மகரிஷி தமது மூலிகை ஜால ரத்தினம் என்ற நூலில் தெளிவுபடக் கூறியுள்ளார்.

3. ஒரு சமயம் நவக்கிரகங்கள் ஒரு மகரிஷியின் சாபத்தின் தீய பலன் நீங்க வெள்ளெருக்கு வனத்தில் தவம் செய்து இறைவனை வழிபட்டு சாபம் நீங்கப் பெற்றார்கள் என்றும் மேற்படி ஸ்தலமே தற்போது சூரியனார் கோவில் என்று வழங்கப்படும் ஸ்தலமாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

4. வெள்ளெருக்கு மூலிகைத் தாவரம் ஆற்றோரங்களிலும், கோவில்களிலும் மக்கள் நடமாட்டம் இல்லாத இடங்களில் மட்டும் வளரும். இதில் விநாயகர் சிற்பம் செய்து வீட்டில் வைத்து சாதாரணமாக வணங்கி வந்தாலே பில்லி, சூனியம் மற்றும் திருஷ்டி பொறாமை முதலியவை நெருங்காது. மற்றும் நீண்ட நாட்களாக தடைபட்டு வரும் திருமண முயற்சி, வேலை வாய்ப்பு முயற்சி, தொழில், வியாபாரம், வீடு கட்டுதல் முதலியவை உடன் சித்தியாகும் என்பதை நம்மை நாடி வரும் அன்பர்களுக்கு வழிகாட்டி பல ஜோதிட மேதைகள் அனுபவ வாயிலாக தெரிவித்துள்ளார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

5. நாங்கள் வெள்ளெருக்கு வேரில் விநாயகர் உருவத்தை மிகக் குறைந்த கட்டணத்தில் சிற்ப சாஸ்திர முறையில் பூஜைக்கு ஏற்றவாறு இரண்டு இஞ்ச் உயரம் அளவில் மற்றும் பல அளவுகளில் செய்து தருகிறோம்.

தமிழ்நாடு முழுவதும் அனைத்து காதி பவன் மற்றும் பூம்புகார், காதி கிராப்ட் விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.

சென்னையில் கிடைக்குமிடம் :

காதி பவன், 844, அண்ணா சாலை,
ராதா சில்க் எம்போரியம், மயிலாப்பூர்.
பூம்புகார், 818, அண்ணா சாலை,
பவானி ஹாண்டிகிராப்ட்ஸ், மயிலாப்பூர்.

டெல்லியில் கிடைக்குமிடம் :

P. PALANIVEL,
1336, LODHI COMPLEX, OPPOSITE TO J.L.N. STADIUM, NEW DELHI - 110 003.

தபால் மூலம் பெற்றுக் கொள்ள விரும்புவோர் :

PRAKASAM HANDICRAFTS 16, H.P.O. ROAD, KUMBAKONAM - 612 001

என்ற முகவரிக்கு ரூ 85/- (எண்பத்து ஐந்து) அனுப்பிப் பதிவுத் தபால் மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

# ஊனம்!

**அரவிந்தன்**

"அம்மா ஆசீர்வாதம் பண்ணி னாள்!" -

"இந்த இன்டர்வியூவிலேயாவது உனக்கு வேலை கிடைக்கட்டும்!" - என் றாள்.

டிபன் சாப்பிடும் போது வழக்கம் போல், "பேசாம உன் மாமா வேலை செய்யற அந்தக் கம்பெனிக்கே போகலாம். கொஞ்ச நாள் வேலை கத்துகிட்டா, மாமா, பொண்ணையும் கொடுத்து, சொந்தமாக் கம்பெனியும் வைச்சுக்குடுப்பார். இப்படி வேலை வேலைன்னு அலைய வேண் டாம்!" - என்றாள்.

மாமா கம்பெனிக்குப் போவதானால் காக்கி யூனிஃபாரம் போட்டுக் கொள்ள வேண்டும். பையில் பந்தாக 'காட்டன் வேஸ்ட்'டுடன் மிஷின் மிஷினாகப் போய் எண்ணெய் போட்டு, அதன் சுழற்சி வேகம் பார்த்து - வியர்வை வழிய - அந்த இயந் திரங்களின் இரைச்சலுக்கு நடுவே இருந்து.... கொடுமை!



"சம்பளம் வாங்கிப் பழக்கப் பட்டறவன் வாழ் நாள் முழுதும் கோழை. கடிகாரத்தைப் பார்த்து நாளை ஓட்டி, காலண்டர் பார்த்துச் சம்பளம் வாங்கறதைத் தவிர அவன் வாழ் நாளில் உருப்படியாக எதையும் சாதிக்க முடியாது. உனக்கு வேலை வேண்டாம். தொழில் தொடங்கு" என்பாள், அம்மா.

நான் அதற்காகப் பிறக்க வில்லை -

நீட்டாக டிரஸ் பண்ணிக் கொண்டு - பவுடர் வாசனை மணக்க, ஸ்கூட்டரில், முடிந்தால் காரில் ஆபீஸ் போய் - மெலிதான 'ஏஸி' குளிரில் கம்ப்யூட்டர் கீ போர்ட் பட்டன்களை நாசூக்காகத் தொட்டு மானிட்டரில் தெரியும் எண்களோடு விளை யாடி....

என் குடும்பச் சூழல் என் கர்வம். உடனடியாக வேலை தேடியாக வேண்டிய நிர்ப்பந்தமில்லை எனக்கு. அப்பா நல்ல வேலையில் இருந்து நிறைய சம்பாதித்து வைத் திருந்தார். வீட்டில் அம்மாவும் நானும்தான். அப்பா இரண்டு வருஷங் களுக்கு முன் காலமாகி விட்டார். அப்பா சேர்த்து வைத்த சொத்து, சுகம், வீடு, பேங்க் பேலன்ஸ் எல்லாம் இருக்கிறது. வேலை எனக்கு ஒரு ஆபரணம் போல - சுகமாய் சுலபமாய் இருக்கவே ஆசை.

அம்மாவுக்கு நான் வேலைக்குப் போவதில் இஷ்டமில்லை. "எவ்வளவு சம்பாதித்தாலும் ஒருத்தன் கிட்டே கைகட்டி நிக்கிற பொழப்புத் தானேடா!" என்பாள்.

"நீயே தொழில் கத்துக்கோ. சொந்தமா தொழில் துவங்கு.

"கஷ்டப்படற வயசுதான் உனக்கு! கஷ்டப்படு. பின்னாலே நீ ஒரு முதலாளி ஆகலாம். பத்துப் பேருக்கு வேலை கொடுக்கலாம். உன்னை விட அதிகம் படிச்சவன் உன்கிட்டே வேலை செய்வான். உன்கிட்ட கை நீட்டிச் சம்பளம் வாங்கு வான். சம்பளம் வாங்கிப் பழக்கப்பட்ட வன் வாழ்நாள் முழுதும் கோழை. கடிகாரத்தைப் பார்த்து நாளை ஓட்டி, காலண்டர் பார்த்துச் சம்பளம் வாங்கறதைத் தவிர அவன் வாழ் நாளில் உருப்படியாக எதையும் சாதிக்க முடியாது. உனக்கு வேலை வேண்டாம். தொழில் தொடங்கு" என்பாள்.

என் எண்ணம் வேறாக இருப்பது தெரிந் தும் அவள் சொல்வதை விட வில்லை. ஒவ் வொரு முறையும் சொல் கிறாள். இன்னும் சொல்லிக் கொண்டே இருப்பாள்.

கூடாது - இனிமேல் அவள் சொல்லக் கூடாது.

எப்படியும் இந்த இன்டர்வியூவில் எனக்கு நிச்சயம் வேலை கிடைத்துவிட வேண்டும். கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை இருக் கிறது. படித்திருக்கிறேன். பி.ஈ., எம்.பி.ஏ. பண்ணி இருக்கிறேன். எடுத்த எடுப்பி லேயே 'சீனியர் எக்ஸிகியூடிவ்' ஆகப் போகிற தகுதி இருக்கிறது. இரண்டு முறை 'கோல்ட் மெடல்' வாங்கி இருக்கிறேன்.

உலகப் படத்தில் கண்ணை மூடிக் கொண்டு எந்த இடத்தைத் தொட்டாலும் அது எந்த நாடு. அந்த நாட்டு ஜனத்தொகை என்ன, தலைவர் யார், தலை நகர் எது? என்று எல்லாம் சொல்வேன்.

பூகோளம் - அரசியல் - பொருளாதாரம் எல் லாம் விரல் நுனியில் இருக்கிறது.

இந்த இன்டர்வியூவில் வேலை நிச்சயம் கிடைக்கும் என்ற நம்பிக்கை. நிறைந்த மனத்துடன் கிளம்பினேன்.

ஆட்டோவில் போகலாம்.

போக வேண்டிய இடம் பத்து கிலோ வுக்கும் மேல் இருந்தது. ஆட்டோ சார்ஜ் தலையைத் தின்றுவிடும்.

பேசாமல் சிட்டி பஸ்ஸிலேயே போவ தென்று முடிவு செய்தேன்.

ஃபைலை எடுத்துக் கொண்டு, கிளம்பினேன்.

அம்மா வாசலில் வந்து நின்று கொண் டாள்.



''பார்த்துப் போ'' என்றாள்.

ஓட்டமும் நடையுமாக பஸ்ஸ்டாப் வந்த போது முதல் பஸ் போயிருந்தது.

இரண்டாவது பஸ் வருவதற்குள் உடம் பின் ரத்தம் அத்தனையும் மூளைக்கு வந்து விட்டது - அவ்வளவு டென்ஷன்!

**ப**ஸ்ஸில் நிறைய கூட்டம். முதல் சீட்டில் உட்கார்ந்திருந்த சீனு ''ஹலோ'' சொன்னான். காலேஜ் மேட். எங்கேயோ வேலைக்குப் போகிறான். அடுத்த ஸ்டாப் பிங் போவதற்குள் அவன் பக்கத்தில் இருந்த ஆள் இறங்க - சீனு கைப் பையை வைத்து இடம்பிடிக்க - அவ்வளவு கூட்டத்துக்கு இடையிலும் கலபமாய் உட்கார்ந்து விட் டேன்.

''என்ன பண்றே?'' என்றான் சீனு.

''வேலைக்குத்தான் ட்ரை பண்ணிக் கிட்டு இருக்கேன். இன்னிக்குக் கூட ஒரு இன்டர்வியூவுக்குத்தான் போயிட்டிருக் கேன்!''

''ஏன்டா வேலை வேலைன்னு அலை யறே. உட்கிட்டே இருக்கிற வசதிக்கும் உன் படிப்புக்கும் ஏதாவது நல்ல கம்பெனியா ஆரம்பிச்சிட வேண்டியதுதானே?''

சீனுவும் அம்மாவைப் போலவே பேசு வது ஆச்சரியம் தந்தது.

தொடர்ந்து விவாதம் செய்ய விருப்பம் இல்லாமல் பேச்சை வேறுபக்கம் மாற்றி னேன்.

பஸ் நாலைந்து ஸ்டாப்பிங்குகளைக் கடந்து விட்டது.

நிறைய பேர் ஏறி - நிறைய இறங்க -

நாங்கள் எங்கள் சுற்றுப் புறத்தைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் எங்கள் காலேஜ் வாழ்க்கை பற்றி - சினிமா அர சியல், கிரிக்கெட் எல்லாம் சுவாரசியமாகப் பேசிக் கொண்டே வந்தோம்.



திடீரென்று கண்டக்டரின் குரல் -

''ஸார் - அந்த முன் சீட்டிலே இருக்கிற வங்க கொஞ்சம் எழுந்து இடம் குடுங்க.''

நான் அதைப் பொருட்படுத்தாமல் பேசிக் கொண்டே இருந்தேன் -

''ஸார் உங்களைத்தானே. இது ஊன முற்றோர் உட்கார்ற சீட். மேலே எழுதி இருக்கு பார்த்தீங்களா? இங்க பாருங்க, இந்த ஆளு ஒரு கால் இல்லாம கட்டையை வைச்சுக்கிட்டு ஒத்தைக் கால்லே நிக்க எவ்வளவு கஷ்டப்படறார் பாருங்க. நீங்களே மனிதாபிமானத்தோடு எழுந்து இடம் குடுக்கணும். நான் நடு வண்டியி லேர்ந்து கரடியாக் கத்தறேன். காதிலேயே விழாம பேசிக்கிட்டே இருக்கீங்களே. எந்திரிங்க ஸார்!''

கண்டக்டர் ஆத்திரத்தோடு கத்த -

நான் வேண்டா வெறுப்பாய் எழுந்தேன்.

அந்த இளைஞன் ''பரவாயில்லை'' என்றான்.

''யோவ் - உட்காருய்யா!'' - என்றார் கண்டக்டர்.

எனக்கு அந்த ஆள், கண்டக்டர் இரண்டு பேர் மீதும் கோபம் கோபமாக வந்தது.

அந்த ஊன முற்றவன் இளைஞனாக இருந்தான். கையில் ஃபைல். அவனும் நான் போக வேண்டிய கம்பெனி பெயரையே சொல்லி டிக்கட் கேட்ட பொழுது, எனக்கு அவன் மீது முதல் முறையாக வெறுப்பு வந்தது. இவனும் அங்கே இன்டர்வியூ வுக்குத்தான் வருகிறானோ என்ற கேள்வி எழுந்தது.

அவன் உடையையும் கையில் இருந்த ஃபைலையும் அவன் தோற்றத்தையும் பார்த்தால் அப்படித்தான் தெரிந்தது.

எங்கே போனாலும் இந்தப் பெண்கள் தான் எங்களுக்குப் போட்டியாக வந்து கழுத்தை அறுப்பார்கள்.

அதுகள் குலுக்கலும் - தளுக்கலும் - சிரிப்பும் - நினைக்கவே மனம் பற்றிக் கொண்டு எரியும்.

எங்கேயும் எதிலேயும் எல்லா இடத் திலும் அவர்கள் போட்டிதான் பெரும் பிரச் னையாக வரும். இன்றைக்கு இந்த ஊன முற்ற ஆளா? - மனம் பொருமியது. அந்த இளைஞனைப் பார்க்க இன்னும் கோபம் வந்தது.

**சொ**ல்லி வைத்தாற்போல நான் இன்டர்வியூ போக வேண்டிய கம்பெனியி லேயே அவனும் இறங்கினான். எங்க ளுடனே நடந்து வந்தான். நாங்கள் ரிஸப் ஷனில் இருந்தவனிடம் விசாரித்த போது அவன் நேராக வந்து விசிட்டர் ஹாலில் உட்கார்ந்து கொண்டான். அவன் வந்ததும், உட்கார்ந்ததும் எல்லாம் பார்க்க, ஊனம் தவிர வேறு நல்ல சிபாரிசும் இருக்கும் என்று எண்ண வைத்தது.

வழியில் போன பியூனை அழைத்து, விசிட்டிங் கார்டையும் ஒரு கவரையும் கொடுத்தான். பார்த்த போது, அவன் நிறைய முன்னேற்பாடுகளுடன் வந்திருப் பது புரிந்தது.

என் மனத்தில் நிறைந்திருந்த நம்பிக் கைகள் லேசாக ஆட்டம் காணத் தொடங்கி இருந்தன.

வேலை கிடைக்காவிட்டால் கேவலம் என்று தோன்றியது.

வேலை கிடைப்பதற்குப் பெரிய இடைஞ்சலாக அந்த ஆள்தான் இருக்கப் போகிறான் என்று தோன்றியது.

நான் இவ்வளவு பரபரப்புடன் இருக்க, அவன் கொஞ்சம் கூட பதற்றமோ, பர பரப்போ இல்லாமல் நிம்மதியாய் இருந் தான்.

'அவன் ஊனம் அவனுக்கு ஒரு முக்கி யத்துவத்தைக் கொடுக்கப் போகிறது. இன்டர்வியூ சுமாராகச் செய்தாலும் போதும். அவனுக்குப் பெரிய சிபாரிசும் இருக்கும் போலத் தெரிகிறது - நிம்மதியாய் இருக்க என்ன தடை!'' என் மனம் புலம் பியது.

இன்டர்வியூ ஹாலைப் பார்த்தேன்.

என்னைப் போலவே பத்துப் பன்னி



பியூன் : ஆபீஸ் கிளார்க்குகளைப் பார்த்து இங்கே வர்ற விசிட்டர்களும் கெட்டுப் போயிட்டாங்க ஸார்!

மானேஜர் : என்னப்பா விஷயம்?

பியூன் : விசிட்டர்ஸ் பெஞ்சில் உட் கார்ந்து ஏழு பேர் தூங்கிக்கிட்டிருக் காணுங்க.

- உ. ராஜாஜி

ரெண்டு பேர் வந்திருந்தார்கள்.

அவன் மட்டும் தனியாக அமர்ந்திருக்க, நான் மற்றவர்களோடு அமர்ந்து கொண் டேன். பக்கத்தில் இருந்தவனை அறிமுகம் செய்து கொண்டேன்.

எப்படியாவது அந்த ஊனமுற்றவனைக் கேலி செய்து என் மனத்தின் ஆத்திரங்களை ஆற்றிக் கொள்ள ஆவேசம் வந்தது.

"நல்ல வேளை! இன்டர்வியூவுக்கு பொம்பளைங்க இல்லையேன்னு நினைச் சேன். எப்படியோ இங்கேயும் ஒரு "பேக் டோர் என்ட்ரன்ஸ்" இருக்கும் போலிருக்கு!" என்றேன். அவன் காதிலும் விழட்டும் என்று சப்தமாகவே சொன் னேன்.

பக்கத்தில் இருந்தவன் ஏறக்குறைய என்னைப் போலவே எண்ணங்களில் இருந் திருக்க வேண்டும்.

"ஆமாம் ஸார். இந்த காலத்திலே வேலை கிடைக்க ஒண்ணு பொம்பளை யாப் பொறந்திருக்கணும். இல்லே - கை கால் இல்லாம பொறக்கணும். எல்லாம் ஒழுங்கா இருக்கிற ஆம்பிள்ளைக்கு இந்த ஜென்மத்திலே வேலை கிடைக்காது" என் றான்.

அவன் ஆத்திரம் எனக்கும் சந்தோஷ மாக இருந்தது.

நாங்கள் பேசியது அந்த இளைஞன் காதிலும் நன்றாக விழுந்திருக்கும்.

விழட்டும். நன்றாக விழட்டும். எனக் கென்ன பயமா?

நான் தலை நிமிர்ந்து இருந்தேன்.

கம்பெனி பெரிய கம்பெனியாக இருந் தது.

வேலை கிடைத்தால் நன்றாக இருக் கும். நாமும் ஒரு தனியறையில் வாசலில் ஸ்டேனோ இருக்க உதவி மானேஜராக - கௌரவமாக இருக்கலாம்.

விடமாட்டானே? - அதோ வில்லன்!

மனது திருதிரு வென்று எரிச்சல் எடுத்தது.

பியூன் வந்து அந்த இளைஞனைக் கூப்பிட, அவன் கைக்கட்டையுடன் நொண் டிக் கொண்டே உள்ளே போனான்.

"இன்டர்வியூவே இன்னும் ஆரம்பிக் கலை. அதுக்குள்ளே உள்ளே கூப்பிடறாங்க பாருங்க ஸார்!"

பக்கத்தில் இருந்த இளைஞன் கடுப் பேற்றினான்.

மனது இன்னும் பொரிந்தது.

என்ன செய்வது? வேறு வழி? பல்லைக் கடித்துக் கொண்டு உட்கார்ந் திருந்தேன்.

மானேஜரின் அறைக் கதவு திறந்து, அந்த இளைஞன் கட்டையை ஊன்றிக் கொண்டு வெளியே வந்தான். முகம் மலர்ந்து இருந்தது.

வேலை கிடைத்து விட் டதா? ஆர்டரே வாங்கிவிட்டானோ?

மனம் துடித் தது.

வெளியே வந் தவன் நேரே என் னிடம் வந்தான்.

"நான் இங்கே இன்டர்வியூவுக்கு வரலே. நான் ஒரு சின்ன இன்டஸ்ட்ரி வைச்சிருக் கேன். இவங்க ளுக்கு நிறைய ஸ்பேர் சாமான்கள் தேவைப்படுது. ஆர்டர் கேட்டேன். நிச்சயம் தர்றதாச் சொன்னாங்க. இன்னும் நிறைய கம் பெனியை பார்த்தா நிறைய ஆர்டர் கிடைக் கும். கம்பெனியைப் பெரிசு பண்ணிடு வேன். இந்த ஊனத்தோட அலைய முடி யலே. இந்த இன்டர்வியூவிலே உங்களுக்கு வேலை கிடைக்கலைன்னா என்னை வந்து பாருங்க. நல்ல சம்பளம் தர்றேன்."

அவன் தன் கம்பெனி விசிட்டிங் கார்டை என்னிடம் கொடுத்தான்.

"விஷ் யூ குட் லக்!"

அவன் கிளம்பி விட்டான்.

ஒரு கணம்.

மனம் செருப்பால் அடிபட்டது போல உணர்ந்தேன்.

அம்மா சொல்வது நினைவுக்கு வந்தது.

ஒரு கணத்தில் அந்த அறையின் ஏ.ஸியும் அதன் குளிர்ச்சியும் காணாமல் போயிற்று.

மாமாவின் கம்பெனி மிஷின்களின் இரைச்சல் காதில் கேட்கிற மாதிரி இருந்தது. மாமா பெண் கோகிலாவும் நல்ல அழகிதான் என்று வாய் முணு முணுக்க, அந்த இன்டர்வியூ லெட்டரை அங்கேயே கிழித்தெறிந்து விட்டு நடந் தேன், புதுமனிதனாக!



"டீ.வி. முன் னாலே உட்கார்ந் தார்ன்னா என் கணவர் அதோட ஐக்கிய மாயிடு வார்!"

"அப்போ அவர் ஒரு டீ.வி. நோயாளர்னு சொல்லு!"

- கு. அருணா சலம்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1993

**முதல் பரிசு ரூ. 1,500**
**இரண்டாவது பரிசு ரூ. 1,000**
**மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர பிரசுரத்துக்கு, ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

● கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

● நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

● உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 1 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

● எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# நம்பிக்கையும் ஆழ்மனப் பதிவுகளும்

இளைஞர். வயது 19. கூட ஒன்றிரண்டு இருக்கலாம். மெலிந்த உடல். அதிக உயரமில்லை. வெள்ளை வேட்டி.

அந்த மடத்தின் தலைவரை - மடாதிபதியைப் பார்க்க நிற்கிறார் - நான்கு நாட்களாக. 'வி டே ட ன் தொடேன்' என்று. எதற்காக? துறவறம் பெறும் ஆசையில்; அதுதான் சரியான பாதை என்ற முடிவுடன்.

மடாதிபதியைப் பார்க்க முடியவில்லை. அருகிலிருந்த கார்வார் பரிதாபப்பட்டு, மடாதிபதியிடம், குனிந்து, வாய் பொத்தி அறிவிக்கிறார். "நான்கு நாட்களாக நிற்கிறான்."

"என்ன வேண்டும்"

"காவி வேண்டுமாம்!"

"ரோட்டிலே போகிறவனுக்கெல்லாம் இங்கே காவி கொடுக்க முடியாது!" திடமான குரல். 'நியாயமல்ல' என்ற அழுத்தம்.

இளைஞனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அமர்கிறான். யோசிக்கிறான். தோல்வியிலிருந்து மீள்கிறான்; மீண்டும் நடக்கிறான். எங்கே? மற்றொரு மடம் நோக்கி.

அங்குள்ள ஆதீனகர்த்தர் பார்வை படும்படி பல நாள், பல நாள் நிற்கிறான். இவனது விடாமுயற்சியை, சளைக்காத மனத்தை, வைராக்கியத்தைக் கண்ட ஆதீனகர்த்தர் அழைக்கிறார்.

"என்ன வேண்டும்?"

"காவி!"

"எந்த ஊர்?"

"திருநெல்வேலி."

"கொஞ்ச நாள் இரு. பார்க்கலாம்!"

உள்ளே நுழைய அனுமதி கிடைத்தது. குரு பக்தியினால், பணிவினால், பணிவிடைகளால், ஆழ்ந்த ஈடுபாட்டால் துறவிகளுள் ஒருவராக; தம்பிரான் ஆக; சில ஆண்டுகளில் இளவரசு பட்டம் சூட்டப்பட்டு; ஓரிரு ஆண்டுகளில் மடாதிபதி காலமாக, மடாதிபதியாக...!

"தெருவிலே போகிறவர்களுக்கெல்லாம் காவி கொடுக்க முடியாது" என்ற வாசகம் நம் காதில் ஒலிக்கிறது. அப்படி பிறரால் மதிக்கப்பட்ட இளைஞனை எது தம்பிரான் ஆக்கியது? காவி வாங்கிக் கொடுத்தது? எது மடாதிபதியாக்கியது?

நம்பிக்கை. சளைக்காத மனம். விடா முயற்சி. நம்பிக்கை என்பது தீர்மானமான எண்ணம். ஆழ்மனத்தில் ஊறிப் போன எண்ணம். "இதுதான் என் லட்சியம்" என்ற உடும்புப் பிடி. "இது நிச்சயம் நடக்கும்" என்ற உறுதியான எதிர்பார்ப்பு. "இது நடக்க வேண்டும்" என்ற பிரார்த்தனை.

மனிதன் உருவிலே சிறியவனாயிருக்கலாம். அவன் கொண்ட நம்பிக்கையின் வலிமை அவனை விட பெரிதாக ஆகி விடுகிறது. அந்த மனிதனே தன் நம்பிக்கையாகிப் போகிறான்.

ஓர் எண்ணம் - மற்ற பல எண்ணங்களைப் போல - மனத்திலே எழுகிறது. ஆனால் ஓர் எண்ணம் தட்டுப்படுகிறது; நெருடுகிறது. வெடித்து எழும் விதை போல, புதிய ஜீவனைப் பெறுகிறது. மனத்திலே விட்டு விட்டு, மீண்டும் மீண்டும், பல சமயங்களில் எழுகிறது. பல நாட்களாக பல மாதங்களில்.

இந்த எண்ணம் - "இதில் ஏதோ விஷயமிருக்கிறது. கவனி" என்று உள்மனம் சொல்கிறது.

"திரும்பத் திரும்ப ஓர் எண்ணம் உன் மனத்தில் எழுமானால் அதைச் செய்து முடிக்கும் திறமை உன்னுள் இருக்கிறது. பயப்படாதே. மேலே போ!" என்கிறார் நெப்போலியன் ஹில் என்ற ஊக்க சிந்தனை மூட்டும் அமெரிக்க எழுத்தாளர். திரும்பத் திரும்ப என்கிற வார்த்தையைக் கொஞ்சம் கவனியுங்கள். மந்திரங்களைத் திரும்பத் திரும்ப சொல்கிறோம். வாய்ப்பாட்டை திரும்பத் திரும்ப சொல்கிறோம். திரும்பத் திரும்பச் சொல்லப்படும் சொல்லானது நமது ஆழ்மனத்தில் பதிவாகி விடுகிறது. ஆழ் மனத்தில் பதிவான விஷயங்கள் எப்போது எந்த நேரமும் நமக்கு உதவத் தயாராக காத்திருக்கின்றன. வாய்ப்பாட்டை, நள்ளிரவில் நம்மை தட்டிக் கேட்டால் கூட நாம் சொல்லவில்லையா, அது போல.

எண்ணம் ஒரு சக்தி. ஒரு மெழுகு வர்த்தியின் வெளிச்சத்தை ஒரு 'காண்டில் பவர்' (CANDLE POWER) என்று வெளிச்ச

**டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி**







சக்திக்கு அளவாகக் கொள்கிறோம். ஒரு மெழுகுவர்த்தி வெளிச்சம் இரண்டு மெழுகுவர்த்தி வெளிச்சம் என்று அளவிடுகிறோம். அதே போல நம் எண்ணம் திரும்பத் திரும்ப எண்ணப்படும் போது வலிமை அதிகமாகிறது. எண்ணத்தின் சக்தி அதிகமாகிறது. வலிமை பெற்ற எண்ண சக்தி வெளிச்சம் போல நம்மிடமிருந்து புறப்படுகிறது.

அந்த எண்ண சக்தி புறச் சூழ்நிலையாக, நாம் விரும்பும் பொருளாக மாறுகிறது. ஒத்த உள்ளங்களில் புகுந்து அதன்விளைவுகளை ஏற்படுத்துகிறது.

ஆழ் மனத்தில் பதிவான எண்ணங்களை - வேர்விட்ட எண்ணங்களை - நம்பிக்கைகள் என்கிறோம். இந்த நம்பிக்கைகள் நம் உள்ளுக்குள்ளே இருந்து கொண்டு நம் லட்சியத்தை நாடி ''செயல்படு செயல்படு'' என்று சதா நம்மைத் தூண்டுகின்றன. நமது செயல்களின் விளைவாக நம் எண்ணங்கள் ஈடேறுகின்றன. நம்பிக்கை! அது சாதாரண வார்த்தை அல்ல! நம்மை இயக்கும் ஆழ் மனப் பதிவுகள்.

**நா**ன் பல ஆண்டுகள் அமெரிக்காவில் பேராசிரியராக இருந்தேன். என்னுடைய எல்லாத் திறமைகளுக்கும் கல்லூரி வேலை ஈடுகொடுக்கவில்லை. எனவே வேறு ஏதாவது தொழிலில் இறங்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அதுதான் சரியான வழி என்று பட்டது. மூன்றாண்டுகள் கழித்து ஆசிரியர் வேலையை விட்டேன். சில அனுபவங்களை, விற்பனையாளனாக இருந்து பெற்று, பிறகு சொந்தத் தொழில் துவங்கினேன்.

எனது பேராசிரியருக்குக் கடிதம் எழுதினேன். ''ஆசிரியத் தொழிலை விட்டு விட்டேன்! தொழிலில் இறங்கி இருக்கிறேன்!'' என்று.

ஆசிரியத் தொழிலில் என் முத்திரையைப் பதித்திருந்தேன். ஆகவே அவர் நான் அதில் நிரந்தரமாக இருப்பேன் என்று எதிர் பார்த்தார். எனவே ஆச்சரியப்பட்டார். எழுதினார்.

''ஆச்சர்யமாயிருக்கிறது! எப்படித் தொழிலில் இறங்க உனக்குத் துணிவு வந்தது?'' என்று.

---



**நம்பிக்கை என்பது**
**தீர்மானமான எண்ணம்.**
**ஆழ்மனத்தில் ஊறிப் போன**
**எண்ணம்.**

---

''என் பெற்றோர், மூதாதையர் என்று எல்லோருமே தொழில் - வியாபாரம் - செய்தவர்கள்தான். எனவே அந்தத் 'தொழில் ரத்தம்' என்னுடைய உடம்பிலும் ஓடிக் கொண்டிருக்கும் என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். இறங்கினேன்!'' என்று எழுதினேன். நம்பிக்கை! ஆழமாக நம்புவதற்கு ஒரு நியாயமான காரணம்.

கல்லூரி மாணவர்களிடையே இந்த என் அனுபவத்தைச் சொல்லிக் கொண்டிருந்த போது ஒரு மாணவர் எழுந்து கேட்டார்.

''ஐயா! உங்கள் பாரம்பரியம் அப்படித் தொழில் செய்த பாரம்பரியம் அல்ல என்று இருந்திருக்குமானால் என்ன செய்திருப்பீர்கள்?'' என்றார்.

''என் தந்தையிடம் பொடி மட்டை இருந்தது. பொடி போடுவார். அந்த பொடி மட்டையைப் பையில் வைத்துக் கொண்டு 'இது இருக்கும் வரை யாரும், எதுவும், என்னை அசைக்க முடியாது' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டிருந்திருப்பேன்!'' என்றேன்.



டைரக்டர் : "இந்த சீனை நரசிம்மராவ் ஷாட் ஆக எடுத்துடுங்க!"
காமிராமேன் : "ஸ்லோ மோஷன்ல தானே செய்துப்புடுவோம்!"
- உ. ராஜாஜி

நம்பிக்கை! ஆழமாக நம்ப, ஒரு நியாயமான காரணம்!

மார்க்கோனி வானொலிப் பெட்டியை கண்டுபிடித்தவர். நமது குரலின் ஒலி அலைகளை மின்காந்த அலைகளாக மாற்றி அனுப்பினால் அதை வேறிடத்தில் - வேறு நாடுகளில் நாம் கேட்க முடியும் என்று சொன்னார். விஞ்ஞானிகள் பரிகசித்தார்கள். காரணம், மின்காந்த அலைகள் நேர்கோடு போல செல்லக்கூடியவை. ''லண்டனிலிருந்து அனுப்பினால் அது வான வெளியில் நேராகச் சென்று கலந்துவிடும். நியூயார்க்குச் செல்லாது'' என்றார்கள். அது உண்மைதான்.

ஆனால் மார்க்கோனி அதை பொருட்படுத்தவில்லை. லண்டனில் பேசுவதை நியூயார்க்கில் கேட்கலாம் என்று சொன்னார். செய்து காட்டினார். எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது.

மார்க்கோனியின் முடிவுக்கு என்ன காரணம்?

ஏதோ ஒன்று அவருள் சொல்லியது - இது சாத்தியம் என்று.

மனிதன் ஆழ்ந்து, ஒருமுகப்பட்டுச் சிந்திக்கும் போது அவன் தன்னைக் கடந்து, புலனாகாத பெருஞ் சக்தியை - மூலாதாரத்தைத் தொடுகிறான். அது அவனுக்கு வழிகாட்டுகிறது என்கிறார்கள், இன்றைய மனவியல் அறிஞர்கள்.

மார்க்கோனி வானொலிப் பெட்டியைக் கண்டுபிடித்த பிறகு பல ஆண்டுகள் கழித்து விஞ்ஞானிகள் தெரிந்து கொண்டார்கள். ''நமது பூமியைச் சுற்றி அயன மண்டலம் என்ற ஒன்றிருக்கிறது. நேராகச் செல்லும் மின்காந்த அலைகள் அதனால் மீண்டும் பூமிக்கே திருப்பி அனுப்பப்படுகின்றன.''

நமது நம்பிக்கை எங்கோ உள்ள மூலாதாரத்துடன் தொடர்பு கொண்டு நமக்கு உண்மைகளை வழங்கி உதவும் என்பதுதான் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

நம்பிக்கை என்பது நமக்கும் கடவுளுக்கும் உள்ள பாலம்

எனவேதான் பக்தியுடன் நம்பி ஆண்டவனை வேண்டுபவர்களுக்கு வேண்டியது கிடைக்கிறது. ராமகிருஷ்ண பரமஹம்சர் கண்ணனின் தரிசனத்தை நாடினார். அது கிடைத்தது! மூலத்துடன் தொடர்பு கொள்ளும் போது அது நமக்கு நாம் விரும்புவதை உருவாக்கித் தருகிறது. அதுதான் உண்மை.

''எதுவாக பாவித்திடினும் அதுவாக வந்தருள் எந்தை நீ!'' என்கிறார் தாயுமானவர்.

'பாவனை' என்ற ஆழ்ந்த ஈடுபாட்டின் மூலம் எதுவும் சாத்தியம் என்கிறார் தாயுமானவர்.

''இந்த யுகத்தில் ஒளிபெற்ற பல விஷயங்களுள் ஆத்மாவைப் பற்றிய உண்மை இதுதான்.

மனிதன்தான், அவனது குணங்களை அமைக்கும் சிற்பி; சூழ்நிலையை உருவாக்கும் ஓவியன்; விதியை நிர்ணயிக்கும் சிருஷ்டிகர்த்தா'' என்று ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவ ஞானி மனித நம்பிக்கையைப் பற்றி எழுதுகிறார்.

நாம் நம்பிக்கையுடன் மருத்துவர்களிடம் செல்கிறோம். அவரும், நீங்கள் அவர்பால் வைத்திருக்கும் நம்பிக்கையைத் தான் உபயோகிக்கிறார்.

மருத்துவரிடம் நாம் நோயை விளக்குகிறோம். மருத்துவரும் நாக்கை நீட்டச் சொல்லி, முழங்காலில் சுத்தியலால்

தட்டி, எல்லாச் சோதனைகளையும் செய்கிறார். ஒன்றும் பிடிபடவில்லை.

என்ன செய்கிறார்?

வெறும் 'கலர்'த் தண்ணீரைக் கொடுக்கிறார். அல்லது 'டிஸ்டில்டு வாட்டரை,' வடிகட்டி, சுத்தப்படுத்தப்பட்ட தண்ணீரை ஊசி யாகப் போடுகிறார். ''இரண்டு நாளில் சரியாய்ப் போகும்'' என்கிறார். நாம் நிம்மதியுடன் போகிறோம். 'சரியாய் விடும்' என்ற நம்பிக்கையுடன்.

''குணமாகி விடும்'' என்ற நம் நம்பிக்கைதான் இங்கே குணமாக்குகிறது. இதைத்தான் மருத்துவர் உபயோகிக்கிறார். இதை மருத்துவத்தில் 'PLACEBO' என்பார்கள். நிஜ மருந்து கொடுப்பது போல பாவனை செய்து குணமாக்குவது என்று இதற்கு பொருள்.

''உடல் குணமாகி விடும்'' என்று ஆழ் மனம் நம்பும் போதுதானே நோய் குணமாகிறது.

**ந**ம்பிக்கையைப் பற்றி கடைசி வார்த்தை.

நியூயார்க் பல்கலைக் கழகத்து ஜெர்ட்ரூட் ஷ்னைடர் என்ற பெண்மணி - மனவியல் பேராசிரியர் ஒரு சோதனை செய்தார்.

சீட்டுக் கட்டைப் பார்க்காமல் அது என்ன சீட்டு என்று சொல்ல வேண்டும். அதுதான் பரிசோதனை. சொல்ல முடியும் என்று நம்பியவர்களை ஒரு பக்கம் வைத்தார். ''இதெல்லாம் சரியாகச் சொல்ல முடியாது'' என்று சொன்னவர்களை ஒரு கூட்டமாக உட்காரச் செய்தார். இரண்டு பேருக்கும் சோதனையை நடத்தினார். யார் வெற்றி பெற்றார்கள்?

''சரியாகச் சொல்ல முடியும்'' என்று நம்பியவர்கள் சராசரிக்கும் அதிகமான மார்க்குகளைப் பெற்றார்கள். நம்பாதவர்கள், 'சொல்ல முடியாது' என்று எண்ணியவர்கள் சராசரியை விட கீழே - மார்க்குகளைப் பெற்றார்கள்.

மனவியல் ஆராய்ச்சியிலே இது பெரிய திருப்புமுனை என்று எழுதுகிறார்கள் மனவியல் பேராசிரியர்கள். நம்பினால் சாதிக்க முடியும் என்பதுதான் கண்டு பிடிப்பு. உங்களுக்கு உங்கள் மீதே நம்பிக்கை இல்லாவிட்டால் சாதிக்க முடியாது; தோற்றுத் தான் போவீர்கள். இதுதான் அந்த கண்டு பிடிப்பு.

அதனால்தான் நமக்கும் நாட்டிற்குமாக நாங்கள் சொல்கிறோம். சொந்த வாழ்விற்கும் பொது வாழ்விற்குமாகச் சொல்கிறோம் : ''நம்புங்கள் நம்மால் முடியும். நம்மால் இந்த சமுதாயத்தைத் தமிழனுடைய அறிவுக்கும் திறமைக்கும் ஏற்ற சமுதாயமாக மாற்ற முடியும்'' என்று அடித்துச் சொல்கிறோம்.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 31. உயிர் நீத்தான்!

ராஜாஜி

"அன்று அதற்குப் பிறகு நடந்ததையும் சொல்லுகிறேன், கேள்!" என்றான் தசரதன்.

"மகா பாவ காரியத்தைச் செய்து விட்டு, ரிஷி குமாரர் உயிர் நீத்ததையும் பார்த்து விட்டு, இனி என்ன செய்யலாம் என்று யோசித்தேன். சரி, இவர் சொன்னபடி செய்வதே கடமையும் நன்மையும் என்று தீர்மானித்தேன். அவருடைய குடத்தை எடுத்துச் சுத்தமான தண்ணீர் மொண்டு கொண்டு அவர் சொன்ன ஒற்றையடிப்பாதை வழியாகச் சென்று ஆசிரமத்தையடைந்தேன். அங்கே வயது முதிர்ந்த தாயும் தந்தையும் தங்கள் மகனுடைய வருகைக்காகக் காத்திருப்பதைக் கண்டேன். சிறகிழந்த இரண்டு பட்சிகளைப் போல் கருங்கிப் போன தேகங்களோடு, இருந்த இடத்திலிருந்து நகர முடியாதவர்களாக ஆசிரமத்தில் உட்கார்ந்திருந்தார்கள். இருவரும் கண் பார்வையிழந்தவர்கள். ஏன் தண்ணீர் கொண்டு வரப் போனவன் இத்தனை நேரமாகியும் இன்னும் வரவில்லை என்று தங்கள் மகனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். 'ஐயோ! இவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பவனை நான் கொன்று விட்டு இவர்களை அநாதைகளாக்கி விட்டேனே!' என்று பயமும் துயரமும் அடைந்து மெள்ள நடந்து போனேன். என் காலடிச் சத்தத்தைக் கேட்டதும் தந்தையானவர், 'அப்பனே, ஏன் இவ்வளவு நேரம் செய்தாய்? சீக்கிரம் தாகத்துக்குத் தா. ஏன் இவ்வளவு நேரம்? ஆற்றில் விளையாடிக் கொண்டு காலம் கழித்தாயா? உன் தாயார் தாகத்துக்குத் தவிக்கிறாள். அப்பனே! ஏன் பேச மாட்டேன் என்கிறாய்? நானாவது உன் தாயாராவது ஏதாகிலும் குற்றம் செய்தோமா? நீ எங்கள் பேரில் கோபங் கொள்ளலாகாது. நீ ஒழுக்கம் குறையாத தருமசீலன். நீதான் எங்களுக்குக் கதி என்பதை நீ அறிவாய். பார்வையிழந்த எங்களுக்கு நீதான் கண்ணாவாய். மகனே, எங்கள் இருவருடைய உயிரும் நீயேதான்! ஏன் பேசாமலிருக்கிறாய்? நான் இப்படிச் சொல்லுகிறேன் என்று கோபமா?' இப்படி அந்தப் பல்லில்லாத கிழவர் குழகுழவென்று பேசினார். நானோ சாப பயத்தால் நடுங்கினேன். மெள்ள தைரியம் செய்து கொண்டு பேச ஆரம்பித்தேன் :

'சுவாமி, நான் தசரதன்; உங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்ட க்ஷத்திரியன். உங்களுடைய குமாரன் அல்ல. என் பூர்வ ஜன்ம பாவத்தின் பயனாக யாவராலும் வெறுக்கத்தக்க பெரும் பாவச் செயலைச் செய்து விட்டு உங்கள் முன்வணங்கி நிற்கிறேன். பகவானே! நான் யானையோ புலியோ வேறு காட்டு மிருகம் ஏதேனும் வரும் என்று நதிக்கரையில் இரவில் வேட்டையாடப் போனவன், குடத்தில் தண்ணீர் மொள்ளும் சப்தத்தைக் கேட்டு,

காட்டு யானை தண்ணீர் குடிக்கிறது என்று எண்ணி, இருட்டில் பாணத்தை எய்து உங்கள் அருமைக் குமாரனைத் தெரியாமல் கொன்று விட்டேன். நான் எய்த சரம் மார்பில் பாய்ந்து கீழே விழுந்து ரத்த வெள்ளத்தில் புரண்டு கொண்டிருந்ததை நான் போய்ப் பார்த்ததும், ஐயோ, என் அறியாமையால் நடந்து விட்டதே என்று துயரமும் திகிலும் அடைந்து, இன்னது செய்வ தென்று தெரியாமல் திகைத்தேன். உங்களுடைய குமாரர் வேண்டு கோளின்படி அவருடைய வேதனை தீரு வதற்காக மார்பில் பாய்ந்த அம்பை நான் இழுத்து எடுத்து விட்டேன். உங்கள் குமாரர் மேலுலகம் சென்று விட்டார். நான் அஞ்ஞானத்தில் செய்து விட்ட பாதகத்தைச் சொன்னேன். இனி உங்கள் திருவுள்ளம் எப்படியோ, அப்படி அடியேன் சாபத்துக்குக் காத்திருக்கிறேன்' என்றேன்.

''நான் சொன்ன பயங்கர விருத்தாந்தத்தைக் கேட்ட கிழவர்கள் பேச்சிழந்தனர். கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பிறகு கிழவர் சொன்னார் : 'அரசனே, நீ செய்தது மிகப் பெரிய பாவம். ஆயினும் தெரியாமல் செய்தாய். நீயே வந்து சொல்லவும் செய்தாய். ஆகவினால் பிழைத்தாய். எங்களிருவரையும் அங்கே கொண்டு போய்ச் சேர்ப்பாயாக. மகனைத் தொட்டுத் தடவி தருமராஜன் வசம் போய்ச் சேர அனுப்பி விடுவோம்' என்றார்.

''அப்படியே அவர்கள் இருவரையும் தூக்கிக் கொண்டு ஆற்றங்கரையில் ரிஷிகுமாரர் விழுந்து கிடக்கும் இடத்துக்குச் சென்றேன். உயிர்நீத்த உடலைத் தடவி, அழுது, அவர்கள் தங்கள் துக்கத்தைத் தீர்த்துக் கொண்டு பிறகு குமாரனை ஆசிர்வதித்து, தகனக் கிரியைகள் செய்து முடித்தார்கள்.

'' 'எங்களுக்கு நீ விளைவித்த துக்கம், அரசனே நீயும் அனுபவிப்பாய். புத்திர சோகத்தால் நீயும் மாள்வாய்' என்று சொல்லி விட்டு இருவரும் சிதையிலேறித் தீக்கிரையாகிச் சுவர்க்கம் சென்றார்கள். நான் அன்று செய்த பெரும் பாவம் இன்று என்னைப் பற்றிக் கொண்டது.

''பத்தியமற்ற உணவையுண்ட நோயாளியின் வியாதி அதிகரித்து அவனைக் கொல்லுவது போல அந்தப் பாவம் இப்போது என்னைக் கொல்லப் போகிறது. அந்தக் கண் தெரியாத கிழவர் தம் துக்கத்தைப் பொறுக்க மாட்டாமல் சொன்ன சொல் உண்மையாயிற்று. என்னாலேயே என் அருமை மகன் வனத்துக்குத் துரத்தப்பட்டு அந்தத் துக்கத்தில் இன்று யமாலயம் செல்லப் போகிறேன்.

''எதிர்பாராதபடியும் சுபாவத்துக்கு விரோதமாகவும் நிகழ்ச்சிகள் நிகழ்வதற்கு வேறு காரணமில்லை. நான் ஏன் இப்படி மோசம் போக வேண்டும்? நான் ராமனைக் காட்டுக்குப் போ என்றாலும் அவன் ஏன் என் வார்த்தையைச் சிரமேற்கொண்டு வனம் போக வேண்டும்? கௌசல்யே, பார்வையை இழந்தேன். நீ என் கண்களுக்குத் தெரியவில்லை. மரணம் நெருங்குகிறது. அருகில் வா. எல்லாம் முடிந்தது. யம தூதர்கள் புறப்படு என்கிறார்கள். ராமன் வருவானா? அவனைப் பார்த்து விட்டு உயிர் நீப்பேனா! மார்பு அடைக்கிறது. இனி ஏதும் மிச்சம் இல்லை. விளக்கில் எண்ணெய் வற்றிப் போயிற்று, கௌசல்யே! சுமித்ரே!'' என்று



சொல்லி, வர வரப் பேச்சு அடங்கிப் போய் அன்றிரவே உயிர் நீத்தான் அரசன்.

**வா**ல்மீகி முனிவர் ராமாயணத்தை ஆரம்பிக்கும் போது, 'எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் ஓதியவன், தீர்க்கதரிசி, தேஜஸ் அடைந்தவன், யுத்தங்களில் வெற்றி பெற்ற வீரன், யாகங்கள் செய்து முடித்தவன், தருமத்தில் ஈடுபட்டவன், ரிஷியைப் போன்றவன், மூவுலகங்களிலும் புகழ் பெற்றவன், பகைவர்களையொழித்தவன், பல அரசர்களின் நட்பை அடைந்தவன், புலன்களையடக்கியாளும் திறமை கொண்டவன், பெருஞ் செல்வம் திரட்டியதில் இந்திரன் குபேரன் இவர்களுக்குச் சமானமானவன், ராஜ்ய பரிபாலனத்தில் மனுவைப் போன்றவன்' என்று சொல்லுகிறார், தசரதனைப் பற்றி. அந்தத் தசரதன் புத்திர சோகத்தால் கர்ம விதிப்படி தாங்க முடியாத துக்கத்தையடைந்து உயிர் நீத்தான்.

**அ**டிக்கடி மூர்ச்சை போவதும் பிறகு பிரக்ஞை வருவதுமாக இருந்த தசரதன் உயிர் நீத்த விஷயம் பக்கத்திலிருந்த கௌசல்யை, சுமித்திரைக்குக் கூடத் தெரியவில்லை. அவர்களும் சோகத்தாலும் கண் விழித்த களைப்பாலும் அந்தப்புரத்தில் ஒரு மூலையில் அயர்ந்து கிடந்தார்கள். பொழுது விடியும் காலத்தில் சூத மாகத காயகர்கள் அந்தப்புர வாயிலில் வழக்கம் போல் கூடி அவரவர்களுடைய கிரமப்படி அரசனையெழுப்ப சுப்பிரபாதம் பாடவும் வாத்தியம் வாசிக்கவும் செய்தார்கள். அரசன் எழுந்திருந்ததாகக் காணவில்லை. அரசன் எழுந்ததும் அவன் தேவைகளைக் கவனிக்க வேண்டிய பணியாட்கள் வெகு நேரம் காத்திருந்து விட்டு, 'இன்று அரசன் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை?' என்று சந்தேகத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள். அரசன் உயிரற்றுக் கிடப்பதைக் கண்டார்கள்.

பிறகு அரண்மனை முழுதும் விஷயம் தெரிந்து ஒரே துயரக் கடலாயிற்று. மூவுலகும் புகழ்பெற்ற தசரத மகாராஜாவின் மனைவிமார் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு துக்கம் தாங்காமல் அநாதைகள் போல் அழுதார்கள்.

(தொடரும்)

# தன்னம்பிக்கைக்கு ஒரு மாத இதழ்!



"**சா**ண்டி இழுத்தது.

கையில் எடுத்தேன்;

சொர்க்கத்தில் நான் மிதந்தேன்."

- என்று சொல்லும்படியான கவர்ச்சி, கட்டுக்கோப்பு, கருத்தாழம். முன்னேற உதவும் சிந்தனைகளை வழங்க என்றே ஒரு பத்திரிகை : "தன்னம்பிக்கை". மலேசியாவிலிருந்து வருகிறது. ஏதோ, அமெரிக்க 'நேஷனல் ஜாகிரபிக்' பத்திரிகையைப் பார்ப்பது போல் இருக்கிறது. அதனால் பெருமிதம் - பூரிப்பு.

ஆசிரியர், கே. பாலசுப்பிரமணியன் எனப்படும் 'பாலா'. இளைஞராக வாழ்வின் பல நீரோட்டங்களிலே அடித்துச் செல்லப்பட்டவர். எதிர்நீச்சல் போட்டவர். தமது திறமைக்கு ஒரு முத்திரையைக் கொடுப்பது போல் இந்த இதழ்களைத் தயாரிக்கிறார். பத்தாண்டுகளாக தன்னம்பிக்கைப் பயிற்சி முகாம்களை ஆயிரக்கணக்கில் நடத்தியவர். ஆயுள் காப்புறுதிக் கழகத்தில் நிர்வாகி.

"தன் முனைப்புத் தூண்டல்" என்ற வாசகத்தை உருவாக்கியதே பாலாதான். இன்று மலேசியாவில் அதிகமாகப் பேசப்படும் வாசகம் அது. தமிழ் தினசரி பத்திரிகையைத் திறந்தால் அதில் அதிகம் காணக் கூடிய விளம்பரங்கள் தன் முனைப்புத் தூண்டல் பயிற்சி முகாம்கள்தான்!

**த**ன்னம்பிக்கை - மாத இதழ் அரை நாளிதழ் சைஸில் 20 பக்கம். பாதி தமிழ், பாதி ஆங்கிலம். எம். எஸ். உதயமூர்த்தி, வைரமுத்து, லேனா தமிழ்வாணன், கே. பாலா, வசந்தி பாலசுப்பிரமணியன், அருண் ரங்கசாமி போன்றோரது தமிழ் கட்டுரைகள், வெற்றியின் ரகசியத்திலிருந்து குடும்ப பட்ஜெட் வரை அலசுகின்றன. நிறைய முன்னேற்றக் கட்டுரைகள். ஆங்கிலத்தில் மைக்கேல் அயரும் பயிற்சியாளப் பெண்மணி பேஜூவும் எழுதுகின்றனர். கேள்வி - பதில் பகுதியும் உண்டு. எல்லாம் கனமான விஷயங்கள். தரமான படைப்புகள்.

ஒவ்வோர் இதழையும் புத்தகம் போல் பத்திரப்படுத்திக் கொள்ளும் ஆசை எழுகிறது.

ஆபீஸ் மானேஜர் : ஆபீஸ்ல எந்தப் பொருள் களவு போனாலும் ஈட்டுத் தொகை கிடைக்கும்னு சொல்லித்தானே சார் பிரீமியம் கட்டச் சொன்னீங்க...?

இன்ஷ்யூரன்ஸ் அதிகாரி : அதுக்காக டிராயர்ல வாங்கி வச்சிருந்த லஞ்சத் தொகையைக் காணோம்னு சொன்னா அதுக்கு நாங்க என்ன சார் செய்ய முடியும்...?

- வி. ரேவதி





# வழிகாட்டும்

## முயன்றோம்; முடித்தோம்!

**எ**ங்கள் கல்லூரியிலிருந்து சென்ற ஆண்டு பச்சை மலைக்கு என். எஸ். எஸ். கேம்ப் போயிருந்தோம். செம்பூர் என்ற கிராமத்துக்குச் சாலை அமைத்துத் தருவது எங்கள் பணி. சாலையமைக்கத் தடையாக ஆங்காங்கே இரண்டு மூன்று அடி உயரத்திற்குப் பாறைகள். டைனமைட் இல்லாமல் பாறைகளை உடைக்க முடியுமா? இது ஊராரின் சந்தேகம். நாங்கள் விறகுகளைக் கொண்டு அப்பாறைகளைச் சில மணி நேரங்கள் சூடேற்றி, பிறகு திடீரெனத் தண்ணீரை ஊற்றிக் குளிரச் செய்வதன் மூலம் அப்பாறைகளை வெடிக்கச் செய்து அப்புறப் படுத்திச் சாலையமைத்தோம். ஆக, முயன்றால் முடியாதது ஏதுமில்லை என்பதற்கு அதுவோர் உதாரணம்!




- வ. நந்தகுமார், ஆகனூர்.

## நூறு சதம் வெற்றி!

**சி**வந்தையாபுரத்திலுள்ள அருள்மிகு முத்து மாலையம்மன் இந்து உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியர் நான். எங்கள் பள்ளியில் மூன்றாண்டுகளுக்கு முன்பு வரை எஸ்.எஸ்.எல்.சி. தேர்ச்சி விகிதம் 38 சதமாகத் தான் இருந்தது. யோசித்தோம். ஆசிரியர்கள் அனைவரும் பள்ளி முடிந்த பிறகும் மாணவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி கொடுக்க ஆரம்பித்தோம். அந்த ஆண்டே 82 சதம் வெற்றி கிடைத்தது. பயிற்சி வகுப்புகளைத் தொடர, கடந்த இரண்டாண்டுகளாக நூறு சதம் தேர்ச்சி! முயற்சி திருவினையாக்கும்!

- ஜெ. சுந்தரேசன், சிவந்தையாபுரம்.

## இன்னலைக் கடந்தேன்!

**ப**ல இன்னல்களுக்கிடையில் சிறு வாடகை நூலகம் ஆரம்பித்தேன். பணப் பிரச்னை; நஷ்டம். மனம் தளராமல் இரு நண்பர்களைப் பங்குதாரர்களாகச் சேர்த்துக் கொண்டு ஆரம்பித்தேன். நல்ல முறையில் வளர ஆரம்பித்தது. தொடர்ந்து ஸ்கிரீன் பிரிண்டிங் ஆரம்பிப்பதற்காகப் பழைய பொருள்கள் வேண்டி கல்கியில் 'பாலம்' பகுதிக்கு எழுதினேன். பலரது உதவியும் ஆலோசனையும் பெருதவியாக இருந்தது. தற்போது விளம்பர ஏஜென்ஸி ஆரம்பிக்க உத்தேசம்!

- வே. பார்த்தசாரதி, புதுவை - 4.

## நான்கு மந்திரங்கள்!

**ஏ**ழைமையான குடும்பம் என்பதால் பி.யு.சி.யுடன் படிப்பு நின்று போனது. சகோதரியின் கணவர் நிர்வகித்த மளிகைக் கடையில் சேர்ந்து, தினசரி வியாபாரத்தை 700 ரூபாயிலிருந்து 5,000 ரூபாயாக உயர்த்திக் காட்டினேன். எனது உழைப்புக்கு வீடு ஒன்றையே பரிசாக அளித்தார் அவர். பிறகு ஏற்பட்ட மனவருத்தம் காரணமாக அவரிடமிருந்து வெளியேறி, எஸ்.ஏ.எஸ். சோமசுந்தரம் செட்டியார் மளிகைக் கடையில் வேலைக்குச் சேர்ந்தேன். மனத் தென்புக்கு டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியின் புத்தகங்களைப் படிப்பேன். எனது ஆர்வத்தைக் கண்ட சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியை நேரில் அறிமுகப்படுத்தினார். எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவர் எழுத்தின் சக்தியை அவரிடமே சொன்ன போது நான் மேலும் சிறக்க வாழ்த்திக் கைகுலுக்கினார். அதன் எதிரொலியாக தனியாக அரிசிக் கடை வைத்தேன். பிறகு ரியல் எஸ்டேட், பைனான்சியர் என்று வளர்ந்து கொண்டிருக்கிறேன். கடும் உழைப்பு, விடாமுயற்சி, தன்னம்பிக்கை, கடவுள் நம்பிக்கை இந் நான்குமே எனது உயர்வுக்குக் காரணங்கள் என்றால் மிகையல்ல.



- ஆர். பாண்டியன், மயிலாடுதுறை.

## விரக்தியை விரட்டினேன்!

**ப**ட்டதாரியான நான் வேலை கிடைக்காத விரக்தியில் பம்பாய்க்கு ஓடிப் போக

# வாசகர்கள்!

முடிவு செய்து ரயில் ஏறினேன். ரயிலில் நான்கு நண்பர்களைச் சந்தித்தேன். அவர்கள் என்னைப் பற்றி விசாரித்த போது, ''எனது ஊர் பட்டுக்கோட்டை - எழுத்தாளர் பட்டுக் கோட்டை பிரபாகர் இருக்கிறார் அல்லவா, அந்த ஊர்!'' என்றேன். இதற்கு அவர்கள், ''அடுத்தவர் புகழிலா உன்னை அறிமுகம் செய்து கொள்வது? தன்னம்பிக்கையோடு உன்னைப் பற்றி மட்டும் சொல்!'' என்றார்கள். அதோடு, அவர்கள் நால்வரும் சேர்ந்து சுயதொழில் செய்வதாகவும் சொன்னார்கள். நானும் விரக்தியை விரட்டி விட்டு ஊர் திரும்பி, பெரிய அளவில் மளிகைக் கடையொன்று ஆரம்பித்து மகிழ்ச்சியுடன் இருக்கிறேன்.

- கஸ்தூரி சீனிவாசன், மதுக்கூர்.

**நண்பர் ஊட்டிய தன்னம்பிக்கை!**

**கா**வல் துறையில் சப்-இன்ஸ்பெக்டராகப் பணியாற்றிய காலம், 55-56 ஆம் ஆண்டுகளில் திருச்சி - தஞ்சை மாவட்டங்களில் நடந்த சில கூட்டுக் கொள்ளை வழக்குகளைக் கண்டுபிடிப்பதற்காக நியமிக்கப்பட்டேன். எனக்கு முன்பே பலர் முயன்றும் முடியாத போது நான் மட்டும் கண்டுபிடித்து விட முடியுமா? சோர்வுற்றிருந்த எனக்கு என் நண்பர் சந்தானம் என்னோடு சுமார் மூன்று மணி நேரம் பேசி எனக்குத் தன்னம்பிக்கையூட்டினார். நானும் புதிய உற்சாகத்துடன் செயல்பட்டு, இருபது நாட்களுக்குள் பல குற்றவாளிகளைக் கண்டுபிடித்தேன். நீதிபதியே என்னைப் பாராட்டினார். பிற்காலத்தில் அந்தச் செயல்பாடே எனது பதவி உயர்வுகளுக்கும் காரணமாக இருந்தது!

- டி. எம். குருசாமி, திருச்சி - 18.



**புலம்பல் வேண்டாம்!**

**எ**ங்களது மெல்லிசை நிகழ்ச்சி ஆரம்பமாகும் போது, 'நாங்கள் எம். எஸ். விஸ்வநாதனோ, கே. வி. மகாதேவனோ, இளையராஜாவோ அல்ல; சாதாரண ஏழைக் கலைஞர்கள். எங்கள் இசையில் தவறுகள் இருக்கும்; எங்களை மன்னித்து விடுங்கள்; உங்கள் பாதங்களைத் தொட்டுக் கேட்கிறேன்!' என்பார் அறிவிப்பாளர். ரசிகர்கள் ஏளனமாய்ச் சிரிக்க, கலைஞர்களோ வெட்கத்தில் நெளிவார்கள். 'இதென்ன தன்னம்பிக்கையில்லாத புலம்பல்?' என்று எனக்கு எரிச்சல். ஒரு நாள் அவர் தாமதமாய் வர நான், ''நாங்கள் உங்களோடிருப்பவர்கள். எங்களுக்குத் தெரிந்த சங்கீதத்தைக் கொண்டு உங்களைச் சந்தோஷப்படுத்துவுள்ளோம். உங்கள் ஒத்துழைப்புடன் நிகழ்ச்சி ஆரம்பமாகிறது'' என்று தொடங்கினேன். ரசிகர்களிடையே பலத்த வரவேற்பு. சக கலைஞர்களும் உற்சாகத்தோடு நிகழ்ச்சியை நடத்தினார்கள்.



- ஞானசேகரன், தூத்துக்குடி - 3.

**என்னாலும் முடிந்தது!**

**நா**ன் பள்ளியில் படிக்கும் போது என் தந்தை காலமானதால், பத்தாவது முடித்தவுடன் வேலைக்குப் போக வேண்டிய சூழ்நிலை. இருப்பினும் படிக்கும் ஆர்வம் என்னை விட்டு அகலவில்லை. அஞ்சல் வழியில் படிக்கலாமே என்று சிலர் யோசனை கூறினார்கள். அஞ்சல் வழிக் கல்வியில் என்ன கற்க முடியும் என்று அலட்சியப்படுத்தினேன். இந்த நிலையில்தான் திண்டிவனம் அருகிலுள்ள கிராமத்தில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஒருவர், அஞ்சல் வழியில் பயின்று, ஒரு கல்லூரியில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றுவதாகப் பத்திரிகையில் படித்தேன். அதைப் படித்ததும் என்னுள்ளும் தன்னம்பிக்கை வளர்ந்து, அஞ்சல் வழிக் கல்வியில் +2 வரை படித்து, இப்போது பி.ஏ. பட்டப் படிப்பும் படித்து வருகிறேன். பெயர் நினைவுக்கு வராவிட்டாலும் எனக்கு வழிகாட்டியாக அமைந்த அந்த நபரை என்னால் மறக்கவே முடியாது.

- எஸ். செந்தில்குமார், சென்னை - 32.

அந்த கல்லூரி மாணவனுக்குக் கார்டூன்கள் வரைவதில் நாட்டம் இருந்தது. நையாண்டிச் சித்திரங்களை அனாயாசமாகத் தீட்டி, 'பத்திரிகைகளுக்கு அனுப்பிப் பார்ப்போமே' என்ற உந்துதலில் செயல்பட்டார். இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலம் அது... தாணுவரைந்த 'யுத்த பிரமுகர்கள்' கார்ட்டூன் ஆனந்த விகடன் அட்டைப் படத்திலேயே வெளியானது! கல்லூரிப் படிப்பை முடித்த கையோடு விகடனில் வேலையும் கிடைத்தது. ஐந்து ஆண்டுகள் விகடன் கார்டூனிஸ்டாகப் பணி செய்தார். அதைத் தொடர்ந்து பத்து வருடங்கள் free lance artist ஆக, பின்னர் இந்தியன் எக்ஸ்பிரஸ், அப்புறம் மெயில், மீண்டும் இந்தியன் எக்ஸ்பிரஸ், இறுதியாக சுவராஜ்யா...

'' 'சுவராஜ்யா' இதழுக்காக ராஜாஜியிடம் பணியாற்றிய எட்டு வருடங்கள் என் வாழ்க்கையின் பசுமையான காலம். அவர் தூய சிந்தனையாளர் - வியாழக்கிழமை தோறும் அவருடன் சேர்ந்து அரசியலை அலசிப் பார்க்கும் அரிய வாய்ப்பு எனக்கு.. அவர் பேசிய வார்த்தைகளைப் போல் அவர் காத்த மௌனத்துக்கும் கனமான அர்த்தம் இருக்கும்...'' - நெகிழ்ச்சியுடன் நினைவுகூர்கிறார் தாணு.

ஆனால்... சுவராஜ்யாவிலிருந்தும் விலகினார் தாணு.

''என்னால் ஒரு பத்திரிகை அலுவலகத்தின் காலம் பிசகாத அட்டவணைக்குக் கட்டுப்பட முடியவில்லை. உடல்-மனரீதியாக... தனிப்பட்ட முறையில் சினிமா ஆர்ட் டைரக்ஷன் உள்பட சில பல முயற்சிகள், பெரிய அளவில் பெயரையோ வருமானத்தையோ பெற்றுத் தரவில்லை... என் சிந்தனைக்கு இருந்த பலம் என் சித்திரங்களுக்கு இல்லை என்று ஒரு கட்டத்தில் உணர்ந்தேன்...''

விளைவு...? கிட்டத்தட்ட முப்பது வருஷங்கள் புழங்கிய ஒரு துறைக்கு குட்பை சொல்லி விட்டு வலியில்லாமல் விலகினார் தாணு.

ஒரு திறமையை மூட்டைக் கட்டி வைப்பது குறித்து வலியில்லையேயொழிய வேறு வேதனை இருந்தது... வருமானம் தேடும் வேதனை... 1969 இல் பெரிய நெருக்கடி.... எப்படி குடும்பம் நடத்துவது என மிகப் பெரிய கேள்விக்குறி.

அப்போது அதிகம் பேருக்குத் தெரிந்திராத ஒன்று தாணுவுக்குத் தெரிந்திருந்தது : ஃபிரெஞ்சு மொழி. மணி'ஸ் டுடோரியல் என்ற நிறுவனத்தில் ஃப்ரெஞ்சு மொழி ஆசிரியராகச் சேர்ந்தார்.

சீக்கிரமே அந்த வேலையைத் துறந்து, தம் வீட்டு மாடியிலேயே ஃப்ரெஞ்சு வகுப்புகள் ஆரம்பித்தார்... ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வுக்குப் பயிற்சி; மருத்துவக் கல்லூரி என்ட்ரன்ஸ் பயிற்சி என விரிவடைந்த வகுப்புகளுக்குத் தனி கட்டடம் தேவைப்பட்டது. மாம்பலத்தில் சொந்தக் கட்டடம் வாங்கப்பட்டு அங்கே அவை தொடர்ந்தன. இது 1974 இல்.

இன்று... டுடோரியல் காலேஜ் என்ற சொற் பிரயோகத்துக்கு ஒரு புதிய அர்த்தத்தைத் தமது ப்ரில்லியன்ட் டுடோரியல்ஸ் மூலமாக வழங்கி இருக்கிறார் தாணு. தோற்றவர்கள் வந்து சேரும்



# பிரில்லியண்ட் தாணு

இடமில்லை இது; ஜெயிக்கப் போகிற வர்கள் நாடும் உந்து சக்தி இந்த 'ப்ரில்லி யண்ட்' என்று பலமாக முத்திரை விழுந்து விட்டது. இது எப்படி நடந்தது...?

''தோற்றவர்களை ஜெயிக்க வைக்கும் முயற்சியில் உதவ தலைசிறந்த ஆசிரியர் களைப் பெற முடியவில்லை. ஆனால் என் நிறுவனத்தில் முதல் தரமான ஆசிரியர்கள் தான் பணியாற்ற வேண்டும் என்று எனக்கு ஆசை. அதனால் அத்தகைய ஆசிரியர்களை ஈர்க்கக்கூடிய பயிற்சிகளான மெடிகல் என்ட்ரன்ஸ், ஐ.ஐ.டி. என்ட்ரன்ஸ் போன்ற வற்றை அறிமுகப்படுத்தினேன்.

அறிவு ஜீவி ஆசிரியர்கள், அறிவுத் தாக முடைய மாணவர்கள் என ப்ரில்லியன்டின் சூழ்நிலை பிரகாசித்தது. மெடிகல் காலேஜ் நுழைவுத் தேர்வுக்குத் தபால் மூலம் பயிற்சி வழங்குவது போல் ஐ.ஐ.டி. என்ட்ரன்ஸுக் கும் வழங்க முடியவில்லையே என்ற குறை மட்டும் இருந்தது. தொழில்நுட்பத் துறை பயிற்சியைத் தபால் மூலம் வழங்குவது சாத்தியமில்லை என்பது சம்பந்தப்பட்ட ஆசிரியர்களின் முடிவு.

ஆனால் 77 தேர்தல் காரணமாகத் தேர்வுகள் ஒத்திவைக்கப்பட, மாணவர்கள் நேரடி பயிற்சிக்கு வர முடியாமல் போயிற்று. விடேன் தொடேன் என்று ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வுப் பாடங்கள் அச்சிடப்பட்டுத் தபால் மூலம் அனுப்பப் பட்டன. ஒரு கட்டாயத்தின் பேரில் நடந்த காரியம், 'சாத்தியமல்ல என எண்ணியதும் சாத்தியம்தான்' என்று நிரூபித்தது!

அதுவரை சற்றே பாராமுகமாய் இருந்த திருமகளின் முழுமையான கடாக்ஷத் தைப் பெற்றுத் தந்ததும் 'காலத்தின் கட்டாய மாக' அமைந்த இந்தத் திருப்புமுனைதான்!

'' '77-ல் தான் என் மனைவிக்கு என் பேரில் என் தொழில் முயற்சியின் வெற்றி குறித்து நம்பிக்கை வந்தது... ஏராளமான மாணவர்கள் 'ப்ரில்லியன்ட்' குடை நிழ லில் சேர்ந்தார்கள்.... ஆனால் தொழிலுக் குப் பயங்கரமான போட்டி இருந்தது. பம் பாயில் மிகப் பிரசித்தமாயிருந்த மற்றொரு டுடோரியல் உருவில்.

''நாங்கள் ஐ.ஐ.டி.க்குத் தபால் பாடம் தயாரித்ததும் அவர்களும் அதையே செய் தார்கள். அங்கு நேரடி வகுப்புக்குச் சென்று வந்த மாணவர்கள் ஏர் கண்டிஷன் சுகத்தில் பாடம் பயின்றதை வர்ணித்தார்கள்...

''எதடா! ஒரு குகைக்குள் தஞ்சம் புகுந் தால் அங்கும் காட்டு விலங்கு பயமுறுத்து கிறதே!' என்று கவலைப்பட்டேன். ஆனால் எடுத்த காரியத்தைச் சுலபத்தில் விட்டு விடக்கூடாது. பின்வாங்கக் கூடாது, போரா டணும்...

''திட்டம் வகுத்தேன் - போட்டியா ளரை வெல்ல வேண்டுமானால் 'நான் இருக்



போட்டியாளரை வெல்ல வேண்டுமானால் 'நான் இருக்கேன்! நான் இருக்கேன்' என்று சப்தம் போட வேண்டும். என்னிடம் வந்தால் என்ன கிடைக்கும் என்று பறைசாற்ற வேண்டும்.

கேன்! நான் இருக்கேன்' என்று சப்தம் போட வேண்டும். என்னிடம் வந்தால் என்ன கிடைக்கும் என்று பறைசாற்ற வேண்டும். விளம்பரங்களுக்காக என் கடைசி பைசா வரை செலவழித்தேன். பித்துப் பிடித்தவன் போல் விளம்பரங்கள் வெளியிட்டேன். அப் படியும் போட்டியாளரிடம் பதினாறு மாணவர்கள் சென்றால் என்னிடம் இரண்டு பேர்தான் வந்தார்கள். எனக்கோ நம்பர் ஒன் இடத்தைக் கைப்பற்றும் பிடிவாதம் வளர்ந் ததேயொழியக் குறையவில்லை.

''யோசித்தேன்... தெருவின் ஒரு முனை யில் பிள்ளையார் கோயில். அங்கு தேங்காய் உடைத்து விட்டுப் பரீட்சைக்குப் போகும் மாணவன், அந்த தெருவின் மறுமுனையில் இன்னொரு கோயில் எழுந்தால், அதைக் கடந்து செல்லும் போது அங்கேயும் வணங் காமலா போய் விடுவான்...? நிச்சயம் வணங்குவான். ஆனால் முதல் கோயிலுக் குப் போவதை அவன் நிறுத்த மாட்டான்...

''போட்டியாளரிடம் செல்லும் மாண வனையே என்னிடமும் வரவழைக்க வேண் டும். அதற்கு ஒரே வழி, போட்டியாளர் தராத ஒன்றை நான் தருவதுதான்...''

பிறந்தது - இன்று ஐ.ஐ.டி. ஆர்வலர் களிடையே செல்லமாக Y.G. File என அழைக்கப்படும் Young Genius File. ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வு எழுதுவோருக்கு நூறே ரூபாயில் கிடைத்த மிகவும் உபயோகமான துணை ஏடு. போட்டியாளரிடம் பல நூறு கொடுத்துப் பயிற்சிக்குப் போன மாணவன் கூடுதலாக நூறு ரூபாய் கொடுத்து Y.G. File ஐயும் வாங்கினான். அவனையும் தன் மாண வனாக அங்கீகரித்து அணைத்துக் கொண் டது ப்ரில்லியன்ட்.



# கட்டுரை குறித்து எம்.எஸ்.யு.கமெண்ட்

தொழில் முனைவோருக்குச் சில தனி குணங்கள் தேவை. அவற்றை யாரும் கற்றுக் கொள்ள முடியும். சாதனையாளராக மாற முடியும்.

என்ன அந்தக் குணங்கள்?

* அவன் தன் கட்டுப்பாட்டுக்குள் தன் வாழ்க்கையைக் கொண்டு வர விரும்புபவன். சுதந்திரமானவன். துணிவு கொண்டவன். தானு பத்திரிகை அலுவலக வேலைக்குப் பிறரிடம் ஊழியம் செய்கிற மனநிலைக்கு - 'டாட்டா' சொல்கிறார்.

* அவன் தன் மீது நம்பிக்கை கொண்டவன்.

- ''என் சிந்தனைக்கிருந்த பலம் என் சித்திரங்களுக்கு இல்லை'' என்று சொல்லி வெளியேறுகிறார்.

* பொருளின் தரத்தில் கவனம் உடையவன்.

- நுழைவுப் பரீட்சைகளுக்கு மாணவர்களைத் தயார் செய்வதன் மூலம் ஆர்வமுள்ள சிறந்த மாணவர்களையும் சிறந்த ஆசிரியர்களையும் பெறுகிறார்.

* மாறுபட்ட சிந்தனையாளன் (CREATIVE PERSON) - 'நான் இருக்கிறேன்' என்ற ஓயாத விளம்பரங்கள்; தபால் மூலம் தர முடியாதெனக் கருதப்பட்டதைத் தருவது; இளம் மேதைகளுக்கான தொகுப்பு என்று

Y.G. File இன் விலை அதிகரிக்கப்பட்டாலும் மவுசு குறையவில்லை. அதன் மூலம் ப்ரில்லியன்டின் பெயர் முன்பெப்போதையும் விட பிரகாசமாகிப் பரவியது. போட்டியாளரைக் காட்டிலும் அதிகக் கட்டணத்துக்கு இப்போது ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வுக்கு வகுப்புகள் நடத்துகிறார் தானு. கடந்த பத்து வருடங்களாகத் தொடர்ந்து 'ப்ரில்லியன்ட்' மாணவர்களே ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வில் முதல் ராங்க் வாங்கி வருகிறார்கள்... இந்த வெற்றியையும் விளம்பரமாக்கி மேலும் வெற்றிகள் குவிக்கிறார்.

இன்று ப்ரில்லியன்ட், ஐ.ஏ.எஸ். நுழைவுத் தேர்வு எழுதும் மாணவர்களுக்கு மூன்று வருடங்கள் வரை ஆதரவு தரும் திட்டம் வைத்துள்ளது. மருத்துவக் கல்லூரி நுழைவுத் தேர்வுப் பாடங்களையும் சிறப்பாக அபிவிருத்தி செய்துள்ளது. சென்னையில் இரண்டு, டெல்லி, பம்பாய், கல்கத்தாவில் தலா ஒன்று என கம்ப்யூட்டர் சென்டர்கள் நடக்கின்றன. டெல்லி சென்டருக்கு மட்டும் ஐம்பது லட்சம் ரூபாய் அளவுக்கு விளம்பரம் செய்யப்பட்டுள்ளது!

மகன், மருமகளிடம் ப்ரில்லியன்டை ஒப்படைத்து விட்டார் தானு. ரிடையர் ஆகி திருநெல்வேலியில் செட்டில் ஆக இருந்த வரை மனைவி கோகிலா உசுப்பியிருக்கிறார்.

துபாயில் மருத்துவக் கல்லூரி நுழைவுத் தேர்வுக்கான நேர்முகப் பாடங்கள் நடத்த மூன்று வருட காண்டிராக்ட் இருக்கிறது ப்ரில்லியன்டுக்கு.

''அந்த காண்டிராக்ட் முடிவடையும் கட்டத்தில் இருக்கிறது. 'அதற்குப் பிறகு ப்ரில்லியன்ட் தனிப்பட்ட முறையில் அந்தப் பாட வகுப்பைத் தொடர வேண்டும்; அதற்கு நான் முனைய வேண்டும்' என்கிறாள் என் மனைவி... ஒரு காலத்தில் நான் கண்மூடித்தனமாக விளம்பரம் செய்வதற்காகக் கடைசி பைசா வரை செலவழித்த போது, தன் இடுப்பிலிருந்த சாவிக் கொத்தை என்னிடம் தர மறுத்த அதே கோகிலாதான் இப்படிச் சொல்கிறாள். அவளுக்கு நான் போதும் போதும் என்கிற அளவுக்குக் கஷ்டங்கள் கொடுத்து விட்டேன்.. இனி அவள் சொல்வதைக் கேட்பதுதான் நியாயம்!'' துடிப்புடன் சொல்கிறார் தானு.

இந்த வயதிலும் அவரால் சாதிக்க முடியும் - தினமும் யோகாசனம் செய்கிறார். ஒன்றரை மணி நேரம் வாக்கிங் போகிறார் - அதுவும் அவர் வெற்றிக்கு அடித்தளமான ஐ.ஐ.டி. வளாகத்திலேயே!

– சீதா ரவி

# விபத்தை வெற்றி கண்ட ஹீரோ!



**டிசம்பர் 90 வரை ஊன்றுகோலோடு நடந்த சாய்ராஜ், இன்று வியக்கத்தக்க வகையில் ரஞ்சி டிராஃபியில் பௌலிங், பேட்டிங் இரண்டிலும் பிரகாசிக்கிறார் என்றால், ஒரே காரணம் அவரது தன்னம்பிக்கையும், சாதிக்க வேண்டும் என்ற விடாமுயற்சியும்தான்.**

இரண்டரை வருடங்களுக்கு முன்பு தம் நண்பர்களோடு குஷியாக மெரின்ட்ரைவ் சாலையோடு போகையில் நேர்ந்த விபத்து, கிரிக்கெட் வீரர் சாய்ராஜ் பஹ்துலேயின் வாழ்வில் ஒரு மகத்தான மாற்றத்தை ஏற்படுத்தியது. வலது தொடை எலும்பு நொறுங்கி, ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டவருக்கு ஆபரேஷன். 52 தையல்கள் போடப்பட்டன! தொடையில் தகடு பொருத்தப்பட்டு படுக்கையில் இருந்தபோது, இனி மறுபடியும் தம்மால் நடக்க முடியுமா என்ற கேள்வி அவர் மனத்தில் எழுந்தது. 21 நாட்கள் கழித்து மருத்துவமனையிலிருந்து வெளிவந்த பின்புதான் ஜீப்பில் கூட வந்த ஒரு நண்பன் இறந்துவிட்டான் என்பது தெரியும்!

டிசம்பர் 90 வரை ஊன்றுகோலோடு நடந்த சாய்ராஜ், இன்று வியக்கத்தக்க வகையில் ரஞ்சி டிராஃபியில் பௌலிங், பேட்டிங் இரண்டிலும் பிரகாசிக்கிறார் என்றால், ஒரே காரணம் அவரது தன்னம்பிக்கையும், சாதிக்க வேண்டும் என்ற விடாமுயற்சியும்தான். தினமும் காலை குறைந்தது நான்கு மணிநேர கிரிக்கெட் பயிற்சி, மாலையிலும் அதே போன்ற பயிற்சி எனத் தீவிர ஈடுபாட்டுடன் விளையாடுவது அவரை நல்ல ரஞ்சி ஆட்டக்காரராக உருவாக்கியுள்ளது.



ஷீரடி சாயிபாபா பக்தரான அவரது தந்தை தம் மகனுக்கு 'சாய்ராஜ்' என்று பெயரிட்டார். மிகச் சிறிய வயது முதலே தம் தந்தையோடு இரவு பதினோரு மணிக்கு மேல் சந்தடியற்ற சாலையில் கிரிக்கெட் விளையாட ஆரம்பித்தார் சாய்ராஜ். அந்த ஆர்வம் பயங்கர விபத்துக்குப் பிறகு இன்னும் தொடர்கிறது.

கடந்த இரண்டு வருடங்களில் இவரது முன்னேற்றம் பிரமிக்கத்தக்கது. ரஞ்சிக் கோப்பையில் பம்பாயின் முக்கிய ஆல் ரவுண்டராகத் திகழும் இவர், இந்த சீசனில் ஆறு மேட்ச்களில் 282 ரன்கள் (1 சதம் உட்பட) எடுத்தார். 15 விக்கெட்டுகளை வீழ்த்தினார். சென்ற வருடம் கைலாஷ் கடானி தலைமையில் இங்கிலாந்து சென்றார். அங்கும் நன்றாக விளையாடியதில் ஊர்ஸ்டர்ஷயர் (Worcestershire) B - டீமிற்கு (Second XI) தேர்ந்தெடுக்கப்பட்டார். சமீபத்தில் இங்கிலாந்துக்கெதிராக இந்திய இளைஞர் அணிக்கும் (Under 25) தேர்ந்தெடுக்கப்பட்டார். ஃப்ராங்க் டைஸன் காம்ப்பில் சேர்ந்தது, தமது கிரிக்கெட் முன்னேற்றத்திற்கு ஒரு முக்கிய காரணம் என்று கருதுகிறார்.

முன்னுக்கு வரத் துடிக்கும் நூற்றுக்கணக்கான கிரிக்கெட் வீரர்களில் சாய்ராஜும் ஒருவர் என்று மட்டும்தான் பொதுமக்கள் நினைக்கக்கூடும். ஆனால் அவரது வாழ்க்கையை அறிந்தவர்களுக்கோ அவர் விபத்தை வெற்றி கொண்ட ஹீரோ!

– அம்ருதா பார்த்தசாரதி

# பிரபலங்கள் செய்த TV மர்சனம்

**வாரா வாரம் நாமே விமர்சித்து போரடித்துப் போக, மாறுதலுக்காகச் சில பிரமுகர்களை இந்த வாரம் விமர்சிக்க (மனசுக்குள்ளேயே) அழைத்தோம்.**

● **மெட்ரோ சானல் லட்சுமி பேட்டி பற்றி வலம்புரிஜான் :**

கோடை காலத்து வியர்வை இரவில் ஓர் வசந்தப் படையெடுப்பு. வாள் நுனிப் பேச்சில் வார்த்தைத் தாண்டவம். சிந்தனைத் தீவிரம்; செந்தமிழ் ஊர்வலம். அறிவின் சிலிர்ப்பில் அகப்பட்ட முத்து. அடடா, தமிழா, இவள் உன் சொத்து!

● **நான் ஸ்டாப் நான்ஸென்ஸ் - காமெடி நிகழ்ச்சி பற்றி சுஜாதா :**

நகைச்சுவை நிகழ்ச்சி என்று முத்திரை குத்தி, உலகளாவிய அங்கீகாரம் கொடுத்து விட்ட பிறகு, அதைப் பார்த்து விட்டு சிரிப்பு வராமல் போவது மகா சோகம். நா. நான்ஸென்ஸ் காட்சி அமைப்புகளில் ஒரு விதமான Repetition ஐக் காண்கிறேன். ஜனங்கள் வெகு உற்சாகமாகக் கேஸட்டில் சிரிக்கிறார்கள். இந்தக் கேவலத்தை விட நம்மூர் வாழைப் பழத் தோலில் வழுக்கி விழும் காமெடி பெட்டர்.

● **விகவின் தொடரும் நினைவுகள் குறித்து விஜயலட்சுமி நவநீத கிருஷ்ணன் :**

(பேக்கிரௌண்டில் டங்குனக்கர, டங்குனக்கர)

பார்த்தேனே டீவியில, பார்த்தேனே டீவியில
பதில் சொன்ன நேர்த்தி என்ன, பசி போன மாயமென்ன,
நாடகமா இருந்தாலும் நல்லாத்தான் இருந்திச்சி
பூடகமே இல்லாம, புட்டு வெச்ச அழகு என்ன
தலை நெரைச்ச வாலிபனே, தானானே தானானே
பலசரக்கு தெரிஞ்சதப்போ தன்னானே, தானானே

● **ஞாயிறு - மனவளர்ச்சி குன்றியவர்கள் பற்றிய ஷ்யாம் பெனகல் டாக்குமென்ட்ரி குறித்து மணிரத்னம் :**

முடியல... என்னால முடியல... என்னால பாக்க முடியல... எத்தனை... எத்தனை சின்ன பசங்க... ஏன்? ஏன்? ஏன் இப்படி? ஏன் இப்படி ஆச்சு? என்ன பாவம் பண்ணினாங்க? பேச.. பேச முடியல... கேக்க முடியல... நடக்க முடியல... மாடிப்படில.. தத்தித் தத்தி அந்தப் பையன் ஏற... எவ்ளோ... எவ்ளோ கஷ்டம்? ஏன்? ஏன் இப்படி? அப்படியும்... அப்படியும் வேலை செய்யறாங்க! கடவுள் ஏன் இப்படிப் பண்ணார்? நோ. கடவுள் இல்ல... கல்... கல்... Yes it is nothing but a stone... *(உச்சஸ் தாயியில் குரல் உடைகிறது.)*



* "வசந்தப் படையெடுப்பு!"

● Sports Hour **- நிகழ்ச்சிகள் குறித்து குமுதம் அரசு :**

மெட்ரோவை வுடு நைனா. ஆறரை மணிக்கு ஸ்போர்ட்ஸ் பாரு... அம்சம்ணேன். பார் விளோனா வைர - ஜம்ப் காட்னாங்களே, உய்... உய்ய்!

* "புட்டு வெச்ச அழகு!"

● **வளமும் வாழ்வும் - சோயா உற்பத்தி பற்றி வாரியார் சுவாமிகள் :**

எல்லாம் வல்ல வயலூர் முருகப் பெருமான் அருளாலே, சோயா உற்பத்தி விலே - நல்லபடியாப் பண்ணினா, ஏக்கருக்கு பதினையாயிரம் லாபம்னு சொன்னா(ர்). சொன்னவர் பாவம், ரொம்ப பயந்த சுபாவம். அவர் மீசையிலே இருக்கற முறுக்கு, பேச்சில இல்ல. அப்புறம் அந்த கேள்வி கேட்ட அம்மணி... சோயா பற்றி கொஞ்சம் விவரம் தெரிஞ்சுண்டு வந்து அழுத்தமான கேள்விகளை கேட்டிருக்கக் கூடாதோன்னு பக்கத்து வீட்டுப் பையங் கிட்ட கேட்ட(ன்). 'அதான் டீ.வி.'ன்னு ஓடியே போயிட்டான்.

– கிச்சா

# அப்பா எழுதிய கடைசி கடிதம்

சௌகார் ஜானகி

அப்பாவின் மரணச் செய்தி கேட்ட அதிர்ச்சியிலிருந்து என்னை நானே விடுவித்துக் கொண்டு செயல்பட வேண்டியிருந்தது. காரணம், உடனடியாக எனக்கு உதவக்கூடியவர்கள் யாரும் இல்லை. என் கணவர் அப்போது டெல்லியிலிருந்தார். அம்மாவோ தங்கை கிருஷ்ணகுமாரியின் ஷூட்டிங்குக்காக அவளுடன் மைசூர் போயிருந்தார். நானே கல்கத்தா போய் அப்பாவின் உடலை சென்னைக்கு எடுத்து வர ஏற்பாடு செய்யலாமா என்று யோசித்தேன். அது என்னால் ஆகக் கூடிய காரியம் என்று தோன்றவில்லை.

என் கணவருக்கு போன் செய்து விஷயத்தைச் சொன்னேன். வருத்தமடைந்த அவர், தாமே கல்கத்தா சென்று அப்பாவின் உடலுடன் மறுநாள் விமானத்தில் சென்னை வருவதாகக் கூறினார்.

அடுத்தபடியாக அம்மாவுக்கு எப்படி விஷயத்தை உடைப்பது என்ற பிரச்னை. அவருக்கு ஏற்கெனவே பலவீனமான இதயம்... அதிர்ச்சி தரும் எந்த விஷயத்தையும் அவரிடம் பட்டென்று போட்டு விடக்கூடாது என்பது டாக்டரின் அறிவுரை. என் சகோதரனைக் கூப்பிட்டு, மைசூருக்குப் போகச் சொன்னேன். ''ஜானகிக்கு உடம்பு சரியில்லை; அவள் உங்களைப் பார்க்க விரும்புகிறாள்'' என்று கூறி அம்மாவையும் தங்கையையும் அழைத்து வரச் சொன்னேன்.

தங்கை, அம்மாவுடன் சென்னை திரும்பிய சகோதரனைத் தெருக் கோடியிலேயே நிறுத்தி, ''ஜானகிக்கு உண்மையில் உடம்பு ஒன்றும் இல்லை... அப்பாவுக்குத்தான் ரொம்ப சீரியஸாக உள்ளது'' என்று எங்கள் குடும்ப டாக்டரை விட்டுச் சொல்லச் சொன்னேன்.

இந்தப் பொய்யே அம்மாவை உலுக்கி விட்டது. எனினும் டாக்டர் முன்னெச்சரிக்கையாக ஊசி போட்டு அவருக்குப் பெரிய அளவில் பாதிப்பு வராமல் கவனித்துக் கொண்டார்.

அப்பாவின் உடலைக் கண்ட மாத்திரத்தில் நிலைமையை உணர்ந்த அம்மா, வீறிட்டு ஒருமுறை அலறினார். அதன் பிறகு அவர் கண்ணிலிருந்து சொட்டுக் கண்ணீர் கூட வரவில்லை. அத்தனை சோகத்தையும் தன்னுள்ளே கட்டுப்படுத்திக் கொண்டார்.

பி.ஏ. படித்துக் கொண்டிருந்த காலத்திலேயே தம்மைச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடுத்திக் கொண்டவர் என் தந்தை. ஆந்திராவின் பல பகுதிகளுக்குச் சென்று தீவிர மதுவிலக்குப் பிரசாரம் செய்தவர்.

ரொம்ப மென்மையான சுபாவம். யாரையும் ஒரு வார்த்தை அதிர்ந்து பேச மாட்டார். முதலில் சிறு சிறு நிறுவனங்களில் பணியாற்றி வந்தார். பின்னர் டாக்டர் சர்வெபள்ளி ராதாகிருஷ்ணன் அவர்களுடன் பரிச்சயம் ஏற்பட்டது. என் தந்தையின் திறமைகளும் பண்புகளும் டாக்டர் ராதாகிருஷ்ணனுக்குப் பிடித்துப் போயின.

''நீ அயல்நாடு சென்று மேல்படிப்பு படித்து வர நான் ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறி அப்பாவை லண்டனுக்கு அனுப்பி வைத்தார். அங்குதான் பேப்பர் தயாரிப்புத் தொழில் நுட்பத்தைக் கற்றார் என் தந்தை. இந்தியா திரும்பி பல தனியார் நிறுவனங்களிலும் அரசாங்க நிறுவனங்களிலும் தாம் அயல்நாட்டில் கற்ற தொழில் நுட்பத் திறன் பயன்படும்படியான பணிகளில் இருந்தார்.

அயல்நாடு புறப்பட இருந்தவரை 'கரை கடந்து போவது பாவம்' என எச்சரிக்க முயன்றனர் பலர். ஆனால் அப்பாவுக்குக் கடவுள் நம்பிக்கை உண்டே ஒழிய மூட சம்பிரதாயங்களில் நம்பிக்கை கிடையாது. கடமையுணர்வும் ஆத்ம சுத்தமும் தான் முக்கியம் என்று அடிக்கடி சொல்லுவார்.



✱ அப்பாவும் அம்மாவும் (வெங்கோஜிராவ் - சச்சிதேவி)

அவருடைய மனோ திடமும் தெளிவான சிந்தனையும் என்னுடைய பண்பட்ட வளர்ச்சிக்கு நிறைய உதவின. அவர் காலமான பிறகும் பல்வேறு சந்தர்ப்பங்களில் அவர் மனோ பலத்தை எண்ணி நான் துணிவு பெற்றதுண்டு.

அவரது இறுதிச் சடங்குகளின் போது சுடுகாடு வரை சென்று அவருக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்று விரும்பினேன். ஆனால் சம்பிரதாயத்துக்கு விரோதமாக ஒரு பெண் சுடுகாட்டுக்குப் போகக் கூடாது என்று தடுத்தனர் என் குடும்பத்தார்.

அப்பாவுக்கே சம்பிரதாயங்களில் நம்பிக்கையில்லை என்னும் போது அவர்கள் இவ்வாறு சொன்னது எனக்கு அதிக வேதனையளித்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் 'என் விருப்பப்படிதான் செய்வேன்' என்று பிடிவாதம் பிடித்த என்னை அதட்டி, அடக்கியவர் எம். ஆர். ராதாதான். என் தந்தை இறந்த செய்தி அறிந்ததுமே என் வீட்டுக்கு வந்து விட்டார். ஆறுதல் சொல்லி என்னைத் தேற்றியதோடு அல்லாமல் ஆக வேண்டிய காரியங்கள் தாமதமின்றி நடக்கவும் உதவியாக இருந்தார்.

அப்பா கல்கத்தாவில் தனியாக இருந்த போது அவருடன் நாராயணன் என்ற இளைஞர் உதவியாளராக தங்கியிருந்தார். அப்பாவின் கடைசி தினத்தை அவர் என்னிடம் வர்ணித்தார் :

''அவர் மிகவும் மும்முரமாக யாருக்கோ கடிதம் எழுதினார். யாருக்கு என்று கேட்ட போது 'ஜானகிக்குத்தான் லெட்டர்' என்றார். 'நாளைக்கு ஊருக்குப் போய் அவங்க வீட்லதானே தங்கப் போறீங்க?' என்று கேட்ட போது. 'ஆமாம் மறந்தே போச்சு... அதனாலென்ன, கடிதத்தை ஒட்டித் தபாலில் சேர்த்துடு' என்று சொல்லிக் கொடுத்தார்...

''கடிதத்தைப் போஸ்ட் செய்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவருக்கு மயக்கம் வந்து கீழே விழுந்து விட்டார். காரணம் செரிபிரல் ஹெமரேஜ். பதற்றமடைந்து ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனேன். அங்கு அட்மிட் ஆகி சிறிது நேரத்துக்குள் 'கோமா' நிலையை அடைந்து விட்டார். அப்புறம் நினைவு திரும்பாமலே அவர் உயிர் பிரிந்து விட்டது...''

நாராயணன் குறிப்பிட்ட அந்தக் கடிதம் அப்பா காலமான ஒரு வாரத்துக்குப் பிறகு வந்தது. நடுங்கும் கரங்களுடன் அதைப் பிரித்தேன். இடது கையால் எழுதப்பட்டது போல் தடுமாறித் தடுமாறி அவர் எழுதியிருந்தார்.

(தொடரும்)

---

## 'முடியும்' என்று சொல்லுங்கள் அற்புத சக்தியைக் காணுங்கள்!

நம்மால் எதுவும் முடியும் என்ற
நம்பிக்கை இருக்கணும் நமக்கு
சூழல் ஒழிந்திடும், உன்னதம் மலர்ந்திடும்
நாடுவளம் பெறும், நம்மால் முடியும்!

வெந்ததைத் தின்று விதி வந்த போது
வீழ்வோம் என்றெண்ண லாமா?
வெண்பனி மலையின் ஒளி
விளக்கதுபோல்
மண் தனில் மலர வேண்டாமா?

அனைத்தையும் இறைவன் தலையிலே
சுமத்தி
ஆண்மையை இழந்திட லாமா?
அளப்பரும் ஆற்றல் இருக்கின்ற போது
அதை அறிந்துவர வேண்டாமா?

முடியும் என்றோர்முறை சொல்லிப்
பாருங்கள்,
மூச்சினிலே சக்தி எழுந்திடச்
சேருங்கள்
அணிதிரளும் மக்கள் ஆற்றலுக் குள்ளே
அற்புத சக்தியைக் காணுங்கள்!

- ஆர். வேங்கையன்





# சோனியா என்ன செய்கிறார்?

●● ஆர்ப்பரிப்பான அரசியல் அலையிலிருந்து விலகி, அமைதியாகச் சமூக சேவையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார் சோனியா காந்தி! இவரது 'ராஜீவ் ஃபௌண்டேஷன்', காச நோய் சிகிச்சைக்கான உபகரணங்கள் அனைத்தும் கொண்ட வேன் ஒன்றை 'டில்லி செஷைர் ஹோம்' என்ற அனாதை விடுதிக்கு அன்பளிப்பாக அளித்தது. இந்த ஹோமில், காசநோய் தாக்கிய குழந்தைகள், மனநிலை குன்றிய குழந்தைகள், உடல் ஊனம் உள்ளவர் என்று எல்லா வகைக் குழந்தைகளையும் சந்தித்து, ஒரு மணி நேரத்திற்கு மேலாக அவர்களோடு உரையாடி, அவர்களுக்கு ஊக்கமூட்டியிருக்கிறார். இதற்கு முன்னர் ஒருமுறை இவரோடு வந்த பிரியங்கா, இவர்களுக்கென பிரத்தியேகமாக நாட்டியமாடி, மகிழ்வித்தார். 'செஷைர் ஹோமில்' வேலை செய்யும் அனேக பெண் வாலன்டியர்களும், இங்குள்ள குழந்தைகளும் சேர்ந்து, ஒற்றுமையும் கருணையும் உலகில் பெருக வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிடும் கோஷ்டி கானம் ஒன்றைப் பாடிய போது, நெகிழ்ந்து போனார் சோனியா!

●● ஹஸ்தினாபுரத்திலுள்ள மான்கள் சரணாலயத்தில் நுழைந்து மூன்று மான்களையும் 15 முயல்களையும் கட்டுத் தள்ளிய ஓர் இளம் கும்பலைப் போலீஸார் பிடித்தனர். இந்தக் கும்பலில் இருந்த ஆறு இளைஞர்களை வைத்துக் கொண்டு, இளம்பெண்களை விட்டு விட்டனர் போலீஸார். ஆனால் இந்த இளம்பெண்கள், அரசியல்வாதிகளை அணுகி, அந்த இளைஞர்களையும் விடுவித்ததுடன் அவர்கள் மீது வழக்கு எதுவும் வராமலும் கவனித்துக் கொண்டனர்! இந்த அக்கிரமத்தை எதிர்த்து World Wide Fund for Nature (India) என்ற நிறுவனம் வனவிலங்குகளைக் காக்க வேண்டிய டைரக்டரும், துணை டைரக்டருமே இந்த அநீதிக்கு உடந்தை என்று சுட்டிக்காட்டி, டில்லி உயர்நீதி மன்றத்தில் வழக்கும் போட்டிருக்கிறது.

●● உச்ச நீதிமன்றத் தீர்ப்புப்படி யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் இனி விழியற்றோரும் ஐ.ஏ.எஸ். எழுத வசதிகள் செய்து தர வேண்டும்! கேள்வித்தாள்கள் 'பிரெயில்' முறையில் தயாரிக்கப்பட வேண்டும்; இல்லையெனில் உடன் ஒருவர் இருந்து தேர்வுகள் எழுத உதவ வேண்டும்! நேஷனல் ஃபெடரேஷன் ஆஃப் த ப்ளைண்ட், யு.பி.எஸ்.ஸிக்கு எதிராகத் தொடுத்த வழக்கில், முற்றிலும் பார்வையற்ற ருக்சாவின் வாதத்தில் மயங்கிய உச்சநீதிமன்றம், 'இவர் இவ்வளவு அழகாக வாதிட்டால், இவரையொத்தவர் ஐ.ஏ.எஸ். ஆபீஸராகவும் ஆகலாம் எனத் தீர்ப்பு வழங்கியது!

●● தரியாகஞ்சிலுள்ள பிரான்சிஸ் பெண்கள் உயர்நிலைப் பள்ளி, பல மாடிக் கட்டடங்கள் கட்டும் ஒரு நிர்வாகத்துக்கு விற்கப்பட்டது! இப் பள்ளியை இடித்து, இங்கு ஒரு 'ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்' கட்டுவதாகத் திட்டம்! "இந்தியாவில் கல்விக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவத்துக்கு இது மற்றுமொரு எடுத்துக்காட்டு. பணம் பண்ணுவது ஒன்றே வாழ்வின் குறிக்கோள் என்ற சித்தாந்தத்தை முறியடிப்போம்" எனக் கிளம்பியிருக்கின்றன எதிர்க்கட்சிகள்! பிரச்னையை நாடாளுமன்றத்தில் எழுப்புவோம் என்றும் கூறுகின்றன. இதற்கிடையே விற்கக் கொடுத்த டாக்குமெண்ட்களே போலி என்றும் தெரியவந்துள்ளது.

– ராஜீவி நரசிம்மன்

## ஹே! ஹே! கோவிந்த்!

**கர்நாடக முதல்வர் மொய்லிக்குப் பெரிய தலைவலி, வீட்டுநலத் துறை மந்திரி கோபிநாத் சான்ட்ரா!**

**கோ**பிநாத் சான்ட்ரா - இவர் மீது நிறைய வழக்குகள் இருக்கின்றன என்றும் இவரை மந்திரியாக நியமித்ததே தவறு என்றும் எதிர்க்கட்சிகள் சொல்ல, ''பொறாமையால் சொல்கிறீர்கள்'' என்று பதிலளித்தார் சான்ட்ரா. இந்த பதில் பத்திரிகைகளில் அச்சாகி வருவதற்குள்ளாகவே, கொலை வழக்கு ஒன்றில் சம்பந்தப்பட்டவர்கள் தப்பிக்கப் பயன்படுத்திய கார் அமைச்சருடையது என்ற புது வழக்கு ஒன்று வந்தது. அதற்கடுத்து அமைச்சருடைய மருமகள் தன் கணவர் மீது விவாகரத்துக்காகத் தொடுத்த வழக்கில், அமைச்சரின் வீட்டில் தன்னை வரதட்சணை கேட்டுக் கொடுமைப் படுத்தினார்கள் என்பதாகவும் இருக்கிறது.

அமைச்சரைப் பற்றி விமர்சித்து சட்டசபையில் பேசிய எதிர்க்கட்சிக்காரர்களுக்கு டெலிபோன் மிரட்டல்கள். இத்தனையும் சேர்ந்து கொள்ள ''அமைச்சர் ராஜினாமா செய்தே ஆக வேண்டும்'' என்று ஒற்றைக்காலில் நிற்கிறது எதிர்க்கட்சி. ''சான்ட்ராவை நீக்கியே ஆக வேண்டும்'' - என்று பங்காரப்பா மந்திரி சபையில் இருந்த ஐந்து மந்திரிகள் உட்பட, கணிசமான காங்கிரஸ் எம்.எல். ஏக்களும் ஒருநாள் உண்ணாவிரதமே இருந்தனர். நரசிம்மராவிடம் விஷயத்தைக் கொண்டு போக முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

சான்ட்ரா என்ன சொல்லுகிறார்? ''நான் மொய்லிக்கு வேண்டியவன் என்பதால் பங்காரப்பா ஆட்கள் எனக்கெதிராகச் சதி செய்கிறார்கள். நான் ஜனதா தளத் தலைவர் பொம்மையைத் தோற்கடித்தவன் என்பதற்காக எதிர்க்கட்சிக்காரர்கள் என்னைப் பழிவாங்க நினைக்கிறார்கள்!''



❋ கோபிநாத் சான்ட்ரா : பதவி பறிபோகுமா?

●● தமிழில் ஹிட்டாகும் அத்தனை படங்களையும் கண்ணை மூடிக் கொண்டு உடனடியாய் வாங்கிக் கன்னடத்தில் ரீமேக் பண்ணிக் கொண்டிருந்தார்கள் கன்னடத் தயாரிப்பாளர்கள். இதன் மூலம் தமிழ்ப் படத் தயாரிப்பாளர்களுக்கு ஒரு நிச்சயமான வருமானம் இருந்தது. இப்போது இந்த வருமானம் கேள்விக்குறியாகியிருக்கிறது. ஏனெனில் இவ்வளவு நாட்களும் கர்நாடகத்தில் தயாரிக்கப்படும் எல்லாக் கன்னடப் படங்களுக்கும் நான்கு லட்சம் ரூபாய் உதவித் தொகை கொடுக்கப்பட்டு வந்தது. இனிமேல் ஒரிஜினல் கன்னடப் படங்களுக்கு மட்டும்தான் உதவித் தொகை என்றும் எந்த ரீமேக் படங்களுக்கும் கிடையாது என்றும் அறிவித்திருக்கிறார் முதல்வர் மொய்லி.

●● 'நீ வா னா' என்ற ஒரு சாக்லேட், பள்ளிப் பிள்ளைகளைக் குறிபார்த்து விற்பனைக்கு விடப்பட.... தயாரிப்பாளர்கள் எதிர்பார்த்தது போலவே பள்ளிப் பிள்ளைகள் மத்தியில் விற்பனை பிய்த்துக் கொண்டு போனது. ஒவ்வொரு சாக்லேட்டிலும் ஒரு இந்தி நட்சத்திரத்தின் படம். கூடவே ஒரு லக்கி டிப். பரிசு விழுந்தால் பென்சில் பாக்ஸ், ஜியாமெட்ரி பாக்ஸ் என்பது போல் பரிசுப் பொருட்கள் என்று விளம்பரப் படுத்தப்படவும் போட்டி போட்டுக் கொண்டு இந்த சாக்லெட்டுகளை வாங்கினர் குழந்தைகள். இதற்காகவே காசு திருடுவது, புத்தகங்களை விற்பது என்ற அளவுக்குப் போக... பிஞ்சு மனங்களில் சூதாட்ட மனப்பான்மையை வளர்க்கும் இந்த சாக்லேட்டுக்கு உடனடியாய்த் தடை விதித்து விட்டது அரசாங்கம்.

– பெர்னாண்டஸ்

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.
? 'கருணாநிதி முதல்வராக வருவதைப் பெண்கள் விரும்பவில்லை' என்று அரங்க நாயகம் கூறுகிறாரே?
! அதாவது, 'ஜெ' விரும்பவில்லையே தவிர, தமக்கொன்றும் ஆட்சேபணை இல்லை என்று ஜாடையாகச் சொல்லி வைக்கிறார் போலும்! ரொம்ப முன்ஜாக்கிரதை தான்!

● எம். செல்லையா, சாத்தூர்.



? 'இந்தியாவின் தற்போதைய போலி மதச் சார்பின்மையே மத வேறுபாடுகளுக்குக் காரணம்' என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறியுள்ளாரே?
! இது பி.ஜே.பி. தயாரிப்பில் உருவான நர்ஸரி ரைம்தான். 'ஜெ'யின் சமீபத்திய டில்லிக்கு முன்பு இப்படி டப்பிங் குரல் கொடுத்திருப்பார். இனி காலட்டை மாற்ற வேண்டியதுதான்!

● த. செல்லப்பாண்டி, சென்னை - 30.
? 'காங்கிரஸுடன் கூட்டணிக்கு தி.மு.க. முன்வந்தால் பரிசீலனை செய்வோம்' என்று வாழப்பாடி குறிப்பிட்டிருக்கிறாரே?
! முதுகுச் சவாரி மோகம் அவ்வளவு சீக்கிரம் மாறி விடுமா என்ன? இன்னும் நாலு தரம் விழுந்து எழுந்தால்தான் உண்டு போலும்!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன்கோட்டை.
? 'இருவோடு கொடுப்பவர்கள் டில்லியில் தான் இருக்கிறார்கள்' என்று அமைச்சர் செங்கோட்டையன் கூறியுள்ளாரே?
! காஷாயம் கொடுக்க இவர்கள் இருக்கிறார்களே! ஆக மொத்தம் நமக்கென்ன கவலை? சங்கரா, சிவ சங்கரா!

● வி. பரமசிவம், மதுரை.
? வாரியத் தலைவர்களாக எம்.எல்.ஏக்கள் நியமனம் செய்யப்படலாம் என்ற சட்டத் திருத்த மசோதாவுக்கு இவ்வளவு அவசர அவசியம் என்ன?
! கூடுதல் வருமானத்துக்கு வழி தேடத் தான்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.
? மெமோன் சகோதரர்கள் நடத்திய விழாக்களில் ஜாக்கி ஷ்ராஃப், அசாருதீன் போன்ற வி.ஐ.பிக்கள் கலந்து கொண்டது குறித்து...?
! இரட்டை வேடத்தில் ஒரு வேடத்தை மட்டுமே இவர்கள் கண்டறிந்திருக்கலாம். என்றாலும் யாரை நண்பர்களாகப் பெறுகிறோம் என்பதில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்ற படிப்பினையையும் இது போன்ற சம்பவங்கள் வழங்குகின்றன.

● ஆர். ஸ்ரீதரன், குடந்தை.
? குண்டு வெடிப்புக்குக் காரணம் முஸ்லிம் பயங்கரவாதம்தான் என்று கூறும் கல்கி தலையங்கம், அந்தத் தீவிரவாதிகளின் செயலைக் கண்டிக்காதது ஏன்?
! ஆயிரம் முறை கண்டிக்கிறோம்! 'வன்முறை, பழிவாங்கல் நடவடிக்கை இவற்றால் மேன்மேலும் நாட்டுக்குக் கஷ்ட நஷ்டங்கள்தான் ஏற்படும் - அதனால் விட்டொழியுங்கள்; அன்பு மார்க்கத்தைக் கடைப்பிடியுங்கள்' என்று நாம் கூறுவது இருதரப்புக்கும்தான். அதே சமயம் யதார்த்த நிலையையும் தலையங்கம் கட்டிக்காட்டுகிறது. யாராவது ஒரு தரப்பினர் முஷ்டியைப் பிரித்து நேசக் கரமாக மாற்றி நீட்ட வேண்டாமா? அதனை அத்வானி செய்து நாட்டு மக்களின் மதிப்பிலே உயர வேண்டும் என்று விரும்புகிறது, தலையங்கம்.

● என். முருகேசன், பெருஞ்சேரி.
? சினிமா தோன்றி நூறு ஆண்டுகள் ஆகப் போகிறதாமே? இது பற்றி...?

● டி. சுரேஷ் குமார், பொள்ளாச்சி.
? 'தமிழ்நாட்டில் வேலைகள் உள்ளன. தகுதி வாய்ந்தவர்கள்தான் இல்லை' என அரங்கநாயகம் கூறியிருப்பது பற்றி...?

# தமிழக அரசு

! மற்றது எப்படியோ, அரசியல் களத்தில் அது முற்றிலும் உண்மையாகத்தான் தெரிகிறது.

● எம். கே. பாஷா, உத்தமபாளையம்.

*? தமிழக அரசு கலைக்கப்படுமா?*

! 'அதான் சு. சுவாமியின் மனுவை ஒரு வழியாக ஆளுனர் சேஷனுக்கு அனுப்பி விட்டாரே இனி நாட்களை எண்ண வேண்டியதுதான்' என்ற பயம் ஜெக்கும் வந்து விட, 'ஆளுனர் அனுப்பிய சு. சுவாமியின் மனு மீது தேர்தல் கமிஷன் எந்த நடவடிக்கையும் எடுக்கக் கூடாது' என்று தடை உத்தரவு கோரி, 'ஜெ' நீதிமன்றம் போய் விட்டார்! ஆக மொத்தம் அங்கும் இழுபறிதான்.



● சங்கரா, சங்கரா!

● தி.மு.க. கூட்டணி?

! டெக்னிகலாக சினிமா இன்று முன்னேறியிருக்கிற அளவுக்குக் கலை, கருத்து ரீதியாக ஒரு வளர்ச்சி காணோம். (உலகளாவிய அளவில் கூட) கலாசார சீரழிவுக்கு எடிசன் கண்டுபிடித்த இந்த மகத்தான மீடியா எந்த அளவுக்குத் துணை போயிருக்கிறது என்று இவ்வேளையில் சிந்திக்கலாம்.

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
என். முருகேஷ்,
1-19, வடக்கு வீதி,
பெருஞ்சேரி,
மங்கைநல்லூர் (அஞ்சல்)

மத்திய அரசின் 356 பிரயோகம் அடுத்து வரக் கூடிய தேர்தலில் காங்கிரஸுக்கு பாதகமாகவே முடியும். மேலும் நாடாளுமன்றத்தில் பலவீனமான ஆளும் கட்சிக்கு அ.தி.மு.க.வின் ஆதரவைப் பெறவே இன்னமும் பிரதமர் முயற்சி செய்து வருவது தெளிவு.

● கி. இரமேஸ்பாபு, சேலம்.

*? காங்கிரஸை "எக்ஸ்ட்ரா லக்கேஜ்" என்று முதல்வர் குறிப்பிட்டுள்ளாரே?*

! தமிழிலே 'முதுகுச் சவாரி' என்று பொதுவாகப் பேசப்பட்டு வந்ததுதான் ஆங்கிலத்தில் 'எக்ஸ்ட்ரா லக்கேஜ்' ஆகியுள்ளது.

● சு. கந்தையா, தக்கலை.

*? கோவை தி.மு.க. மாநாட்டுப் பந்தல் தீப்பற்றி எரிந்தது குறித்து...?*

! 'அச்சமயம் மின் இணைப்பு துண்டிக்கப்பட்டிருந்தது' என்று மின்வாரியம் கூற, ஒரு பி. ஜே. பி. அனுதாபியும் போலீஸால் கைது செய்யப்பட்டிருக்க, "ஷார்ட் சர்க்யூட்" என்றும் "பசை இளநிலையார்கள்" என்றும் அமைச்சர்கள் அலட்டுவது அசிங்கம். குற்றம் ஏதும் நடந்திருக்கிறதா என்று கண்டுபிடிக்கத்தக்க நடவடிக்கை எடுக்க வேண்டியது அரசின் கடமை.

● ஆர். அருணாசலம், திருவண்ணாமலை.

*? மும்முனைப் போட்டிகளில் பழனி, இராணிப்பேட்டை தொகுதிகளில் யாருக்கு வெற்றி வாய்ப்பு உள்ளது?*

! தேர்தல் நெருக்கத்தில் அரசாங்க ரீதியான திட்டங்களை ராணிப்பேட்டையில் 'ஜெ' அறிவித்திருப்பதையும் அமுல்படுத்த முற்பட்டிருப்பதையும் பார்த்தால், அ.தி.மு.க.வின் வெற்றி வாய்ப்பில் அவருக்கே சந்தேகம் இருக்கும் போல் தெரிகிறது!

● கே. கணேஷ், சென்னை.

*? "இன்னும் ஏழு ஆண்டுகளில் (2000) எல்லோருக்கும் வேலை" என்ற காங்கிரஸ் மாநாட்டுத் தீர்மானம் குறித்து...?*

! சுயநலத்தைக் கைவிட்டு, ஆளும் கட்சி, எதிர்க்கட்சித் தலைவர்கள் நாட்டு நலனில் கருத்துக் கொண்டு நெருங்கி வந்து ஒத்துழைத்தால் நிச்சயம் சாதிக்கலாம். அப்படியல்லாத முட்டுக் கட்டை அரசியலில் 70 ஆண்டுகள் ஆனாலும் சாதிக்க முடியாது!

● வெ. சாந்தா, மன்னை.

*? நீதிமன்ற நீதிபதிகள் தர்மத்துக்கு எப்போது தலைவணங்குவார்கள்?*

! ஹெக்டே என்றும் பாராமல், பவார் என்றும் கருதாமல், பிரதமர் என்றும் அஞ்சாமல் அவர்கள் வழங்கி வரும் தீர்ப்புகள் இப்போதே அவர்கள் தர்மத்துக்குத் தலை வணங்கி நடப்பதாகத்தானே உணர்த்துகின்றன!

# கலைக்கப்படுமா?



● நீதிமன்றம் போனார்

வட்டமேஜை

# அலசலா? ஆதரவா?

◆ 'அந்வானி அப்பன் குதிருக்குள் இல்லை' ஆசிரிய உரை (தலையங்கம்) அருமை! டிசம்பர் 6 - க்குப் பிறகு நாட்டில் நடக்கும் அசம்பாவிதங்களுக்குரிய காரணங்களை அடுக்கடுக்காக வேறு யாரும் இப்படிச் சொன்னதில்லை. இச் செய்திகளைக் கல்கி வாசகர்கள் அச்சடித்துப் பரப்புவது நல்லது.
சாட்டியக்குடி, அ.ப. பாலையன்.

◆ தலையங்கம், முஸ்லீம் அடிப்படைவாதிகளின் செயலை (பம்பாய் குண்டு வெடிப்பு) முழுக்க முழுக்க ஆதரிப்பது போலவும், அவர்களின் கொடூரச் செயலை நியாயப் படுத்துவது போலவும் அமைந்துள்ளது.
சாத்தூர், இரா. பிரபு ஆனந்த்.

◆ சமீபத்திய குண்டு வெடிப்புகள் பற்றி மிகவும் விரிவாக அலசியிருந்தீர்கள். 'வெற்றிக்கு ஒரே வழிதான் உண்டு. அன்பு வழிதான் அது!' என்ற தலையங்க வரிகள் நிச்சயம் பின்பற்ற வேண்டிய ஒன்று!
மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ மசூதி இடிப்பு கண்டிக்கப்பட வேண்டியது தான். மசூதியை இடித்ததினால்தான் பம்பாய் வெடிகுண்டு நிகழ்ச்சி என்று தாங்கள் கூறுவதை ஒப்புக் கொள்ள முடியாது. ''முஸ்லீம்களுக்கு தீங்கிழைக்கப்பட்டால் முஸ்லீம் தீவிரவாதிகள் பழி வாங்குவார்கள். அவர்கள் சும்மா இருக்கமாட்டார்கள்...'' என்று தாங்கள் எழுதியிருப்பது அவர்களுக்கு மறைமுகமாக உற்சாகத்தையும், ஆதரவையும் கொடுக்கும்!
சென்னை - 17, அசோக்குமார்.

**பரிசுக் கடிதம்!**

◆ 'முகத்தை மாற்ற ஒரு ஆபரேஷன்' படித்தேன். டாக்டர் குணசீலன் என்ன பெரிசாகச் சாதித்து விட்டார்? மலிவு விலை மது ஒழிப்பு - பார்கள் திறப்பு - மீண்டும் ஒழிப்பு, பிரிவினைப் பேச்சு - மாநில சுயாட்சி - 'தேச ஒற்றுமைக்காக'ப் புதிய கூட்டணி. இப்படி நிமிஷத்திற்கு நூறு ரெடிமேட் முகங்களை மாட்டிக் கொள்ளும் நமது உன்னத அரசியல்வாதிகளின் ஆபரேஷனே இல்லா முகமாற்றங்களுக்கு முன்னால் டாக்டர் குணசீலன் 'O'!
கீழ்நத்தம், முக.இ.சு. பாலசுப்ரமணியன்.

◆ ஆன்டெனாவில் உட்கார்ந்திருக்கும் காகங்கள் செய்திருந்த இந்த வார டி.வி. விமர்சனத்தைப் படித்தேன். ஆக மொத்தத்தில், நமது தொலைக்காட்சி நிகழ்ச்சிகளெல்லாம் மனிதர்கள் பார்க்க லாயக்கற்றவை என்பதை நாசூக்காக எடுத்துச் சொல்லி விட்டீர்கள். பாராட்டுகள்.
சிறுமுகை, ஜி. கதிரேசன்.

◆ ''மறக்க வேண்டிய நேரத்தில்....'' மறக்க முடியாத அற்புதமான சிறுகதை. எப்போதோ சந்தித்த ஒருவரை மீண்டும் சந்திக்க நேரும் போது அவர் எந்த மாதிரியான சூழ்நிலையில் இருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளாமல், பழைய நினைவுகளுடனேயே பேசுவது எவ்வளவு அபத்தம் என்பதைச் சுவாரஸ்யத்துடன் சொல்லியிருந்தார் ஆசிரியர்.
அரூர், மு. மதிவாணன்.

◆ புதிய கூட்டணி பற்றிய கட்டுரை, நல்லதொரு அலசல்.
காரைக்குடி, வி. மகேஸ்வரன்.

◆ ''கோவிந்தாச்சாரியாவின் பேட்டி உண்மையில் பேட்டியே அல்ல; உமது நிருபருக்கும் அவருக்கும் நடைபெற்ற அரசியலைப் பற்றிய காரசாரமான வாக்குவாதம் என்றுதான் சொல்வேன்.
தக்கோலம், அ. முஸ்தபா.

◆ மனிதர்கள் மட்டும்தான் பந்தமில்லை. செடிகளும்தான் பந்தம் என்பதை உணர்ச்சிகரமாகச் சொல்லி விட்டார் 'ராஜகுமாரன்'.
திருச்சி - 17, தென்னூர் எம். யாதவன்.

◆ 'அக்னிக் குஞ்சு' துணுக்கு கண்டு ஏனோ என்னையறியாமலேயே என் மனம் கனத்தது. தாயன்புக்கு மிகச் சிறந்த உதாரணம்.
மருங்கூர், பாலு. கிருஷ்ணமூர்த்தி.

◆ ஜப்பான் நாட்டு உணவு விடுதிகளில் எஞ்சிய உணவுப் பொருள்களை வீணாக்குவதில்லை; கோழித் தீவனம் செய்கிறார்கள் என்பதைப் பார்க்கிற நேரத்தில் நமது நாட்டில் கல்யாண விருந்தில் வீணாகும் உணவை நினைத் துக் கண்கலங்க வேண்டியுள்ளது. இனி மேலாவது வீணாக்காமல் பிரயோஜனமான வழிகளைப் பின்பற்றுவார்களா?
சென்னை - 101, நா. பாலசுப்பிரமணியன்.

◆ நகைச்சுவை ததும்பும் ''கேபிள் கலங்கள்'' அற்புதம். ஆயிரக்கணக்கான குடும்பங்களின் பிரத்யட்ச நிலையை 'ஸ்கேன்' செய்து காட்டிவிட்டது.
கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# உலகிலேயே
# மதசார்பற்ற அரசு பாரதத்தில் தான் நடத்த முடியும்



அரசு அறநிலைய பாதுகாப்பு மூலம் ஆன்மீகம் வளர்க்க வேண்டாம். ஆனால் அறநிலைய பாதுகாப்பு மூலம் லட்சக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க ஏற்பாடு செய்யலாம்.

**வேலை வாய்ப்புகள்**

1. ஒருவர் பிறந்த நட்சத்திரத்திற்கு தேவாலயத்திற்கு சென்று அஷ்ட்டோத்திரம் அல்லது சகஸ்ர நாமம் அர்ச்சனை செய்வது மூலம் இன்னும் ஆயிரக்கணக்கான அர்ச்சகர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்த முடியும்.
2. 12 பேர் வைத்து மகன்யாசம் தினசரி நடக்க செய்வதின் மூலம் மேலும் பல பேருக்கு வேலை கொடுக்க முடியும்.
3. 121 பேர் வைத்து அதிருத்திரம் தினசரி நடக்க ஏற்பாடு செய்வதின் மூலம் பல பேருக்கு வேலை கொடுக்க முடியும்.
4. எல்லா தேவாலயங்களிலும் மங்கள வாத்தியம் ஏற்படுத்துதல்.
5. எல்லா தேவாலயங்களிலும் மேலும் ஓதுவார்களை ஏற்படுத்துதல்.
6. எல்லா தேவாலயங்களிலும் மலர் கொடுக்க ஆட்களை நியமித்தல்
7. எல்லா தேவாலயங்களிலும் கும்பாபிஷேகம் நடக்க ஏற்பாடு செய்வதால் அதிக ஆட்களுக்கு வேலை கொடுக்க முடியும்.
8. திருமணங்களை புரோகிதர் வைத்து நடத்துதல்.
9. சிரார்த்தம் கொடுப்பதின் முக்கியத்தை தெரியப்படுத்தி வேலை வாய்ப்பு ஏற்படுத்துதல்

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka